தாய் வீடு
THAIVEEDU உள்ளும் புறமும் ஏப்பிரல் 2008



# அதிர்ச்சியான கண்டுபிடிப்பு!

# புகைத்தலுக்கும் மரபணுவுக்கும் தொடர்பு உள்ளது

அமெரிக்க விஞ்ஞானிகள், மரபணுக் கூறுகளை ஆராய்ந்து எதிர்காலத்தில் பலர் புகைபிடிக்கவும், சுவாசப் புற்றுநோய் மூலம் பாதிக்கப்படவும் மிகையான வாய்ப்புள்ளதாகக் கண்டு பிடித்துள்ளார்கள். ஆனால் இக் கண்டுபிடிப்பானது, புகைபிடிப்பதைத் துறக்க விளையும் மனிதர்களுக்கு விசேஷமான வைத்தியத்தை அளிப்பதன் மூலமும், மற்றும் பல சிகிச்சைக் கண்டுபிடிப்புக்களின் மூலமும் உதவ முடியும்.

எம்.டி. ஆண்டர்ஸன் புற்றுநோய் ஆராய்ச்சி நிலையப் பேராசிரியர் கிறிஸ்தோபர் ஏமஸ், இம் மரபணு நிலையானது, ஒரு மனிதனின் புகைபிடித்தலை இன்னும் புகைபிடித்தலின் மேல் விருப்பத்தை ஏற்படுத்தும் என்பதோடு அதை நிறுத்துவது மிகவும் கஷ்டம் என்று கூறுகிறார்.

புகைபிடிக்கும் ஒருவர், பெற்றோரின் மரபணுக்களில், இவ்விதம் இருவரும் புகை பிடித்திருந்திருப்பவர்களாயின், அவருக்கு 80 வீதம் சுவாசப்புற்றுநோய் வரும் அபாயம். பெற்றோர் புகையே பிடிக்காமல், அவரின் வாரிசு புகைபிடிக்கும் இடத்து, அந்த வாரிசுக்கு புற்றுநோய் வரக்கூடிய சாத்தியக்கூறுகளை விட அதிகம் என்கின்றார்கள். மரபணு பிரச்சனை உள்ளவர் மேலும் கூடுதலாக இரண்டு சிகரெட்களை பிடிப்பார் என்பதோடு, அவருக்கு இப்பழக்கத்தைக் கைவிடுவது மற்றையவரை விட மிகவும் கஷ்டமாக இருக்கும்.

3ம் பக்கம் பார்க்க...



கனடாத் தமிழர்கள் கனேடிய பிராதான சூழலுக்குள் தமது காலடியை எடுத்து வைக்கத் தொடங்கிவிட்டனர் என்பது தெரிந்ததே. அதன் வழியில் இன்னொரு முயற்சியாக TFM (Total Fashion Magazine) வெளிவந்துள்ளது. கனனேடிய Fashion Magazineஆன இது ஆங்கிலத்தில் வண்ணப் பக்கங்களுடன் கடந்த மாதம் வெளிவந்துள்ளது.

தாய் வீடு
THAIVEEDU உள்ளும் புறமும்

## இது கனடாவின் வசந்தகாலம்.

கனடிய மக்கள் குளிராடைகளுக்குள் இருந்து விடுபடுகின்ற காலம்.

தளிர்கள் பூக்கள் என இயற்கை தன் பேரழகை அள்ளி வழங்கத் தொடங்குகின்ற காலம்.

இவ் வேளை விமர்சனங்களுக்கு உரியது என்றாலும், ஆறுதல் தரக்கூடியவகையில் வெளியாகியிருக்கின்றது ஒன்ராரியோவின் வரவு செலவுத் திட்டம். இத் திட்டத்தினை பல்வேறு ஆய்வாளர்கள் பல மட்டங்களில் ஆராயத் தொடங்கியிருக்கின்றனர்.

9600 கோடி டொலரை உள்ளடக்கிய இவ் வரவு செலவுத் திட்டத்தில் ஏறக்குறைய அரைப் பங்கு சுகாதார சேவைகளுக்குப் பயன்படப்போகின்றது என்பது எதிர்பார்க்கப் பட்டதுதான் என்றாலும், இது ஒன்றாரியோவின் சுகாதார சேவையின் முக்கியத்துவத்தை உணர்த்தி நிற்கின்றது. கனடாவைக் குடிவரவாளர்கள் விரும்புவதற்கான முக்கியமான காரணங்களில் ஒன்று, கனடாவின் சுகாதார சேவை. மைக் கரிஸ் அரசின் நிதிவெட்டின் மூலம் நொந்துபோயிருந்த இச் சேவையின் குறைகள் நிவர்த்தி செய்யப்பட வேண்டியவை. இச் சேவையின் ஊடாக மக்கள் மனங்களில் இடம் பிடித்து விடலாம் என்ற அரசுகளின் நினைப்பிலும் தவறு இல்லை. இச் செலவீனத்தின் நிறைவைப் பெறுவதன் மூலம் மக்கள் அப் பயன்களை அடையாளப்படுத்துவார்களா? நிதி ஒதுக்கப்படுவது என்பதை விடவும், சேவைகள் மக்களைச் சென்றடைகின்றதா என்பதிலும் கண்காணிப்புத் தேவை.

இந்த வரவு செலவுத்திட்டத்தில்  மற்றுமொரு சிறப்பு வினைத் திறன் மேம்பாட்டுக்கான நிதி ஒதுக்கீடு. இது ஒரு புதிய செலவீனம். மக்களின் 'வேலை இழப்பு' என்பது பழக்கப் பட்ட ஒரு தொடர் அவலம். இந்த அவலத்தைக் குறைக்க முயலும் ஒரு முயற்சி இத் திட்டம். ஒவ்வொருவருக்குமான தனித்த ஆற்றலை மேம்படுத்தி அதனூடாக சுய தொழில் ஆளுமையை வளர்ப்பது இதன் நோக்கம். இதற்காக 150 கோடி டொலரை அரசு ஒதுக்கியுள்ளது. அடுத்த ஆண்டில் வெளியாகும் புள்ளிவிபரங்கள்தான் இதன் பலாபலன்களை எமக்கு உணர்த்தும்.

கனடிய மக்கள் பற்றிய ஒரு புள்ளிவிபரம் கடந்த வாரம் வெளியாகியிருந்தது. அது சிறுபான்மை இனத்தவரது எண்ணிக்கை அதிகரத்துள்ளமையைத் தலைப்புச் செய்தி யாகக் கொண்டிருந்தது.

குடிவரவாளர்களின் தேவை அதிகரித்துள்ளமையைக் கடந்த ஆண்டே கனடிய அரசு ஓப்புக்கொண்டிருந்தது. அகதி நிலை என்பதைத் தவிர ஏனைய வடிவங்களில் குடிவர வாளர்களை உள்வாங்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

இந்நிலையில் வெளியாகியிருக்கும் இந்த அறிக்கை வியப்போடு நோக்குவதற்குரியதல்ல. அடுத்து வரும் காலங்களில் இது மேலும் உயரத்தான் போகின்றது. இப்போது அறுவருக்கு ஒருவர் சிறுபான்மை இனத்தவராகக் காணப்படுகின்றார். அதாவது மொத்தச் சனத்தொகையில் 16.2 வீதத்தினர் சிறுபான்மை இனத்தவர். 2001 கணக்கெடுப்பில் இது 13.4 வீதமாகக் காணப்பட்டது. இந்த சிறுபான்மை இனத்தவருக்குள் தெற்காசியரே அதிகமாகக் காணப்படுகின்றனர். அதாவது சிறுபான்மை இனத்தவர்களுக்குள் 24.9 வீதத்தினர் தெற்காசியர். இந்தியர், பாகிஸ்தானியர், இலங்கையர் ஆகியோர் இதற்குள் அடங்குகின்றனர். கடந்த காலங்களைவிட இது அதிகம் எனக் கூறப்படுகின்றது.

நாமும் சிறுபான்மையினத்தவர் என்ற வகையில் மகிழ்ச்சி கொள்ள வேண்டியதுதான். எது எப்படியோ... இனவாதிகளுக்கு இச் செய்தி மகிழ்ச்சி தரப்போவதில்லை.

■ ■ ■



# அதிர்ச்சியான கண்டு...

1ம் பக்கத் தொடர்ச்சி...

இவ்வாராய்ச்சியை கனடா, ஐரோப்பிய நாடுகள், அமெரிக்கா போன்ற நாடுகளில், 35000 பேர்களில் நடாத்தியிருந்தும், சில முடிவுகளுக்கு அவர்களால் தீர்மானமாய் அனுமானிக்க முடியவில்லை.

புகையால் வரும் தீமைகளை நம் அணுக் களில் இருந்து ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டால், ஏன் 90 வயதான ஒருவருக்கு மட்டும் புற்றுநோய் வருவதில்லை என்பதை யும், ஒருமுறை சிகரெட்டை ருசித்தவர் ஏன் அதற்கு அடிமையாவதில்லை என்ற கேள்வி களுக்கும் விடை கிடைக்கும். தொடர்ச்சி யான புகைபிடித்தலின் மர்மமும் இதன் மூலம் வெளிவரலாம்.

வோஷிங்டன் பல்கலைக்கழக மனோதத் துவப் பேராசிரியர், டாக்டர். லோரா பிரு இவ்வாராய்ச்சியில் கலந்து கொள்ளாவி டினும், அவர் கூற்றும், ஒருவர் எவ்வளவுக் கெவ்வளவு புகை பிடிக்கின்றார் என்பது அவரது உடற்கூறு சம்பந்தப்பட்ட நிகழ்வே என்று ஆமோதிக்கின்றார்.

இந்தப் புதிய ஆராய்ச்சிகளில் இம்மரபணுக் களில் இன்பம் பெற விளைவதோ, அன்றி ஒரு பழக்கத்துக்கு அடிமையாவதோ பதிவு செய்யப்படாத தன்மையைத்தான் காணக்கூடியதாக உள்ளது. எனவே புகைபிடித்தலை அறவே கைவிடுவதும், அல்லது மேலும் பழக்கப்படுத்திக் கொள்வதும், அவ ரவர் மரபணுவைப் பொறுத்தது என்கின் றார், இவ்வாராய்ச்சிக்கு பணவுதவி செய்த National Institute of Drug Abuse நிர்வாகி, டாக்டர். நோரா வோல்கோ.

மிகவும் நீளமான, எண்ணிக்கையில் நிற்கும் மரபணுவானது, சிதிலமடையும் போது, மனிதருள் மனவுளைச்சலையும், ஆவலையும் தூண்டுகின்றது. இவ்வாறு நடக்கும் போது மனதில் ஏற்படும் மாற்றங்களின் தன்மையாலேயே பலர் புகைபிடிக்கின்றார் கள். சிலருக்கு புகைபிடிப்பது ஒரு நாகரி கம் போல் தென்படும். மற்றவர்கள் அதை யே செய்வது இம்மாதிரியான மனவுளைச் சலைக் குறைக்கவே என்று மேலும் விவரிக்கின்றார் வோல்கோ. எனவே மனவுளைச்சலைக் கட்டுப்படுத்த பயன்படுத்தும் மருந்துகளை இம்மாதிரி புகைபிடிப்போருக் கும் சமயத்தில் கொடுப்பதன் மூலம் அவர்களை இப்பழக்கத்திலிருந்து மீளச் செய்யலாம்.

புகைபிடிக்கும் பழக்கம் ஏன் ஒருவரில் வந்தது என்பதைக் கண்டுபிடிக்க ஒரு சிறு, பரிசோதனைகளின் மூலம் அறியலாம். ஆனால் இவ்வாறான நிலையைக் கொண்ட வருக்கு ஆயுட்காப்புறுதி பெறுவது கடினம், அன்றில், அவர்கள் வேலைத்தளமே அவர் களின் ஆயுட்காப்புறுதியை ரத்துச் செய்யலாம் எனவும் அறிகின்றோம். ஆனால் இம்மாதிரி நோய்களைக் கண்டு பிடிப்பதன் மூலம் உடனடியாக மருத்துவம் மூலம் இவற்றைச் சரி செய்வதோடு, நீண்ட காலம் நல்ல ஆயுளோடு வேலை செய்யலாம். இதனால், சிலர் தாமாகவே இந்த மருத்துவப் பயிற்சிக்குத் தம்மை இணைத்துக் கொள்வதுமுண்டு. ஆனால் இப்பரிசோதனைக்குள் உட்படுத்திக் கொள்வது தனிமனிதரின் சொந்த விருப்பம். இது மிகவும் அந்தரங்கமாகப் பாதுகாக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

மரபணுக்கள் கொண்ட பெற்றோர் எவ்வளவுக்கெவ்வளவு புகைபிடிக்கின்றார்களோ, அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் குழந்தை கள் புற்றுநோயினால் பீடிக்கப்படலாம்.

■ ■ ■

Publisher & Editor : P.J. Dilipkumar
பதிப்பாளர், ஆசிரியர் : பி.ஜே. டிலிப்குமார்

ஆலோசகர் குழு : ஞானம் லம்பேட், மாமூலன், கருணா, பொன்னையா விவேகானந்தன், ரதன், சுந்தர் சின்னத்தம்பி.

தட்டச்சு : கௌரி, கௌசலா, ஜீவா, பிரியதர்சினி.

ஒப்புநோக்கல் : சாவையம்பதி சுப்ரமணியம், கௌரி.

வரைகலை ஆலோசனை : கருணா (டிஜி வரைகலை அமையம்)

தொடர்புகள் :
For More Info : Editor
P.O.Box #63581
Woodside Squarew
1571 Sandhurast Circ.
Toronto, ON. M1V 1V0

Montréal விநியோகம் : சுகுமாரன் சின்னையா
1-514-299-3186
Ottawa விநியோகம் : அலெக்ஸ் சிவசம்பு
1-613 -276-7253

Tel : 416-646-3422, 416.400.6406
Fax : 416.849.0594
Web : www.veedunews.com
E-mail : thaiveedu@gmail.com

# இத்தனைக்கும் மத்தியில் இந்தியா என்ன செய்து கொண்டிருக்கிறது.

**- அ. கணபதிப்பிள்ளை -**

இலங்கையில் போர் நீடித்துக்கொண்டிருப்பதற்கு இந்தியாவே காரணமாக இருக்கின்றது. இந்தியா எந்தவிதமான சமாதானத்தையும் ஏற்படுத்தப்போவதில்லை என்றும், இந்தியா தான் இலங்கையில் ஓர் போர்ச் சமாதானச் சூழ்நிலையை உருவாக்கி வருகின்றது. போர்ச் சமாதானம் என்பது புதுமையான வார்த்தைப் பிரயோகமாக இருக்கின்றபோதிலும் கூட அதில் போரும் சமாதானமும் உள்ளடங்கியிருக்கின்றது. அதாவது போரிடும் இரு பகுதியினரிடையேயும் சமபலத்திற்கான நிலைமைகளை ஏற்படுத்தி வருகிறது. இருபகுதியினரும் போரிடவும் சமாதானத்தை விரும்பவும் ஏதுவான சூழ்நிலைகளை உருவாக்கிக் கொண்டிருக்கின்றது என்றும்,

தென்னாசியா என்றுமே கவனயீர்ப்புப் பிரதேசமாக இருக்க வேண்டுமானால் இலங்கையில் சுமூகமற்ற சூழ்நிலை ஏற்பட்டுக்கொண்டே இருக்க வேண்டுமென்றும், இலங்கையில் ஒற்றையாட்சிக்குட்பட்ட தீர்வுத் திட்டமேயன்றி வேறு எந்தவகையிலான திட்டங்களும் ஏற்படுத்திக் கொடுக்கக் கூடாது என்றும், அப்படி ஏற்படுத்தப்படுமிடத்து அது இந்தியாவின் இறைமைக்குக் குந்தகம் விளைவிப்பதாகவே அமைந்திருக்கும் என்றும், இலங்கை என்றுமே இந்தியாவின் ஆள்புல எல்லைக்குள்ளும் அதிகார எல்லைக்குள்ளும் இருக்க வேண்டுமேயன்றி வேறு வல்லரசுகளின் பிடியினுள் அகப்பட்டு விடாதபடி கண்காணிக்க வேண்டும் என்ற கொள்கையினுள் தன்னை ஈடுபடுத்திக் கொண்டுள்ளது என்றும், இலங்கையின் பொருளாதாரக் கட்டமைப்புக்குள் தனது நலன்களைப் புகுத்துவதன் மூலம் புதிய பொருளாதார குடியேற்றவாத சிந்தகைளை இந்தியா கொண்டிருக்கின்றது என்றும் பலவாறு பேசப்பட்டு வருவதும் அவை போன்ற தோற்றப்பாடுகளின் மத்தியில் இந்தியா இயங்கி வருவதும் இந்தியா என்ன செய்து கொண்டிருக்கிறது என்ற வினாவினை கேட்கும் அளவுக்கு இலங்கையிலுள்ளவர்கள் மத்தியிலும் இந்திய தேசத்தவர் மத்தியிலும் உலக ரீதியிலும் கூடக் கேட்கும் அளவுக்கு தொடர்ந்தும் நிகழ்வுகள் இடம்பெற்ற வண்ணம் இருக்கின்றன.

இந்தியா ஒரு போர் விரும்பியா? இந்தியாவின் வல்லரசு மேலாண்மைக்குப் போர் வேண்டும் என்பது தவிர்க்கமுடியாத செயற்பாடு ஆகும் தென்னாசிய, கிழக்காசிய வல்லரசுகளான பாகிஸ்தான், சீனா, ஜப்பான் போன்றவற்றின் மத்தியில் தனது உறுதிப்பாட்டினை நிலைநிறுத்துவதற்குச் சமவலுத் தத்துவம் பேணப்பட வேண்டிய தேவை இருக்கின்றது. அணு ஆயுத உற்பத்தியிலும் அதனைத் தொடர்ந்து பேணுவதிலும், பொருளாதார வளர்ச்சியிலும் பொருளாதாரத்தை நிலைகுலையாது வைத்திருப்பதற்கும் ஒப்பந்தங்களும் பேச்சுவார்த்தைகளும் மாத்திரம் போதுமானவை அல்ல. போர்த் தொழிற்நுட்பங்களும் அவற்றைப் பயன்படுத்தும் பயிற்சிக் களங்களும் தேவைப்படுகின்றன என்பது திகிலூட்டும் விடயமல்ல. அவைபோன்றன எல்லா வல்லரசுகளுமே தமது பாதையில் நிகழ்த்தி வந்த செயற்பாடுகளாகும்.

இந்நிலையில் இந்தியா ஒரு போர் விரும்பி தான். என்ற எடுகோள் முன்வைக்கப்படலாம் ஆனால் ஏன் அது நேரடிப் போராக இல்லாமல் போனது என்ற வினா சந்தர்ப்பமின்மை என்ற விடையுடன் முடிவடைகின்றது. பாகிஸ்தான் - வங்காள தேசப்போரில் போர் நடுவராகத் தன்னை உலகுக்குக் காட்டினாலும் இந்தியா போரின் பங்காளியாகவே இருந்தது. அதனாலேதான் ஒரு புதியதேசம் உருவாக்கம் பெற்றது அதனை இந்தியாவே உடனே அங்கீகரித்தும் விட்டது. இதே போன்று இலங்கையிலும் ஒரு சிறிய நாடு உருவாகும் வாய்ப்பு இருந்தது. ஆனால் அதற்கான தேவை அன்றைய இந்தியாவுக்கு இருக்கவில்லை. பாகிஸ்தான் அல்லது அமெரிக்கா அல்லது சீனா தமது நேரடித் தலையீடுகளை ஏற்படுத்தியும் இந்தியாவை இலங்கை அனுசரித்து நடக்காததுமான ஏதாவது ஒரு நிலைமை ஏற்பட்டிருந்தால் தனி அரசு இந்தியாவின் பாதுகாப்புக்காகத் தோற்றம் பெற்றிருக்கும். இந்தியாவின் போர்ச் சூனியப் பிரதேசங்களும் காப்புப் பிரதேசங்களுமாக வங்காள தேசம், தமிழீழம், மாலைதீவு, காஸ்மீர் தனியரசு, நேபாளம் உட்பட பல நாடுகள் அமைந்திருக்கும். இவ்விதமானதோர் அகண்ட இந்தியாவுக்கான அடித்தளம் போடும் வாய்ப்பினை அன்றைய இந்தியா இழந்து விட்டிருந்தது.

> தமிழை அரச வாய்ப்புள்ள மொழியாக்குவதாலும் தமிழர்களின் தாயகத்தை தனிமைப்படுத்தி, வடக்குக் கிழக்கை இணைப்பதையும் தீர்வாகக் காட்ட முயன்ற இந்தியா, தான் சமாதானத்துக்காக இறக்கிய படையினரை வடக்குக் கிழக்கு எல்லைகள் நெடுகே நிறுத்தியிருந்ததால் இலங்கை வேற்றுமையில் ஒற்றுமை கொண்ட இரண்டாகப் பிரிக்கப்பட்ட தேசிய அரசு என்ற உண்மை இலங்கை வாழ் மக்கள் எல்லோராலும் பலமாக உணர்த்தப்பட்டிருக்கும்.

சோவியத்தின் இஸ்திரமின்மையும் அமெரிக்காவின் புதிய போர்ப் பொருளாதாரக் கொள்கையின் விரிவாக்கமும் சீனாவின் விரைவான வளர்ச்சியும் சீனாவின் வளர்ச்சிக்கெதிராக ஜப்பான் கொண்டிருந்த பய உணர்வும் இஸ்லாமிய அடிப்படைவாதக் கருத்துக்கு ஆதரவான பாகிஸ்தானின் நடவடிக்கைகளும் இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையிலும் புலனாய்வுச் செயற்பாடுகளிலும் நிதானத்தைக் கடைப்பிடிக்க வேண்டிய தேவையினை இந்திய அரசாங்கமும் அதன் புலனாய்வுத் துறையும் உணரத் தொடங்கியிருந்தன.

வல்லரசுகளுடன் போரிடுவதனைவிட ஐக்கிய நாடுகள் பாதுகாப்புச் சபைக்கும் நேட்டோ வல்லரசுகளுக்கும் ஆதரவாகச் செயற்படுவதன் மூலம் அரசியலாதிக்கத்தை தக்கவைத்துக்கொள்ளவேண்டிய தேவையும் இந்தியாவுக்கு இருந்தது. இதுவே இந்தியா ஓர் போர் விரும்பியாகச் செயற்பட முடியாத நிலைமைக்கு அதனைக் கொண்டுவந்து விட்டிருந்தது. இந்தியா வரலாற்று ரீதியில் ஒரு சமாதானப் படையினை வைத்திருக்கும் நாடு என்பதனை உலக நாடுகளின் மத்தியில் ஏற்படுத்தும் ஒரு வாய்ப்பினை இலங்கை விடயத்தில் பயன்படுத்திவிட்டிருந்தது. இதனால் இந்தியா ஒரு சமாதான விரும்பி என்பதும் அது சமாதானத்திற்கான நடவடிக்கைகளில் தன்னை ஈடுபடுத்திக்கொள்ளும் என்பதும் சமாதான நடுநிலைமையில் விருப்பம் கொண்ட நாடுகள் அறிவதற்கு ஒரு வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுத்திருந்தது. இதுவே சமாதான நடவடிக்கைகளிலும் பேச்சுவார்த்தைகளிலும் இந்தியாவையும் மறைமுகமாக ஈடுபடுத்த வேண்டும் என்ற தேவை நடுநிலைமை நாடுகளுக்கு ஏற்பட்டிருந்தது. மாறாக எம்.ஆர். நாராயண் சுவாமி தனது கட்டுரையில் நோர்வேயை முன்னிலைப்படுத்தி மேற்கொண்ட சமாதான முயற்சி .இந்தியாவின் அனுசரணையின்பேரில்தான் ஏற்படுத்தப்பட்டது என்பது வெளிப்படையாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. பிரதமர் வாஜ்பாய் பதவிக்கு வந்த 1998இன் பின்பாக சமாதானத்துக்கான உந்துதல் கொடுக்கப்பட்டது. இலங்கைப் போரில் வெல்வாரில்லை என்பதை இந்தியா குறிப்பிட விரும்பியது. இதுவே வெல்லவிருந்த ஒரு பிரிவினரை தடுத்த முயற்ச்சி என்று அக்காலத்தில் கூறப்பட்டது.

இலங்கையில் இந்திய சமாதானப்படை சமாதானத்தை ஏற்படுத்தத் தவறிவிட்டது. போரையும் செய்யமுடியாமல் சமாதானத்தையும் ஏற்படுத்த முடியாத சூழல் ஏன் ஏற்பட்டது. இந்தியாவுக்கு விடுதலைப்புலிகளின் மேலுள்ள வெறுப்பா அல்லது இலங்கையின் அரசாங்கத்துக்கு இந்தியா ஆதரவாகத் தொழிற்படுகிறதா என்ற இரண்டு கருத்துக் கோவைகளின் தாற்பரியத்தினையும் தெளிவாக விளங்கிக் கொள்ள வேண்டும்.

இலங்கையில் போர் ஏற்படுத்தப்படுவதற்கும் சமாதானம் ஏற்படுத்தப்படுவதற்கும் இந்தியா ஒருபக்கச்சார்புடன் நடந்து கொள்ள முடியாது என்பதுதான் வெளிப்படையானது. இந்தியா விடுதலைப் புலிகளை வெறுத்தால் இலங்கையின் கை ஓங்கிவிடுகிறது. இந்தியா இலங்கைக்கு ஆதரவளித்தால் புலிகளின் பலம் குறைவடைந்து விடும் இந்நிலையில் இந்தியா இரண்டினையும் ஒரேநேரத்தில் செய்ய முடியாத நிலையில் இருக்கின்றது. இதுவே இந்தியா ஓர் போர்ச் சமாதான சூழ்நிலையினை இலங்கையில் உருவாக்கி நிர்வகித்துக்கொண்டிருக்கின்றது என்பதன் விளக்கமாக கொள்ளக்கூடியதாக இருக்கின்றது.

இலங்கையில் உக்கிரமான போர் நடைபெற்றுக்கொண்டிருக்கும் பொழுதில் சமாதானத்திற்கான வாய்ப்பு சூனியமாக இருக்கும் பொழுதில் இலங்கைப் பிரச்சினைக்கு முடிவு போரினால் ஏற்படப் போவதில்லை என்றும் பேச்சுவார்த்தையின் மூலமாகவே முடிவு கிடைக்கும் என்பதனையும் தெளிவுபடுத்தவே இந்தியா விரும்புகிறது.

இந்தியா இலங்கைக்கு போராயுதங்களையும் போர் தொழில்நுட்பங்களையும் வழங்கிக் கொண்டிருக்கும் வேளையில் போர்த்தளங்களில் விடுதலைப் புலிகளுக்கு எதிராக வியூகங்களை அமைத்துக் கொடுப்பதில் பங்குபற்றிக் கொண்டிருக்கின்றது என்ற புலனாய்வுத் தகவல்கள் ஊடகங்களில் வெளிவந்துகொண்டிருக்கின்றன.

மறுபுறமாக விடுதலைப் புலிகள் நவீன ஆயுதங்களைப் பெற்று இலங்கையின் படைகளுக்கெதிராகப் போரிடுவதில் இந்தியா பாராமுகமாகவும் கடும்போக்கினை கடைப்பிடிக்காமலும் இருந்து வருகின்றது என்றும் இதனால் விடுதலைப் புலிகளுக்கு ஒரு மனோபலத்தினை இந்தியா வழங்கிக் கொண்டிருக்கின்றது என்றும் இதுவே போர் தொடர்ந்தும் இடம்பெற்று இலங்கையில் அமைதியற்ற சூழல் தோன்றுவதற்கு காரணமென்றும் கருத்துக்கள் சொல்லப்படு கின்றன.

விடுதலைப் புலிகள் வெற்றியில் முன்னேறும் பொழுது தடுத்து நிறுத்துவதும் இலங்கைப் படை போரில் தொடர்ந்தும் முதன்மைத்துவம் பெறாதவாறு கண்காணிப்பதும் ஆகிய இரு செயற்பாடுகளும் தொடர்ந்த வண்ணமே உள்ளன என்பதும் தென்னாசியாவில் இலங்கையும் அதன் அருகேயுள்ள இந்தியாவும் கவன ஈர்ப்புப் பிரதேசமாகவும் இருந்து வருவதற்கான ஒருவித ஏற்பாடு என்பது முன்னிலைப்படுத்திவைக்கப்படும் கூற்றாகவும் கொள்ளத்தக்கது.

இலங்கையில் சமாதானம் சாத்தியமாக வேண்டுமானால், அது ஒற்றையாட்சியின்

6ம் பக்கம் பார்க்க...

நீங்கள் இடம் மாறிச் செல்கிறீர்களா? எப்படி இலகுவாக இடம் மாறலாம்?

# Moving என கவலையா? இதோ சில துரும்புகள்...



மகேன் சிங்கராஜா
- வீடு விற்பனைப் பிரதிநிதி -


நம்மில் எத்தனை பேர் ஓர் வீட்டிலிருந்து இனனோர் வீடு மாறுவதற்கு முன், நாம் என்ன செய்ய வேண்டும் என ஓர் கோப்பு (*List*) தயாரித்து, முடிந்தவரை அதனை பின்பற்றி நிறைவேற்றுவது. வழமையாக நாம் ஞாபகத்தில் எது வருகிறதோ அதை வைத்து வீடு மாறிய பின் தான் தெரிய வரும், அந்த கடன் அட்டைக்கு அறிவிக்காமல் விட்டு விட்டேன் இந்த கடனட்டைக்கு அறிவிக்காமல் விட்டு விட்டேன், அதை செய்யாமல் விட்டு விட்டேன் இதை செய்யாமல் விட்டு விடடேன், என பலர் குமுறுவதை பார்த்து இருக்கின்றேன். அதன் விளைவு அதனால் அது கலக்சன் (*Collection*)க்கு சென்று விட்டதே என கவலை படவேண்டாம். எனக்கு தெரிந்த சில விபரங்களை உங்களோடு பகிரலாம்என நினைத்து சில குறிப்புகள்...

நீங்கள் புதிய வீட்டிற்கு மாறிச் செல்கிறீர்களெனின், தற்போதைய வீட்டிலிருந்து பொருட்களை அகற்றி வெளியேறுவதற்கு குறைந்தது 6 கிழமை தேவைப்படும். இந்த நேரத்தில் நீங்கள் என்ன செய்ய வேண்டியிருக்கும் என்பதற்கு உதவுவதற்காக நான் சில குறிப்புக்களைத் தருகிறேன்.

## இடம் மாறிச் செல்வதற்கு 6 கிழமைக்கு முன்பு

நீங்கள் உங்களுடன் எடுத்துச் செல்ல விரும்பாதது எதனையும் அகற்றி விடுங்கள். பயன்படுத்தப்படாமல் வருடக் கணக்கில் நிலக்கீழ் அறையில் (Basement) இருக்குமென்றால் அதனைக் கொண்டு செல்வதற்கு ஏன் பணத்தைச் செலவிட வேண்டும். உங்களுக்கு வேண்டாத பொருட்களை உங்கள் கராஜ் விற்பனையின் (Garage Sale) மூலம் அல்லது தர்மதாபனங்களுக்கு அல்லது நண்பர்களுக்கும் ஏனைய குடும்பங்கட்கும் கொடுப்பதன் மூலம் அகற்றி விடுங்கள்.

உங்களுடைய விலாச மாற்றத்தைப் பற்றி கனடா தபால் திணைக்களத்திற்கு அறிவியுங்கள். அவர்கள் ஒரு சிறய கட்டணத்தை அறவிட்டு, உங்களுடைய தபால் சேவை பாதிக்கப்படாதிருக்க தபால் உங்கள் புதிய வீட்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.

உங்களுடைய விலாச மாற்றம், மற்றும் மாற்றப்பட்ட திகதி பற்றி பின்வரும் நிறுவனங்கட்கு அறிவியுங்கள். (இவற்றுள் சில கணனியினூடாகச் (on-line) செய்யப்படலாம்).

- கடன் அட்டைக் கம்பனிகள்
- சில்லறைக் கடை கடன் அட்டைகள்.
- வங்கியும் ஏனைய நிதி நிறுவனங்களும்
- காப்புறுதிக் கம்பனிகள்: வீட்டுக் காப்புறுதி, ஆயுட்காப்புறுதி, வாகனம் மற்றும் சொத்துக்கள் மீதான காப்புறுதி
- கனடா வருமானத்துறை (Revenue Canada)
- கனடா மனித வளங்களும் சமூக அபிவிருத்தி நிறுவனங்களும் (Canada Child Tax Benefit, Canada Pension Plan போன்றவை)
- தனிப்பட்ட இளைப்பாற்றுச் சம்பளத் திட்டங்கள் (Private Pension Plans).
- வேலை கொடுத்த கம்பனி (Employers).
- பாடசாலைகள்
- சுகாதார சேவை வழங்குனரும், சுகாதார காப்புறுதியும் (Health providers & Health Insurance)
- வைத்தியர், பல்வைத்தியர், வைத்திய சாலை, மிருகவைத்தியர்,
- சட்டத்தரணி, கணக்காளர் (Lawyer, Accountant)
- மோட்டார்வாகன பதிவு, சாரதி அனுமதிப்பத்திரம் (Licence)
- சஞ்சிகை சந்தா (Magazine subscriptions)
- பாதுகாப்பு சேவை (Security service)
- தொலைக்காட்சி அல்லது செய்மதி கம்பனி (Cable or Satellite Company)
- இணைய சேவை வழங்குவோர் (Internet providers)
- வாயு, தொலைபேசி, நீர்மின்சக்தி, நீர் வழங்கும் சேவைகள் (Gas, phone, hydro, water)

உங்களுக்குத் தெரிந்த நண்பர்களினால் பரிந்துரைக்கப்பட்ட, பொருட்களைக் கொண்டுசெல்லும் கம்பனிகள் (Moving Companies) குறைந்தது இரண்டுடனாவது பேசிப் பாருங்கள். அவாகள் அறவிடும் பணத்திற்கான பத்திரத்தைப் (Receipt) பெற்றுக் கொள்வதுடன், உங்கள் வீட்டு சாமானை யார் பொதி(Pack) செய்வார்கள் என்பதைப் பற்றிப் பேசுங்கள், இடம் மாறிச் செல்லும் திகதி கிழமையின் நடுப்பகுதியில் (Moving Date) வந்தால் கூலி மலிவாக இருக்கும். இது மாதத்தின் முதலாவது அல்லது இறுதி நாட்களாகவோ இருந்தால் சாதாரணமாக அறவிடுவதை விட சற்று அதிகமாகவே அறவிடவார்கள்.

பொருட்களை எடுத்துச் செல்லுவது தொடர்பான காப்புறுதி (Moving insurance) பற்றிக் கேளுங்கள்

நீங்கள் தெரிவு செய்த பொருட்களை எடுத்துச் செல்லும் கம்பனியுடன் (Movers) ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திடுங்கள்

புதிய வீட்டை உடமையாக்கிய பின்பு பொருட்களை பொதி செய்வது, கொண்டு செல்வது பற்றித் திட்டமிடுங்கள்.

நீங்கள் பொதி செய்ய திட்டமிட்ட பொருட்களை பொதி செய்ய ஆரம்பியுங்கள். நீங்கள் இடம் மாறிச் செல்வதற்கேற்றவாறு பொருட்களைப் பொதி செய்வதற்கு ஏற்ற விதமாக பெட்டிகளை வாங்குங்கள். பெட்டிகளை தெளிவாக பெயரிட்டு பின்னர் அதற்கு இலக்கமிடுவதுடன், பின்னர் அந்தப் பெட்டியினுள் நீங்கள் வைத்த பொருட்களின் உள்ளடக்கத்தை மேலே எழுதுங்கள். கூடியவரை, பெரிய துலக்கமான எழுத்துக்களில் எழுதுவதுடன் இந்தப் பெட்டி, வீட்டின் எந்த அறையில் வைக்கப்பட வேண்டு

6ம் பக்கம் பார்க்க...

# Moving என...

5ம் பக்கத் தொடர்ச்சி...

மென்பதையும் எழுதுங்கள். மருத்துவ அறிக்கைகள், கட்டண ரசீதுகள், காப்புறுதிப் பத்திரங்கள் போன்ற முக்கியமான ஆவணங்களைப் பொதி செய்யாது அவற்றைக் கையில் எடுத்துச் செல்லுங்கள்.

இன்னுமொரு நகரத்திற்கு நீங்கள் செல்வதாக இருந்தால், மருத்துவ, பல்மருத்துவ, பாடசாலை பதிவேடுகளை உங்களுடன் எடுத்துச் செல்லுங்கள்.

பயன்படுத்தும் உணவுகளை உங்கள் குளிர்சாதனப்பெட்டியின் உறையும் பகுதியில் (freezer) பத்திரப்படுத்துங்கள்.

குடும்பம், உறவினர்கள், நண்பர்கள், அயலவர்கட்கு கடனாக வழங்கியவற்றைத் திரும்பப் பெறுங்கள். அல்லது நீங்கள் கடன் வாங்கியவற்றைத் திரும்பச் செலுத்துங்கள்.
உங்களிடம் இருக்கும் உபகரணங்களை எவ்வாறு இயக்குதல் என்பதற்கான கையேடுகளையும், புதிய பொருட்களின் உத்தரவாத கடிதங்களையும் (Warranties) பத்திரப் படுத்துங்கள்.

## 3 கிழமைக்கு முன்

புதினப்பத்திரிகை (News Paper) எடுத்துச் செல்லப்படும் விலாசத்தை மாற்றுங்கள்.

முகவரி மாற்றத்தை அறிவிக்கும் தபாலட்டைகளை நண்பர்கட்கு அறிவியுங்கள்.

பொருட்களை எடுத்துச் செல்பவர்களுடன் நீங்கள் செய்த ஒழுங்குகளை உறுதிப்படுத்துங்கள்.

இடம் மாறிச் செல்லும் தினம் அல்லது அதற்கு முதல் நாள், புதிய வீட்டின் உபகரணங்களை ஒழுங்குபடுத்துங்கள்.

உயர்ந்த மாடிவீட்டில் வாழ்ந்தால், பொருட்களை எடுத்துச்செல்லும் Freight elevatorஐ ஒழுங்கு செய்யுங்கள்.

## இடம் மாறிச் செல்லும் தினத்திற்கு ஒரு கிழமைக்கு முன்பாக

எல்லா அத்தியாவசிய சேவைகள் (Utility-Company Changes)கம்பனிகட்கும், உங்கள் தற்போதைய முகவரி மாற்றமடைகின்றது எனவும், புதியவீட்டில் புதிய கணக்கு ஆரம்பிக்கப்படும் என்பதையும் கூறுங்கள். நீங்கள் இடம் மாறிச்செல்ல முந்திய தினம், பழைய வீட்டில் தொலைபேசி சேவைகளை நிறுத்துங்கள். நீங்கள் இடம் மாறிச் செல்லும் தினம் புதிய இடத்தில் தொலைபேசிச் சேவைகளும் இணைய சேவைகளும் இருப்பதை உறுதிப்படுத்துங்கள்.

வீட்டில் எல்லாப் பொருட்களும் பொதி செய்யப்பட்டிருப்பதை உறுதிப்படுத்துங்கள். இவற்றைக் கொண்டு செல்பவர்கட்கு ஏற்ற விதமாக ஆயத்தப்படுத்துங்கள்.

வீட்டை முற்றிலுமாக சுத்தப்படுத்துங்கள். இதன்மூலம், புதிய உரிமையாளர் உடடியாக வீட்டினுள் உள்வரவும், எதனைப் பற்றியும் முறைப்படாதிருக்கவும் ஏற்ற விதத்தில் சுத்தம்செய்யுங்கள். கனலடுப்பு (Oven) மற்றும் உட்புறக் காற்றை வெளியே அனுப்பும் மின்விசிறியின் வடிகட்டிகளை (Exhaust-fan filters) சுத்தப்படுத்துங்கள்.

உங்கள் கம்பளங்கள், சுத்தம் செய்பவர்கட்கு அனுப்பி வைத்து, புதிய வீட்டிற்கு அவற்றை அனுப்பும்படி கூறுங்கள்.

நீங்கள் அனுப்ப வேண்டிய பொருட்களுடனான பெட்டிகளை தனியாக வையுங்கள்.

வெளியே செல்லும் நாளுக்கு முன்பாக சலவை இயந்திரத்தை (Washer/dryer) இணைப்பிலிருந்து அகற்றி ஒழுங்குபடுத்துங்கள்.

கனடா தபால், மற்றும் பத்திரிகை போடும் நபரின் சேவைகள் திருப்திகரமாக இருந்தால் அவர்களுக்கு நன்றி தெரிவித்து எழுதுங்கள்

## நீங்கள் இடம் மாறிச் செல்லும் நாளுக்கு முதல் நாள்

குளிர்சாதனப் பெட்டியைக் கூடியவரை கழுவி வெறுமையாக்குங்கள்.

வீட்டை மீண்டுமொருமுறை நன்கு சுத்திகரியுங்கள். மலகூடம், குளியல் தொட்டி (Tubs), முகம் கழுவும் தொட்டி (Sinks), குளியலறை showerகளை சுத்திகரியுங்கள்.

Vacuum cleanerஐ துப்பரவாக்குங்கள்.

புதிதாக வருபவர்களுக்காக தண்ணீர்ப் போத்தல்களை குளிர்சாதனப் பெட்டியில் விட்டுச் செல்லுங்கள்.

## இடம் மாறிச் செல்லும் நாளன்று

பொருட்களை எடுத்துச் செல்பவர்கட்காக குளிர் மென்பானங்களை ஆயத்தமாக வைத்திருங்கள்.

அத்தியாவசிய சேவைகளின் (Gas Meter, Hydro Meter Water Meter) வாசிப்புக்களை பதிவு செய்து முடிந்தால், அக் கம்பனிகளுக்கு அறிவியுங்கள்.

உங்கள் வீட்டின் நிலஅறைகள் (Basement) அலுமாரிகள் (Closet), கராஜ், வீட்டின் பின்புறம் (Backyard) போன்ற எல்லாப் பகுதிகளையும் சரிபாருங்கள்.

யன்னல்களைப் பூட்டி, வெப்பமேற்றியைக் குறைத்துவிட்டு, வளிசீராக்கியை நிறுத்திவிட்டு கதவுகளைப் பூட்டுங்கள்.

உங்கள் புதிய வீட்டுக்குரிய திறப்புக்கள் உங்களிடம் இருக்கிறதா என்பதை சரிபார்த்து உறுதிப்படுத்துங்கள்.

பொருட்களை எடுத்துச் சென்றவர்கள் (Movers)புதிய வீட்டில் பொருட்களை இறக்கிய பின், இவ்வாறு இடம் மாற்றிய பொருட்களில் சேதங்கள் எதுவும் இருக்கிறதா என சரிபாருங்கள்.

உங்கள் உபகரணங்களை (Appliances) புதிய வீட்டில் சரியான இடங்களில் பொருத்துங்கள்.

மேற் குறிப்பிட்ட விடயங்கள் கொஞ்சமேனும் உங்கள் சுமையை குறைத்திருக்கு மென நினைக்கின்றேன். மீண்டும் அடுத்த மாத வீடு பத்திரிகையினூடாக உங்களை சந்திப்போம். நன்றி...
உங்கள் கருத்துக்கள் வரவேற்கப்படும்.

■ ■ ■

# இத்தனைக்கும்...

4ம் பக்கத் தொடர்ச்சி...

கீழ்தான் என்று இலங்கையினாலும் சுயநிர்ணய தனி அரசால் மாத்திரமே என்று விடுதலைப்புலிகளினாலும் பலமாக வெளிப்படுத்தப்பட்டு வருகின்றது. இலங்கையின் வரலாற்றில் சமஷ்டி அல்லது கூட்டாட்சி கோரிக்கை அரைநூற்றாண்டுக்கு மேலாக இடம்பிடித்திருந்தாலும் கூட்டாட்சிக் கொள்கையானது அரசாங்கத்தின் வழங்கத்தயாரான நிலையில் மாவட்ட சபைகள் மட்டத்திற்கு தேய்ந்துபோன நிகழ்வுகளும் கூட்டாட்சிக்கு இலங்கை அரசு இணங்கப் போவதில்லை என்ற உண்மையினை தெளிவுபடுத்தியிருந்தன. மாகாண சபைகளோ மாவட்ட சபைகளோ கூட்டாட்சித் தத்துவத்தின் தத்தெடுக்கப்பட்ட போலிகள். இவையே நீண்டகாலமாக தீர்வுத்திட்டத்தின் அடிப்படையாக இருந்து வருகின்றன.

இவற்றில் மாற்றம் கொண்டுவந்து சமஷ்டியினை (கூட்டாட்சியினை) ஏற்படுத்த இலங்கை அரசும் அதன் இரு கட்சி ஜனநாயக அரசும் அனுமதிக்கப் போவதில்லை என்பது வெளிப்படையான உண்மையாகும். இந்த இருகட்சி ஜனநாயக முறையிலிருந்து பிரித்து எடுத்து தனிமைப்படுத்தப்பட்டவர்கள் தமிழர்கள் என்பதனால் அவர்களின் தீர்வுத் திட்டம் தனித்துவமாகவே அமையவேண்டுமென்பது இன்றைய தமிழர்களின் நிலைப்பாடு. இதுவே இணைந்துவாழ விரும்பிய தமிழர்களின் பார்வையில் இன்றும் சரி அன்றும் சரி ஒற்றையாட்சியின் கீழான தீர்வாகவே இருந்து வந்தது என்ற உண்மை கசப்பானது என்பது எல்லோருக்கும் தெளிவான ஒன்று.

இந்தியா இலங்கையினைத் திருப்திப்படுத்தவும் ஒற்றுமை விரும்பிகளான சிறுபான்மைச் சிறுகுழாத்தினரைத் திருப்பதிப்படுத்தவும் வேற்றுமையுள் ஒற்றுமையை உறுதிப்படுத்தும் உத்தியான ஒன்றுபடுத்தலும் ஒன்றுபட வைத்தலுமான இரு செயற்பாடுகளிலும் தந்திரங்கள் மேற்கொள்ளுவதன் மூலம் தீர்வுகாணப்பட வேண்டும் என்பதற்கு உறுதுணையாக இருக்க இந்தியா இணங்கி வருகிறது என்ற கருத்து மேலோங்கி வருவதற்கு இலங்கையின் நடவடிக்கைகளான தமிழ்ப் பகுதிகளில் புதிய குடியேற்றங்கள் தமிழ்க்கிராமங்கள் அழிக்கப்படுதல் தமிழர்களுக்கெதிரான வாழ்விடப் பறிப்பு, வாழ்வுரிமைப் பறிப்பு ஆகியவற்றில் இந்தியா பாராமுகமாக இருப்பதுதான் ஒற்றையாட்சித் தீர்வுத் திட்டத்தை இந்தியா விரும்புகிறது என்ற அனுமானத்திற்கான வாய்ப்பினை அளிக்கின்றது. அத்துடன் இலங்கையின் தென்மாநில அரசுகள் குறிப்பாக மாநில அரசுகள் பொதுவாகவும் கூடிய அதிகாரம் கேட்டுவிடக் கூடும் என்பதால் இலங்கையில் தமிழருக்கு கூடிய அதிகாரம் கொண்ட மாநிலத்தை வழங்க இந்தியா விரும்பப் போவதில்லை என்றதொரு வாதத்தினை வைப்பதற்கு ஏதுவாகவும் அமைந்துவிடுகின்றன. தெளிவாகக் கூறுவதாயின் இலங்கையில் இந்தியாவின் தலையீட்டினால் கூடிய அதிகாரம் கொண்ட சமஷ்டி உருவாகினால் அது இந்தியாவையும் அதன் இறைமையினையும் பாதிக்கும் என்பது ஒரு விதண்டாவாதமாகும்.

இந்தியா நினைத்திருந்தால் வங்காள தேசம் உருவாக்கம் பெற்றிருக்க முடியாது. மாறாக பஞ்சாப் தனிமைப்பட விரும்பினாலும் அது ஒருபோதுமே சாத்தியமில்லை. இதுவே இந்தியா என்ற அரசும் மக்களும் கொண்ட தேசிய உணர்வு இதனால் இந்திய ஒற்றுமை சிதறுமிடத்தும் ஒன்றாகும் வாய்ப்புத்தான் அதிகம் உள்ளது.

இந்தியா இலங்கையினையும் தமிழர்களையும் திருப்தி செய்யும் வகையில் ஒரு தீர்வுத் திட்டத்தினை திணிப்பதன் மூலம் தமது கட்டுப்பாட்டுக்குள் இலங்கை இருக்கும் என்ற கருத்தினை இந்தியா முழுதாக நம்பியது. 13ஆவது திருத்தச் சட்டத்தினை ஆக்குவதன் மூலம் சமாதனத்தை வழிநடத்தலாம் என நம்பியிருந்தது. அதன் மூலம் இலங்கையில் பெரிய வல்லரசுகளின் தலையீடுகள் இருப்பதிலிருந்து தவிர்த்துக்கொள்ளலாம் என்பதனையும் நம்பியதுதான் இலங்கை இந்திய ஒப்பந்தம் 13ஆவது திருத்தச் சட்டத்தின் பிறப்பாக இருந்தது.

தமிழர்களின் இன்னல்களுக்குக் காரணம் இளைஞர்களின் எழிச்சிக்குக் காரணம் தமிழுக்கு சமவுரிமை இல்லை. தமிழருக்குத் தாயகமில்லை என்ற கருத்துக்களே மேலோங்கியிருந்த வேளையில் தமிழர்கள் மொழியுரிமை இல்லாததனால் தான் கல்வியினால், அரச பதவிகளினால் பாகுபாடு காட்டப்பட்டார்கள் என்றும் அதுவே கலவரங்களுக்கும் இளைஞர் போராட்டங்களுக்கும் காரணமென்ற கருத்தும் மேலோங்கியிருந்தது. இதன்விளைவாக தமிழுக்குச் சமஉரிமையும் வடக்குக்கிழக்கு இணைப்பும் முழுப்பிரச்சினைக்கும் தீர்வாக அமையும் என்றும் அதனை ஏற்காத இளைஞர் குழுக்கள் அடக்கப்பட வேண்டியன என்ற கருத்தினையும் இந்திய கொள்கை வகுப்பாளர்கள் முன்வைத்தனர் இவற்றுக்கும் மேலாக இலங்கை இரண்டாகப் பிரித்துவிடப்பட்ட தேசிய அரசு என்ற ஆங்கிலப் புவியியலாளர்களின் அடிப்படைக் கூற்று எல்லாவற்றிற்கும் மேலாக இலங்கையில் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கிறது என்பதனை இந்தியா தெளிவாக விளங்கிக் கொள்ளவில்லை.

தமிழை அரச வாய்ப்புள்ள மொழியாக்குவதாலும் தமிழர்களின் தாயகத்தை தனிமைப்படுத்தி வடக்கையும் கிழக்கையும் இணைப்பதையும் தீர்வாகக் காட்ட முயன்ற இந்தியா தான் சமாதானத்துக்காக இறக்கிய படையினரை வடக்குக் கிழக்கு எல்லைகள் நெடுகே நிறுத்தியிருந்ததால் இலங்கை வேற்றுமையில் ஒற்றுமை கொண்ட இரண்டாகப் பிரிக்கப்பட்ட தேசிய அரசு என்ற உண்மை இலங்கை வாழ் மக்கள் எல்லோராலும் பலமாக உணர்த்தப்பட்டிருக்கும். இந்தியா பற்றிய பல்வேறு வகையான கருத்துக்கள் வாதப்பிரதிவாதங்களுக்கும் இந்தியா என்ன செய்துகொண்டிருக்கிறது என்ற கேள்விக்கும் அன்றே விடை கிடைத்திருக்கும்.

■ ■ ■

## இம் மாதத்திற்குரிய முக்கிய குறிப்புக்கள்

ஏப்பிரல் குறிப்புகள்

- உங்கள் வருமான வரி பத்திரங்களை நிரப்பி அனுப்வதற்காக விதிக்கப்பட்ட கடைசி நாள் ஏப்ரல் 30ஆம் திகதி. அதற்கு முன் உங்கள் பத்திரங்களை நிரப்பி (Canada Revnue Agncy) அனுப்பி வையுங்கள்.
- சுவர்களிலிருந்து படங்களையும் அலங்காரப் பொருட்களையும் எடுத்து கண்ணாடிகளையும் சட்டகங்களையும் சுத்திகரியுங்கள்.
- மண் (China clay), மற்றும் பளிங்கினாலான (Crystal) அலங்காரப் பொருட்களை கழுவுங்கள்.
- உபகரணங்கள் மற்றும் தளபாடங்களை அசைத்து அவற்றின் கீழேயுள்ள அழுக்குகளை Vacuum செய்யுங்கள்.
- இருட்டுத் திரைகளை கழுவி சுத்திகரியுங்கள்.
- உங்கள் மெத்தைகளை சமனான பாவனைக்காக புரட்டிப் போடுங்கள்.
- கம்பளி ஆடைகளை dry clean செய்து சேகரித்து வையுங்கள்.
- குளிர்கால போர்வைகளுக்குப் பதிலாக கோடை காலத்திற்குரிய போர்வைகளை ஆயத்தப்படுத்துங்கள்.
- புகையைக் கண்டறியும் (Smoke detectors) உபகரணங்களைச் சுத்திகரியுங்கள்.
- உங்கள் வாயு வெப்பமேற்றியின் (Gas furnace) நெருப்புச் சுவாலை நிறத்தை சரிபாருங்கள். இச் சுவாலை பிரகாசமான நீலநிறமாகவும் மஞ்சள் நிறம் குறைவாக அல்லது மஞ்சள் நிறம் எதுவுமேயற்றுக் காணப்பட வேண்டும்.
- பாதிக்கப்பட்ட பகுதிகளை சரிபாருங்கள்.
- உங்கள் பூந்தோட்டப் படுக்கைகளை பண்படுத்தி தயார்ப்படுத்துங்கள்.
- உங்கள் தோட்டத்தில் புல்வெட்டும் இயந்திரத்தை பாதிக்காது இருப்பதற்காக தோட்டத்தில் இருக்கும் கற்கள், குச்சிகளை அகற்றுங்கள். புல்வெட்டும் இயந்திரம், மற்றும் ஏனைய புற்தரை பராமரிப்பு உபகரணங்களை வசந்தகாலத்திற்கு ஏற்றவிதமாக ஆயத்தப்படுத்துங்கள்.
- நிலைத்து நிற்கக் கூடிய பூக்கும் தாவரங்களை நாட்டுங்கள்.

தொகுப்பு: மகேன் சிங்கராசா

■ ■ ■

# இரத்தக் கொதிப்பு நோய்

## (HIGH BLOOD PRESSURE)



கந்தையா செந்தில்நாதன்
- Echo - Cardiogapher -

### மார்படைப்பு (Heart Attack)

மார்பினுள் உள்ள இரு பிரதான உறுப்புக்கள் இருதயமும், நுரையீரலுமாகும். மார்படைப்பு, நெஞ்சடைப்பு என்று கூறப்படும் இந்நோய் உண்மையில் இருதயத்தின் தசைகளுக்கு குருதியை விநியோகம் செய்யும் இருதய நாடிகளில் ஏற்படும் அடைப்பையே குறிக்கும்.

எமது இருதயம் ஒவ்வொரு தடவையும் குருதியைப் பாய்ச்சும் பொழுது உடலில் மூன்று விதமான குருதிச் சுற்றோட்டங்கள் நடைபெறுகின்றன. முதலாவது உடல் முழுவதற்குரிய தொகுதிச் சுற்றோட்டம், இரண்டாவது சுவாவச்திற்குரிய சுவாசப்பை சுற்றோட்டம். மூன்றாவது இதய தசைகளுக்குரிய இருதயச் சுற்றோட்டமாகும். மார்படைப்பு நோயின் பொழுது மூன்றாவது வகையான இதய தசைகளுக்குரிய சுற்றோட்டம் பாதிப்படைகின்றது.

மார்படைப்புப் பற்றி நன்கு விளங்கிக் கொள்வதற்கு குருதிக் குழாய்கள் பற்றி அறிந்திருப்பது அவசியம். குருதிக்குழாய்கள் உட்படை, நடுப்படை, வெளிப்படை என்னும் மூன்று படைகளால் உருவாக்கப் பட்ட மீள்தகவுத் தன்மையுடைய, அமுக்க மாற்றங்களைத் தாங்கக் கூடிய மென்தசைத் தொகுதியாகும். ஒரு சுகதேகியின் குருதிக் குழாய்கள் நன்றாக இருப்பதனால் இக்குருதிக்குழாய்களினூடாக குருதியானது எவ்வித தடையுமின்றி உடலின் எல்லா உறுப்புக்களுக்கும் நன்கு பாய்ந்துசெல்கின்றது. குருதி விநியோகம் சீராக இருக்கும் பொழுது உடலின் எல்லாப் பகுதிகளும் நன்கு போசிக்கப்பட்டு ஆரோக்கியமாக இயங்குகின்றன.

### மார்படைப்பு எப்படி உருவாகின்றது?

இதயத் தசைகளுக்கு குருதி விநியோகம் செய்யும் குருதிக் குழாய்களில் சிறிது சிறிதாகக் கொழுப்புப் படிந்து அதன் துவாரத்தின் குறுக்களவு விட்டம் படிப்படியாகக் குறைந்து வருகின்றது. அப்பொழுது விரைவாகவும், விவேகமாகவும் இயங்கும் இதயத் தசைகளுக்குச் செல்லும் குருதியின் அளவு குறைகின்றது. இவ்விதமாக ஏற்படும் குருதியின் விநியோகக் குறைப்பு பலவிதமான இதய நோய்களுக்குக் காரணமாகின்றது. அவற்றை கட்டம் கட்டமாக பிரித்து ஆராய்வோம்.



மார்படைப்பு நோயானது இதயத்தசைகளுக்கு குருதி விநியோகம் செய்யும் குழாய்களின் துவாரம் ஓரளவோ அல்லது முற்றாகவோ அடைபடும் பொழுது ஏற்படுகிறது. மார்படைப்பின் முதலாவது அறிகுறி அநேகமாக அதிக வேலைசெய்யும் பொழுதோ, படியேறும் பொழுதோ, உறைபனி அப்புறப்படுத்தும் பொழுதோ நெஞ்சில் ஏற்படும். தாங்கொண்ணா வேதனையாக ஏற்படலாம் அல்லது வேதனையின்றியும் ஏற்படலாம்.

கட்டம் 1

### குருதி விநியோகக் குறைவு நோய் (இருதயத்தசைகளுக் குரிய) (Angina)

ஓயாது வேலை செய்யும் இதயத் தசைகளுக்கு எந்நேரமும் பிராணவாயுவும், போசனையும் விநியோகிக்கப்பட்டுக் கொண்டிருத்தல் அவசியம். அக்குழாய்களின் துவாரம் பெரும்பகுதி அடைத்தாலும் மிகுதி துவாரத்தினூடாக செல்லும் குருதியில் இருந்து பெறப்படும் பிராணவாயுவையும் போசனையையும் பயன்படுத்தி அத்தசைகள் சாதாரணமாக இயங்கிக் கொண்டிருக்கும். உடலுழைப்பு அதிகம் அற்றவர்களுக்கு இவ்விநியோகம் போதியதாக இருக்கலாம். ஏனெனில் அவர்களது இருதயம் மிகவும் வேகமாக இயங்கத் தேவையில்லை என்பதால் அதிகளவு சக்தி இதயத் தசைகளுக்குத் தேவைப்படமாட்டாது. அடைபட்ட குழாய்களுடாக வரும் குருதியினால் போசிக்கப்படும் பிராணவாயுவும், போசனைகளும் போதுமானதாக இருக்கும்.

நாட்கள் செல்லச் செல்ல அடைபட்டிருந்த துவாரம் படிப்படியாக மேலும் அடைக்கப்படலாம். கொழுப்புக்கள், கல்சியம் மற்றும் திசுக்கள் என்பன இவ்வடைப்பு ஏற்படுவதற்கு காரணமாகலாம்.

குழாய் அடைபட்ட நிலையில் மிகுந்த ஒரு பாரிய உடலுழைப்பை செய்யும் பொழுது வேகமாகத் தொழிற்படும் இதயத் தசைகளுக்கு அவரது அடைபட்ட குழாய்களினூடாக வேலைக்கு ஏற்ப குருதி விநியோகம் ஏற்படமாட்டாது. அத்தருணத்தில் நெஞ்சில் வேதனை ஏற்படும். இதனை ஆங்கிலத்தில் Angina Pectoris என்று அழைப்பர். அநேகமாகப் படிகளில் ஏறும் பொழுதோ, ஓடும் பொழுதோ, உடற்பயிற்சி செய்யும் பொழுதோ, உறைபனியை வீட்டின் முற்றத்திலிருந்து அகற்றும் பொழுதோ நெஞ்சு நோய் ஏற்பட்டால் அதற்குரிய காரணம் ANGINAவாக இருக்கலாம். அதாவது இதயத் தசைகளின் வேலை அதிகரிக்க அதன் போசாக்கின் தேவையும் அதிகரிக்கின்றது. தேவையை ஈடுசெய்யும் அளவிற்கு அடைத்த குழாய்களினூடாக விநியோகம் செய்ய முடிவதில்லை. இயற்கையானது நெஞ்சு வலியை ஏற்படுத்தி எச்சரிக்கை செய்து அந்த நபரை ஓய்வெடுக்க வைப்பது அந்தத் தேவையை ஈடு செய்வதற்காகும். நெஞ்சு நோவென்று சற்று களைப்பாறும் பொழுது தேவையானஅளவு போசனை மெதுவாக இதயத்தை வந்தடைய நெஞ்சுவலியும் படிப்படியாக குறைந்துவிடுகின்றது.




இத்தருணத்திலாவது வைத்தியரை நாடி அதற்குரிய பரிசோதனைகளாகிய இதயமின் பதிவு (ECG அல்லது EKG) மற்றும் இருதய எதிரொலிப் பதிவு (Echo-Cardiogram) ஆகிய இலகுவாக சிரமமின்றி செய்யக்கூடிய இரு பரிசோதனைகளைச் செய்து உங்கள் இதயத்தில் உள்ள குறைபாடுகளைக் கண்டு கொள்ளலாம். குருதி, சிறுநீர் பரிசோதனைகளும் செய்யப்படும். நோய்க் கட்டுப்பாட்டில் இல்லாதுவிடில் படிப்படியாக அடுத்த கட்டத்திற்குச் செல்லலாம்.

கட்டம் 2

### நிலையான குருதி விநியோகக் குறைவு நோய் (இருதயத் தசைகளுக்குரிய) (Unstable Angina)

கட்டம் 1ல் கடும் வேலை செய்யும் பொழுது வந்துசெல்லும் நெஞ்சுவலி கட்டம் 2ஐ அடைந்ததும் ஓய்வாக இருக்கும் பொழுது கூட அடிக்கடி வந்துபோகலாம். பிராண வாயுவின் விநியோகம் மிகவும் குறைவுபடுவதால் ஏற்படுகிறது. வேதனையில்லாமலும் இந்நோய் எற்படலாம்.

### இதயம் மலர்கிறது - 3

இதயத்திலுள்ள வால்வுகளில் ஒன்றான பெருநாடி வால்வில் ஏற்படும் சுருக்கத்தாலும் ANGINAநோய் ஏற்படலாம். மேற்கூறிய சோதனைகள் இவற்றைக் கண்டு பிடிப்பதுடன் மேலும் பல சோதனைகள் செய்ய வேண்டியிருப்பின் அவற்றையும் வலியுறுத்துவதாக அமையும்.

### மார்படைப்பு எப்படி எப்பொழுது ஏற்படுகிறது?

குருதிக் குழாய்களின் உட்பக்கச் சுவரில் கொழுப்புப் படிவுகள் சிறிது சிறிதாக ஏற்படும் பொழுது, அவற்றின் துவாரங்களின் அளவும் குறைந்து வருகின்றது. வாய்க்கால்கள் அடைத்துவிட்டால் அவற்றினூடாக நீர் பாய்வது குறைவது போல் ஓரளவு அடைத்த குருதிக் குழாய்களுடாக முழு அளவிலான குருதி விநியோகம் நடைபெற மாட்டாது. துவாரங்களின் அளவு ஏறத்தாள 70வீதமான அளவு அடைக்கும் வரை அநேகமாகக் குணங்குறிகள் தென்படுவதில்லை. குருதியின் குழாய்களின் அடைப்பு படிப்படியாகக் கூடிவர அது Angina நிலைக்குச் சென்று பின்பு Unstable Angina நிலைக்குச் செல்வதைக் கவனித்தோம்.

குருதிக் குழாயின் குறுக்குவெட்டுமுகம்




இதயத் தசைகளுக்கு குருதி விநியோகம் செய்யும் குருதிக் குழாய்களை வலது இதய நாடி, இடது இருதய நாடி, இருதயச் சுற்றுப்புற நாடிகள் என்று வகைப்படுத்தலாம். இதில் இருதயச் சுற்றுப்புறநாடி முன் பக்ககீழிறங்குநாடி என்பன இடது இருதய நாடியின் கிளைகளாகும்.

ஒரு வாய்க்காலை உதாரணமாக எடுத்தால் அதில் நாளடைவில் கல்லுகள், தடிகள், மண் என்பன சேர்ந்து அந்த வாய்க்காலைத் தூர்ந்துவிடச் செய்கின்றன. எனினும் அதனூடாக நீரானது சிறிதளவாவது பாய்ந்து சென்று பயிர்களுக்குச் செல்லும் அந்த அடைப்பை சீர்செய்யாது விட்டால் மேலும் இலைகுளைகள் சேர்ந்து அதனை முற்றாக அடைத்துவிடும்.

இதேபோல் பகுதியாக அடைத்த குழாய்களை சிறு இரத்தக் கட்டிகளோ அல்லது உட்பக்கச் சுவரில் படிந்துள்ள கொழுப்புக் கட்டிகள் சிறு துணிக்கைகளாகக் கழன்று வந்து ஏற்கனவே அடைத்த குழாயை முற்றாக அடைத்துவிடும். முற்றாக அடைபட்ட குருதிக்குழாய்களுக்கு அப்பால் உள்ள இருதயத்தின் தசைப்பகுதி பூரணமாக குருதியைப்பெறமாட்டாது. இது மார்படைப்பு எனப்படும்.

18ம் பக்கம் பார்க்க...

# புகை அறிவுறுத்தும் கருவிகள்
# Smoke detectors

வேலா சுப்ரமணியம்
- Certified Home Inspector -



தீ விபத்து ஒன்று ஏற்படும் சந்தர்ப்பத்தில் எமது உயிர்களைக் காக்கும் தோழனாக செயற்படக் கூடியவை smoke detectors. அதாவது நெருப்பின் வேகம் அதிகரிக்க முன்னதாகவே இவை எமக்கு அத்தகைய ஆபத்தை அறிவுறுத்துவதால் நாம் எமது உயிர்களைப் பாதுகாக்கும் விதத்தில் வெளியேறவோ அல்லது மாற்று நடவடிக்கைகளை எடுக்கவோ வழி கோலுகின்றன.

கனேடிய பாதுகாப்புச் சபையின் விதிமுறைகளுக்கு அமையவும் (Canada Safety Council) கனேடிய சுகாதார அமைச்சின் (Health Canada) நியமங்களுக்கு அமைவாகவும் ஒரு வீட்டில் உள்ள ஒவ்வொரு தளத்திலும் நல்ல நிலையில் இயங்கக் கூடிய ஆகக் குறைந்தது ஒரு புகை அறிவுறுத்தும் கருவியாவது பொருத்தப்பட்டிருக்க வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டிருக்கிறது. தொடர்மாடிக் கட்டிடங்களாக இருக்கும் பட்சத்தில் ஒவ்வொரு குடியிருப்பு அங்கத்திலும் (Each Apartment unit) இத்தகைய புகை அல்லது நெருப்பை அறிவுறுத்தும் கருவிகள் பொருத்தப்பட்டிருத்தல் மிக அவசியம். தவறுபவர்களுக்கு $235.00 டொலர்களிலிருந்து $100,000.00வரையான டொலர்கள் அபராதமாக விதிக்கப்படலாம்.

ஆனால், எம்மவர் மத்தியில் பலரிடமும் அலட்சியப் போக்கே காணப்படுகின்றது. பொரியல் செய்வதற்காகவும், சாம்பிராணி கொழுத்துவதற்காகவும், புகைப்பிடிப்பதற்காகவும் இயங்கிக்கொண்டிருக்கும் இத்தகைய கருவிகளை நிரந்தரமாக கழற்றிவிடுவதும் அல்லது அதற்குரிய பற்றறிகளை கழற்றி விடுவதும் ஒரு பழக்கமாகவே காணப்படுகிறது. இவற்றைக் கண்டு பிடித்தால் அபராதம் விதிக்கப்படலாம் என்பது ஒருபுறமிருக்க, இத்தகைய அசட்டைத் தனம் சில வேளைகளில் விலை மதிக்க முடியாத உயிராபத்தைக் கூட ஏற்படுத்திவிடும் என்பதை உணர்ந்துகொள்ள வேண்டியது அவசியமாகும். கடந்த மாதம்கூட, ரொறொன்ரோவில் ஒரே குடும்பத்தில் உள்ள பல அங்கத்தவர்கள் இத்தகைய கருவிகள் இயங்காது இருந்ததால் நித்திரையில் இருந்தபோது வீடு தீப்பிடித்து இறந்த பரிதாப சம்பவம் பலருக்கும் ஞாபகத்தில் இருக்கலாம். எனவே ஒவ்வொரு வீட்டுரிமையாளரும் ஒவ்வொரு தளத்திலும் குறிப்பாக படுக்கை அறைக்குச் சமீபமாகவும், சமையலறைக்குச் சமீபமாகவும் இத்தகைய கருவிகள் பொருத்தப்பட்டிருப்பதை உறுதி செய்வதோடு அவற்றை கிரமம் தவறாது பராமரித்து வர வேண்டியதும் மிக அவசியமாகும்.

பொதுவாக இரண்டு வகையில் இவை பொருத்தப்படலாம். அதாவது பிரதான மின் இணைப்புடன் பொருத்தப்படுவது (Hard wire) ஒருவகை. பற்றறியில் இயங்குபவை இரண்டாவது வகை. புதிய வீடுகளில் கனேடிய சட்ட நியமங்களுக்கு அமைவாக கட்டிட அமைப்பாளர்களால் பிரதான மின் இணைப்புடன் பொருத்தப்படும் முதலாவது வகையைச் சேர்ந்தவை இணைக்கப்படுகின்றன. ஆனால், பழைய வீடுகளில் பற்றறியில் இயங்குபவை பொருத்தப்பட்டிருக்கும் பற்றறியில் இயங்கும் கருவிகளுக்கு வருடா வருடம் புதிய பற்றறிகளே மாற்றவேண்டியது மிக அவசியமாகும்.

வருடா வருடம் பகல் நேரச் சேமிப்பிற்காக (Day Light Savings) நேரமாற்றம் செய்கின்ற போது அத்தினத்தில் இவற்றுக்கு பற்றறிகளை மாற்றிவிடும் உத்தமப் பிரஜைகளும் கனடாவில் இருக்கவே இருக்கிறார்கள். மறுபுறம் அது பற்றறியில் இயங்குகின்றதா? அல்லது பிரதான மின்சாத்தில் இயங்குகின்றதா என்ற அறிவே இல்லாத அசமந்தப் போக்கோடு பல ஆண்டுகாலமாக வீடுகளில் வாழ்ந்து கொண்டிருப்பவர்களையே பரவலாகக் காணக்கூடியதாக இருக்கிறது. இத்தகைய நிலை மாற வேண்டும் என்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

புகை அறிவுறுத்தும் கருவிகளை தொழில்நுட்ப ரீதியாக இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

### Ionization Type Of Smoke Defector:

பொதுவாக இத்தகைய கருவிகள் வேகமாக இயங்கி அறிவுறுத்தக்கூடியவை. சிறு புகையுடன் ஆரம்பித்து வேகமாகச் சுவாலையாக மாறக்கூடிய, சமையலறையில் கொதிக்கும் எண்ணெயில் இருந்து வரும் சுவாலைகளையோ, அல்லது கடதாசியில் இருந்து ஆரம்பிக்கும் நெருப்பை அறிவுறுத்தவோ இவ்வகை சிறந்தவையாகும். வீடுகளில் பொதுவாக 70% வீதமான தீயாபத்து இத்தகைய வகையைச் சார்ந்தவையாக இருப்பதாக பல அறிக்கைகள் கூறுகின்றன.



படம் 1

### Photoelectric Type Of Detector

மெதுவாகப் பரவும் நெருப்பை அறிவுறுத்தும் தன்மை கொண்டவை இவை. பல மணித்தியால புகைக்குப் பின்னர் ஏற்படக் கூடிய நெருப்பை அறிவுறுத்தக்கூடியவை. புகைப்பிடிப்பவர்களின் தீய பழக்கங்களினால் படுக்கை அறை, சோபா போன்ற இடங்களில் இருந்து ஏற்படும் இந்த வகையான தீ விபத்துக்களை அறிவுறுத்தக் கூடியவை இவை. பொதுவாக வீடுகளில் 30% மான விபத்துக்கள் இவ்வாறு ஏற்படுவதாக அறிக்கைகள் கூறுகின்றன.

வீடுகளில் இத்தகைய கருவிகளைப் பொருத்தும் போது இரண்டு வகைகளும் பொருத்தப்படுவது சாலச் சிறந்தது. ஆனால், முதலாவது வகை ஒன்றுக்கு மேற்பட்ட அளவில் பொருத்தப்பட்டிருப்பது மேலும் பாதுகாப்பை உறுதிப்படுத்துவதாக அமையும்.



### பராமரிப்பு

வருடத்திற்கு ஒருமுறை தவறாது பற்றறியை மாற்றுதல் வேண்டும். நேர மாற்றம் செய்யப்படும்போது இலையுதிர்காலத்தில் அல்லது, வசந்தகாலத்தில் தவறவிடாது மாற்றும் பழக்கத்தை கடைப்பிடித்தல் நன்று.

கிரமமாக தூசு, அழுக்கு போன்றவற்றை அகற்றி சுத்தப்படுத்தல் வேண்டும். மாதம் ஒருமுறையாவது Vacum செய்தல் வரவேற்கத்தக்கது.

10 வருடத்திற்கு ஒருமுறை இத்தகைய கருவிகளை முற்றாக மாற்றி விடுதல் அவசியம். பிரதான மின் இணைப்புடன் பொருத்தப்பட்டதாயினும் சரி, பற்றறியில் இயங்குபவையாக இரந்தாலும் சரி 10 வருடத்திற்கு ஒருமுறை மாற்றி விடுதல் சிறந்தது எனப் பல ஆராய்ச்சிகள் கூறுகின்றன. இவற்றில் இருக்கும் Sensor காலப்போக்கில் செயல் இழந்து போவதால் இவற்றை மாற்றுதல் அவசியமானது.



## வீடும் விடியலும் - 26

இத்தகைய கருவியில் இருக்கும் பற்றறியைக் கழற்றி வேறு உபகரணங்களுக்குப் பாவிக்கும் பழக்கத்தை முற்றாகத் தவிர்த்தல் வேண்டும்.

கிரமமாக பரீட்சித்துப் பார்த்தல் மிக அவசியம். பரீட்சிக்கும் போது 2 அம்சங்களைக் கவனித்தல் வேண்டும்.

மின்சாரம் செலுத்தப்படுகின்றதா என்பதை உறுதி செய்தல்.



படம் 2

புகையை கண்டுபிடித்து அறிவுறுத்துகிறதா என்பதை உறுதி செய்தல்.

Test பொத்தானை அழுத்தும் போது சத்தம் கேட்டால் அது மின்சாரம் இருக்கிறது என்பதையும், சத்தம் இடும் திறன் இருக்கிறது என்பதையும் உறுதி செய்கிறதே தவிர புகையைக் காணுமிடத்தில் அது சத்தமிடும் என்பதற்கு எந்தவித உத்தரவாதமும் இல்லை. எனவே எமது பிரார்த்தனையின் போது கிரமமாக சாம்பிராணி கொழுத்தும் பழக்கம் இருப்பவர்களுக்கு செய்ய வேண்டிய பரிசோதனையின் ஒருபகுதி எதேச்சையாகவே செய்யப்படுவது ஒரு அதிஸ்ட வசமானது.

‘Pilot Lamp” எரிந்து கொண்டிருப்பதைக் கண்டாலும் கிரமமான முறையில் மாதம் ஒருமுறையாவது இவற்றைப் பரிசீலித்துப் பார்த்தல் மிக அவசியம்.

வீட்டில் உள்ள ஒவ்வொருவரும் கேட்கக் கூடியவிதத்தில் Smoke Alarms பொருத்தப்பட்டிருப்பதும், அத்தகைய சத்தம் கேட்கும் பட்சத்தில் எடுக்க வேண்டிய மாற்று நடவடிக்கைகள் பற்றி ஒவ்வொருவரும் அறிந்து வைத்திருக்க வேண்டியதும் அவசியமாகும்.

“Test your smoke alarms monthly with smoke. Models that have a test button also need to be tested monthly with smoke because the test button may only tell you that the buzzer works, and not necessarily that the smoke–sensing mechanism is functioning”

■ ■ ■

# ‘Variable Rate’ல் Mortgage வைத்திருக்கலாமா?



கருணா கோபாலபிள்ளை
- வீடு விற்பனை முகவர் -

அப்பாடா, ஒரு வழியாக கொட்டும்பனியும் குலை நடுங்க வைக்கும் குளிர் காலமும் தாண்டியாயிற்று. இனிமேல் குதூகலிப்புத்-தான். வசந்தகாலம் வந்தாலே வசந்தம் வந்தது மாதிரியல்லவா. வாசகர்கள் மத்தி-யிலும் வசந்தம் வீச வாழ்த்துக்களுடன்.

ஒருவர் எவ்வளவுதான் கற்றறிந்தாலும் தனது துறைசார் கல்வியறிவு மற்றும் அனு-பவ அறிவுகளில் சிறப்புத் தேர்ச்சி பெற்றி-ருப்பது போல் தனக்கே உரிய பாணியில் தாய்வீடு சஞ்சிகையானது வீடுசார் தகவல் களில் சிறப்புற்றிருப்பது பலருக்கு நன்மையே. இன்றைய எமது வேறுபட்ட தசாப்தங்கள், சூழல்கள், சூழ்நிலைகளில் கருத்துப் பரி-மாற்றம் என்பது இன்றியமையாதவொன்று. இத்தகவல் பரிமாற்றமானது பரிணாம வளர்ச்சிகண்டு இன்று கம்பியூட்டர்களையும் தாண்டி ஓடிக்கொண்டிருந்தாலும் பண்டைய காலம் தொட்டு பத்திரிகை வடிவங்கள் வழங்-கிய சௌகரியம் எம்மிடையே வேரூன்றி காணப்படுகின்றது.

குளிர்கால வீட்டுப் பராமரிப்புக்கள் முடிந்து வசந்தகால மற்றும் கோடைகால பராமரிப்-புக்களை கவனிக்க வேண்டிய காலம் வந்தாயிற்று. தோட்டங்கள் மற்றும் வீட்டின் முன்புற/பின்புற அலங்கரிப்புக்கள் வெளிப்-புற திருத்த வேலைகளில் காலங்களைக் கழிக்கலாம். அதற்கு முன்னர், இம்மாதம் நேயர்களின் ஆதங்கங்களை அவதானிப்-போம்.

### *‘Mortgage Rate”* என்பது கனடிய வானிலை போல் அன்றாடம் மாறி வருகின்றதே. பலர் கூறுவது போல் *‘Variable Rate Mortgage* வைத்திருப்-பது பற்றிய உங்கள் கருத்து என்ன?

ரவி K. Richmondrill

எனது பதிலை எதிர்பார்க்காமல் கருத்தினை மட்டுமே கேட்டதற்கு நன்றிகள் பல. ஒவ்வொருவரும் தத்தமது வாழ்க்கை முறை-களை அவரவர் வசதிகள்/விருப்பங்களுக் கேற்ப அமைத்துக்கொள்கின்றனர். அநேகர் மாற்றங்களை அதிகம் விரும்பாதவர்கள். சிலர் எதையும் ‘ஒருமுறை முயன்று பார்த்-தால் என்ன தலையா போய்விடும்’ என்று எண்ணுவதும் உண்டு. மேலே கூறியது போல் ஓர் சீரான மாதாந்த கட்டணத்தை-யும் அதிகம் பொருளாதார ஏற்றத்தாழ்வு-களை விரும்பாதவர்களும் ஓர் நிலையான (Fixed Rate Mortgage) Mortgageஇனை பெற்றுக் கொள்ளலாம். இம்முறையானது வழமையான variable rateஇலும் சற்று அதிகமானதாகவே காணப்படும். மாறாக Variable rateஆனது ‘Bank of Canada’ இனால் அறிமுகப்படுத்தப்படும் ‘‘Prime Rate’ இன் மாற்றங்களுக்கேற்ப மாறுபடும். நிதி வழங்கும் நிறுவனங்கள் நீங்கள் Mortgage பெற்றுக்கொள்ளும் தருணங்களில் பொருந்-திக்கொள்ளும் வட்டி விகிதமானது இப் ‘Prime Rate’இனை அடிப்படையாக வைத்தே தீர்மானிக்கின்றது. நாட்டின் பொருளாதாரத்-தினை தீர்மானிப்பதில் இப் Prime Rateக்கும் ஓர் கணிசமான பங்கு உண்டு. தற்போதைய காலங்களில் Prime Rate ஆனது 5.75%இலி-ருந்து 5.5% மற்றும் 5.25% வரையும் குறைந்து கொண்டு வருவது யாவரும் அறிந்ததே. இந்த மாதமளவில் மீண்டும் ஓர் 0.5% குறைக்கப்படுவதற்கும் சாத்தியங்கள் இருப்பதாக கருதப்படுகின்றது. ஆகவே Variable Rate Mortgage வைத்திருப்பதன் மூலம் வட்டிவிகிதம் குறைக்கப்படும் வேளை களில் நாம் மீள்செலுத்தும் வட்டியின் அளவும் கணிசமான அளவு குறைவதற்கு சாத்தியமுண்டு. நாம் வங்கிகளில் பெற்று நுகரும் (LOC) Line of creditஇன் வட்டியும் இப் Prime Rate மூலமே தீர்மானிக்கிறார் கள். சிறு துளி பெருவெள்ளமல்லவா. சிந்திப்போம்.

### எனது புதுவீட்டுத்தரைகள் (2வருடம்) *Hard wood* இலானது. நாளாக நாளாக தரைகளில் இடைவெளிகள் அதிகரித்து காணப்படுகின்றது. இன்னும் சில இடங்களில் இவை சற்று துருத்தி காணப்படுகின்றது. இவற்றினை சீர் செய்வது எப்படி?

தினேஸ் ம. Scarborough

குளிர்காலங்களில் இவை அதிகம் எற்படு-கின்றது. மாறாக கோடைக் காலங்களில் (A/C)குளிரூட்டிகளினால் இவை சரிசெய்யப் படுகின்றன. அதாவது இவ்வாறு தரைகள் சேதமடைவதற்கு ஒரே காரணம் வீட்டுக்-

## வீடு - வினாவும் விடையும்

குள் பேணப்படும் ஈரப்பதன் மட்டுமே. எனது கருத்துப்படி உங்கள் வீட்டில் ‘Central Humidifier’ இன்னமும் பொருத்தப்படவில்-லை. அல்லது நீங்கள் உரிய முறையில் அதனை உபயோகிக்கவில்லை. இவ் central Humidifier ஆனது குளிர் காலங்களில் வீட்டுக்குள் எற்படும் வளிவரட்சியினை தீர்ப் பதற்கு பயன்தரும் ஓர் கருவி. இவை வீட்டின் தரைகள் தளபாடங்களின் பாதுகாப் பிற்கு மட்டுமன்றி எமது சுவாசத்திற்கும் பெரிதும் உதவும். இவை சுமார் $300-$600 வரை விலைகளில் உண்டு. இதனை உங்கள் FURNACE (காற்று செலுத்தி) உடன் இணைத்து வீடு முழுவதற்கும் ஈரப்-பதன் பேணலாம்.

### மாதாந்தம் செலுத்தும் *Mortgage* இனை குறைப்பதற்கு ஏதாவது வழிகள் உண்டா?

கிருபா க. Scarborough

நிச்சயம் உண்டு. இது ஒரு பொதுப்படை யான வினா. நீங்கள் வீடுவாங்கிய பின்னரா அல்லது அதற்கு முன்னரா போன்ற பல தகவல்களை அடிப்படையாக வைத்தே இதனை அணுகலாம். இருப்பினும் ஓர் அனுமானத்தில் அலசலாம்.

இதற்காக பல வழிகள் உண்டு. வீடு வாங்கும் வேளைகளில் அதிக முற்பணம் செலுத்தி வாங்குதல், மற்றும் குறைந்த

13ம் பக்கம் பார்க்க...

# Variable Rateல் Mortgage...

11ம் பக்கத் தொடர்ச்சி...

விலையுள்ள பகுதிகள் மற்றும் வீடுகளை தெரிந்தெடுத்தல் போன்றவை நாம் யாவரும் அறிந்ததே. சமீப காலங்களில் Lenders (Mortgage வழங்குபவர்கள்) பல விதமான திட்டங்களை அன்றாடம் அறிமுகப்படுத்திய வண்ணம் உள்ளனர். இவற்றுள் உங்கள் கேள்விக்கு அதிகம் பொருந்துவது Intrest Only Payment System. அதாவது நீங்கள் பெற்றுக்கொண்ட கடன் தொகைக்குரிய வட்டியினை மாத்திரம் செலுத்துவது உதாரணமாக நீங்கள் $2000.00 Mortgage Payment செய்பவராக இருப்பின் சுமார் $1200.00 வரையில் வட்டி அறவிடப்படும். ஆகவே உங்கள் மாதாந்த கட்டுப்பணம் $1200.00 ஆகவே காணப்படும். ஆனால், பெற்றுக்கொண்ட முதலில் எவ்வித மாற்றமும் இடம்பெறாது.

நீங்கள் Mortgageஇனை பெறும் போது 25 வருடகால Mortgageக்கு பதிலாக 40 வருட கால அளவினை தெரிந்தெடுப்பதன் மூலமும் மாதாந்த கட்டுப்பணம் குறையும். இம்முறைகள் யாவும் நுகர்வோர் எமக்கு பயனளித்தாலும் வட்டியை நம்பியே வியாபாரம் செய்பவர்களுக்கு பலன் அதிகம் வழங்க வல்லது என்பதனை நாம் கருத்தில் கொள்ளல் வேண்டும்.

**நாங்கள் 'Dish washer'இனை பாவிக்க எத்தணித்தபோது தண்ணீர் கசிவு ஏற்பட்டது. வீடு வாங்கும்போது, இதனை அதிகம் தாங்கள் பாவிக்க வில்லை என்று விற்றவர்கள் கூறிய தால் நாங்கள் நம்பினோம். இப்போ ஏமாற்றமாக இருக்கின்றது.**

மதியழகன். வி. Scarborough

எனது ஆலோசனைப்படி எதனையும் பரிசோதித்துப்பார்ப்பது நன்று. அனுபவஸ்தர்களின் சேவை (Home Inspectors) எப்போதும் கைகொடுக்கும். இருப்பினும், உங்களுக்கு கூறப்பட்டதுபோல் அதிகம் பாவிக்காத Dish Washes என்பது ஓர் உண்மையான கூற்றாகவே கருதலாம். Dish Washerக்கு அடியில் காணப்படும் ரப்பர் மற்றும் ரப்பர் உபகரணங்கள் தண்ணீர் வெளியில் சிந்தாமல் பாதுகாப்பு வழங்கும். நீண்ட நாள் உபயோகத்தில் இல்லாதபோது இவ் ரப்பர்களில் ஏற்படும் வரட்சி மற்றும் படிவுத்தன்மை காரணமாக இவை தமது தரத்தினை இழக்கின்றன. இவ் உபகரணங்களில் சில ஒருமுறை நீர்கசிவின் பின்னர் சரியாவதற்கு கூட சாத்தியம் உண்டு. ஓர் தகுதியானவரை வைத்து சரிபாருங்கள். இதுபோன்ற நிகழ்வுகள் Washerகளுக்கும் பொருந்தும்.

**'Green City', 'go green', 'green building' என்று எங்கு பார்த்தாலும் 'green' என்னும் பதம் நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றது. இதன் அடிப்படை என்ன?**

கற்பனா. கோ. Ajax

'நாட்டு வளம் பேணுவோம்' அதிகரித்துவரும் மக்கள் தொகையும் உலகில் குறைந்து செல்லும் இயற்கை வளமும் தற்போதைய 'green' தாக்கத்தை மக்கள் மத்தியில் ஏற்படுத்தியிருக்கின்றது. நாம் அன்றாடம் நுகரும் 'மின்சாரம்' மற்றும் 'இயற்கை வாயு' போன்றவற்றின் விலைகள் துரித கதிகளில் அதிகரிப்பது யாவரும் அறிந்ததே. சமீப கால ஆய்வுகளின் படி சுமார் 10 வருடங்களில் நாம் செலுத்தப்போகும் Bills (மின்சாரம், Gas) போன்றவை எமது Mortgage கட்டுமானத்தை விட அதிகமாக இருக்குமென்று கணக்கிடப்பட்டுள்ளது. இது போன்ற அச்சத்தினாலும், சூழல் மற்றும் நாட்டு வளங்களை காப்பதற்காகவும் இன்றைய ஆராட்சியாளர்கள் புதிது புதிதாக பல அரிய மற்றும் தீங்கு குறைந்த செலவு குறைந்த யுக்திகளை அறிமுகப்படுத்துகின்றனர். இவற்றுள் சில சூரிய கதிர்களால் இயக்கப்படும் மோட்டார்கள், மின் குமிழ்கள், காற்றினால் இயங்கும் கருவிகள் மற்றும் சிறிதளவு சக்தியினை நுகரும் உபகரணங்கள் போன்றவை. இவற்றை அறிமுகப்படுத்தப்படும் முறைகள் பசுமையானவை.




நாட்டுக்கும், மக்களுக்கும் பயன்தருபவை. ஆதலாலே நாங்களும் go green too'

வீட்டில் நாம் அன்றாடம் பாவிக்கும் உபகரணங்கள் மற்றும் மின்குமிழ்கள் போன்றவை 'Energy Saver' தரம் உடையனவா என்பதனை சரிபாருங்கள். சமீப காலமாக அறிமுகப்படுத்தப்பட்டு வரும் 'Smart Meter' போன்றவையும் சக்தி சேமிப்பு கருதியே அறிமுகப்படுத்தப்பட்டது. இது பற்றிய தகவல்கள் நாளாந்தம் இணையத்தளத்தில் புதிது புதிதாக அறிந்துகொள்ளலாம். Green city தகவல்களை நாமும் அறிந்து அமுலிலிட்டு நாமும் நலம் பெற்று நாட்டையும் காப்போம்.

நன்றி வாசகர்களே! மேலே கேட்கப்பட்ட வினாக்களில் பெரிதும் என்னைக் கவர்ந்த 'green'வினா எமது அடுத்த தலைமுறைக்கும் அதிகம் அவசியமானதொன்று நாம் அன்றாடம் எவ்வாறு சக்தி விரயத்தினை குறைக்கலாம் அதற்காக எவ்வாறான நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்பதையும், இதற்காக அரசாங்கத்தினால் வழங்கப்படும் சலுகைகள் மற்றும் ஆதரவுகள் போன்றவை பற்றிய ஓர் ஆய்வினையும் மத்திய மற்றும் மாகாண அரசாங்கம் இவ்வாறு தரமுயர்த்தப்படும் வீடுகளுக்கு 'GRANT' வழங்கும் திட்டங்களையும் அவற்றினை நாம் எவ்வாறு பெற்றுக் கொள்ளலாம் மற்றும் தொகை விபரங்கள் போன்றவற்றையும் அடுத்துவரும் இதழ்களில் பார்ப்போம். அதுவரை வந்தகாலத்தில் உங்களையும் இணைத்துக்கொள்ளுங்கள்.

■ ■ ■

# வாழ்க்கை சுவர்க்கமாவது இனிய இல்லமொன்றில்...

**Sheppard/ Neilson**



**$96,500**
2 Bedrooms, 2 Washrooms, Condo Apt

**Ellesmere/Birchmount**



**$188,500**
1+1 Bedrooms, 1 Washroom, Condo, Immaculate Luxury Condo. Tridel Built Steps To All Amenities, Indoor Pool, Hot Tub, T.V. Media Rm, Guest Suits, Fitness And Aerobic Centre, Party Room

**Markham/Lawrence**



**$284,900**
3+1 Bedrooms, 4 Washroom, Detached 2-Storey, Absolutely Well Kept Sparkling Clean And Bright 3 Bedroom, Finished Basement With 4Pc Bath

**Mccowan/Denison**




**$299,900**
3 Bedrooms, 2 Washroom, Link 2-Storey, Absolutely Well Maintained Home In Great Location.Close To Yrt,Ttc,Places Of Worship,Public & Catholic Schools,Park,Shopping

**Steeles/Brimley**



**$319,000**
3+1 Bedrooms, 3 Washroom, Link 2-Storey, Beautiful And Well Maintained Home,Features: Oak Staircase,Gleaming Hardwood Floorings Second And Main

**Brimley & Denison**



**$319,900**
3+1 Bedrooms, 3 Washrooms, Detached 2-Storey, Move In Condition,Strip Hardwood Floors On First And Second Floors, Ceramic Tiles In Bsmtapt. Totally Renovated Home Over 15K Fridge

**Denison/ Middlefield**



**$399,900**
3+2 Bedrooms, 3 Washroom, Link 2-Storey, 1600 Sqft Spacious, All-Briack Home W/ 2Bdrms, In-Law Suite, Sep Entrance, Ceramic Tiles In Hallway & Kitchen, New Furnace

**Denison /Markham**



**$354,900**
3 Bedrooms, 3 Washroom, Link 2-Storey, Very Demand Location!!..Premium Lot,Main Floor Laminate And Ceramic,2nd Floor Hardwood, The Whole House Freshly Painted

**Middlefield/Denison**



**$359,900**
3+1 Bedrooms, 3 Washroom, Move Wiht Your In-Law Complete Setup, Many Upgrade And Well Kept Home, Close To Mosque, School, Park, Yrt, Mall & Shopping Centre

**Markham/14th Ave**



**$365,900**
3 Bedrooms, 4 Washroom, Link 2-Storey, Spacious And Simply Gorgeous Home With Alots Of Upgrades Finished Basement With Kitchen And 4 Pc Bath

**Mccowan / Denison**



**$369,990**
4+1 Bedrooms, 4 Washroom, Detached 2 Storey, 2 Kitchens, Great For Inlaws. Close To All Amenites, Schools And Shopping.

**Markham/Dension**



**$379,000**
3 Bedrooms, 3 Washroom, Link 2-Storey, Truly Gorgeous House.Large Family Room With Corner Gas Fire Place. Large Bedrooms & Master W/Walk-In Closet & 5 Pc Ensuite With Oval Tub

**Dixie/Peterrobertson**



**$389,900**
4+2 Bedrooms, 4 Washroom, Detached 2-Storey, Beautiful, Very Neat, Large Home On Quiet Street. Huge Kitchen W/ Ceramic Floor. 2nd Floor Family Room W/ Fire Place

**Denison/Markham**



**$389,900**
4+1 Bedrooms, 4 Washroom, Link 2-Storey, Approx 2050 Sqft. Pot Lights, Extra Large Bsmt (Kitchen+Living Rm) Aaa Location. Walk To Store

**Mccowan/Highglen**



**$399,900**
4+1 Bedrooms, 4 Washroom, Link 2-Storey, Spent 1000'S Of $$$$$$$, Shows Beautiful Approx 2000 Sq Ft Plus Brand New Never Lived In Bsmt Apt With Sep Ent, Note: Hrdwd Flrs

**Middlefield & 14th Avenue**



**$407,000**
4+2 Bedrooms, 3 Washroom, Link 2-Storey, Immaculate, Backs On To Ravine, Original Owners, Spacious, Upgraded Kitchen With Pantry, Lots Of Extra Cupboards

**Steeles/Stains**



**$419,000**
4 Bedrooms, 3 Washroom, Detached 2-Storey, Excellent Location, 4 Bedroom Detached House On Demand Location.

**14th/9th Line**



**$469,900**
4 Bedrooms, 3 Washroom, Detached 2-Storey, Brand New House. Never Lived In. Hardwood Floor Throughout

**14th Ave/Markham**



**$749,900**
4 Bedrooms, 5 Washroom, Detached 2-Storey, Custom Built,Breath Taking & Elegant,Approx 3865Sqft Of Luxury,Only 1 Model In Area,Grand Foyer W/Soaring 2-Storey Hallway

**Kennedy/Highglen**



**$1,180,000**
4+2 Bedrooms, 6 Washrooms, Detached 2-Storey, Immaculate Custom Built Executive Home, upgrds Granite & Hardwood Fl Thru-Out, Deco Colums

**I can also assist you with: Mortgage Financing, Home Inspection, Real Estate Lawyer**

**WIN**

**வெல்லுங்கள் புத்தம் புதிய BMW**

என் மூலம் வீடு, வியாபாரம் நிலையங்களை வாங்கும் போதோ அல்லது விற்கும் போதோ ஒரு புத்தம் பதிய வாகனத்தை வெல்லும் அதிஷ்டசாலியாகிறீர்கள்!*






**Elaguppillai (Mike) Srinathan,** B.Sc.
Sales Representative

**Direct: 416.276.1225**

esrinathan@trebnet.com
**HOMELIFE/GTA Realty Inc.** 1711 McCowan Rd., Suite 206, Toronto, ON M1S 3Y3

HomeLife Higher Standards

* Some Terms and conditions may apply

digi Media Creations - 416.467.4952

# ஏன் வந்தது 'பேன்'



மஞ்சுளா ராஜலிங்கம்

பேன் என்பது என்ன? இது சிறிய, பறக்கும் தன்மையற்ற ஒரு உயிரினம். தலையின் மண்டைப்புறத்தில், மற்றும் தலைமுடியில் பதுங்கி... இல்லை, சுதந்திரமாகவே வாழும் பேன்கள் உயிர் வாழ்வதற்கு ஒரு சிறிய அளவிலான இரத்தத்தையே மனிதனின் மண்டையிலிருந்து உறிஞ்சிக் கொள்கின்றன. இவை பார்த்தாலே அருவருக்கத் தக்கவை. இவை குறிப்பாக மூன்று வயதிலிருந்து பனிரெண்டு வயதுக்குட்பட்ட குழந்தைகளிலேயே அதிகமாகக் காணப்படுகின்றன. அதிலும் ஆண்பிள்ளைகளை விட பெண்பிள்ளைகளின் முடிகளிலும், தலைப்பரப்புக்களிலும் இவற்றைக் குறிப்பாக அவதானிக்கலாம்.

பேன்களால் எந்தவித உயிராபத்துக்களும் ஏற்படும் என்று சொல்வதற்கில்லை. இவை நோய் பரப்பும் காரணிகளாகவும் இருப்பதில்லை. ஆனால் இவை இலகுவில் ஒருவரில் இருந்து இன்னொருவருக்குத் தொத்தக் கூடியவை. மற்றும் அவைகள் தலையில் தாங்க முடியாத எரிச்சலூட்டும் மனவுணர்வைத் தூண்டக்கூடியவை. இவைகள் கடிக்கும்போது ஏற்படும் அரிப்பானது குழந்தைகளால் தாங்கக் கூடியதாக இருப்பதில்லை. அத்துடன், அவை கடிக்க, குழந்தைகள் சொறிய நேரும் வேளையில், மண்டையில் இவை காயங்களாக மாறி பின்னர் ஒரு பெரிய மாறாப் புண்ணையே தோற்றுமளவுக்கு வாய்ப்புகள் உள்ளது. இதனால் தீராத தோல் அரிப்பும் மண்டையோட்டில் உண்டாகலாம்.

### பிள்ளையின் தலையில் பேன் இருப்பதை எப்படிக் கண்டு பிடிப்பது?

மிகவும் சிறிய அளவில் இருந்தாலும், வெறும் கண்களுக்கு பேன் இலகுவாகப் புலப்படும். தலையை (முடியை) அவதானமாக ஆராயுமிடத்து, உங்களுக்கு கண்ணில் தோன்றக்கூடியவை?

பேனின் முட்டைகள், அதாவது ஈர் எனப்படும் இந்த சமாச்சாரமானது, சிறிய மஞ்சள் அல்லது காப்பிநிறத்தில் முத்துக்கள் போல், குஞ்சு பொரிப்பதற்குமுன், தென்படும். குஞ்சுகள் பொரித்தபின், அவை நிறமிழந்து வெள்ளை, அன்றி நிறமின்றி காணப்படும். ஒவ்வொரு முடிக் கம்பியை அல்லது மண்டையோட்டை அண்டியே பேன்கள் இம் முட்டைகளை இடுகின்றன. இதற்குக் காரணம், இம்மாதிரி இடங்களில் தான் சரியான சரிசம வெப்பநிலையைக் கொண்ட வசதி அம்முட்டைகளுக்கு குஞ்சு பொரிக்கும்வரை கிடைக்கும். இவற்றைப் பார்த்தால் சமயங்களில் பொடுகு போன்றும் காட்சி தரவல்லவை. ஆனால் பொடுகு தட்டுவதைப் போல இவற்றைத் தட்டிக் கொட்டவோ, அசைத்து உதிர்க்கவோ முடிவதில்லை. நிறைய பேன்களைக் கொள்ளாத ஒரு குழந்தையின் தலையில், பேனின் நடமாட்டத்தை மண்டையோட்டின் பகுதியில் மிதப்பதைக் காண்பதைவிட, நிறைய ஈர்களைத் தான் முடிகளின் ஓரத்தில் காணலாம். முட்டைகள் இட்ட ஒரு வாரத்திலிருந்து இரண்டு வாரங்களுக்குள் முட்டைகள் குஞ்சுகளைப் பொறித்துவிடும்.

### வளர்ச்சியடைந்த பேன்களும் குஞ்சுகளும்:

ஒரு பேனின் வளர்ச்சியானது ஒரு எள்ளை விட ஒன்றும் பெரியதென்று சொல்வதற்கில்லை. இது வெளிறிய காப்பி நிறத்தில் இருக்கும் (பொதுவில், கருத்த முடி உடையவர்களின் தலைகளில் உள்ள பேன்கள் மேற்குறிப்பிட்ட நிறத்தை விடக் கொஞ்சம் கருமையாக இருப்பதாகத் தோன்றும்). குஞ்சுகள் இந்தப் பேன்களைவிட மிகவும் சிறியதாக இருக்கும். இவை முட்டைகளை விட்டு வெளிவந்த ஏழு நாட்களுக்குள்ளேயே பெரிய பேன்களாக உருவெடுத்து விடும். பேன்கள் இரத்தத்தை ஒவ்வொரு 4மணி நேரத்திலிருந்து 6மணிநேரத்துக்கு ஒரு முறை உறிஞ்சும். ஆனால் பேன்கள் தலையைவிட்டு விலகி இருந்தாலும், மூன்று நாட்களுக்கு மேல் சாப்பிடாமலே உயிர் வாழும்.

### அரிப்பு

பேன்கள் தலையில் கடிக்கும்போது, அரிப்பும், சொறியும் வந்துவிடுகின்றது. ஆனாலும் சொறிதல் உணர்வானது கடித்த உடனேயே தொடங்குவதில்லை. இது உங்கள் குழந்தையின் தலை எவ்வளவு கடிகளைத் தாங்கிக் கொள்ளக் கூடிய மென்மையான தோலைக் கொண்டுள்ளது என்பதைப் பொறுத்தே அமையும். பேன்கள் கடித்தாலும், குழந்தைகள் தலையைச் சொறிந்து உணரவே பல வாரங்கள் பிடிக்கும். ஆனால் குழந்தைகள் தம் மண்டையில் ஏதோ ஒன்று ஊர்வதை அல்லது மிதப்பதை உணர்ந்து அதைத்தான் பெற்றோரிடம் சாடையாகச் சொல்லக்கூடும்.

### சின்ன, சிவந்த வீக்கங்கள்

சில பிள்ளைகளுக்கு இந்த அரிப்புக்கள் பாதிக்காது. மற்ற சில குழந்தைகளுக்கு, இந்த அரிப்புக்கள் கடுமையாகி, அதிலிருந்து திரவம் வடிதல், காய்ந்து உதிர்தல் போன்ற தொல்லைகளும் உண்டாகலாம். சிலருக்கு தலையிலுள்ள சுரப்பி ஓட்டைகளே வீக்கங்களுடன் காணப்படலாம். இடைவிடாது தலையை சொறியுமிடத்து, அது புண்ணாக மாறி பக்டீரியா பரவும் வாய்ப்புக்கள் உள்ளது (கடித்த இடத்தைச் சுற்றி, சிவப்பாக வீங்கியிருந்தாலும், அந்தத் தோல் மிருதுவாக இருக்கும்). இதை Topical அல்லது Oral Antibiotic எனும் மருந்துகளைக் கொண்டு குணப்படுத்தலாம்.

குழந்தைகளின் முடிக்கற்றைகளைப் பகுதி பகுதியாகப் பிரிப்பதின் மூலம் இந்த முட்டைகள் தலைகளில் உள்ளதா என்பதைக் கண்டு பிடிக்கலாம். இதை தலை முடி, மண்டை, காதின் பின்புறம், மற்றும் மண்டையின் முடி தொடங்கும் விளிம்புப் பகுதிகள் ஆகியவற்றில் அதிகம் படர்ந்திருக்கும். ஒரு குவிவில்லை, மற்றும் பிரகாசமான வெளிச்சமுள்ள பகுதியில் வைத்து இவைகளை ஆராய்வதன் மூலம் இவற்றை இலகுவில் இனங்காணலாம். ஆனால் ஒரு சில பேன்களோ அன்றி குஞ்சுகளையோ இவ்வாறு இனங்காண்பதென்பது அரிது. இவை விரைவில் கண்பார்வையில் படாதவாறு ஓடி ஒளியக் கூடியவை.

உங்கள் குழந்தை படிக்கும் பள்ளியில், அல்லது அவர்கள் தங்கி வரும் குழந்தைக் காப்பகத்தில், சமீபத்தில் யாருக்காவது பேன் இருந்ததா என்பதைக் கேட்டறியுங்கள். அதேபோல உங்கள் குழந்தையின் தலையிலும் பேன் வந்து விட்டால், உடனே உங்கள் குழந்தைகள் படிக்கும் பள்ளிக்கூட நிர்வாகத்தைத் தொடர்பு கொண்டு, அவர்களுக்கும் உங்கள் குழந்தையின் நிலையினைத் தெரியப் படுத்துங்கள்.



### பேன்கள் தொற்றக் கூடியவையா?

பேன்கள் அதிவேகமாக ஒருவரிலிருந்து இன்னொருவருக்குப் பரவக் கூடியவை. அதுவும் குழுக்களாக சேர்ந்து இருக்கும் இடங்களில் (பள்ளிக்கூடங்கள், குழந்தைக் காப்பகங்கள், சிறிய குழந்தைகளின் விழாக்கள், விளையாட்டுத் திடல்கள், விளையாட்டுக் கழகங்கள், காம்ப்பிங்) இந்த சந்தர்ப்பங்கள், மேலும் வேகமாக அதிகரிக்க வாய்ப்புக்கள் உள்ளன.

பேன்களால் குதிக்கவோ, பறக்கவோ முடியாது. ஆனால் அவைகளின் கால்களில் உள்ள நகங்கள் போன்ற அமைப்புக்களைக் கொண்டு, அவைகளால் உறுதியாக முடியைப் பற்றிக் கொண்டு வேகமாகத் தவழ இயலும். பேன்கள் தலைக்குத் தலை வழியாகத் தான் பெரும்பாலும் பரவும், ஆனால், ஆடைகள், படுக்கை விரிப்புக்கள், சீப்பு, பல்துலக்கி, தொப்பிகள் போன்றவற்றைப் பகிர்ந்து பாவிப்பதன் மூலமும் பேன்கள் பரவலாம். குழந்தைகளும், இளவயதுப் பிள்ளைகளுமே பெரும்பாலும் இம்மாதிரியான பேனின் ஆதிக்கத்துக்குட்படுகிறார்கள், ஏனெனில் இவர்கள் வயதினில் தான் கூடுதலாக ஒருவரோடொருவர் நெருங்கிப் பழகுவதும், பொருட்களைப் பண்டமாற்று செய்வதும் ஒரு பழக்கமாக அந்த வயதில் இருப்பதைக் காணலாம். சிலவேளை நீங்கள் உங்கள் வீட்டில் வளர்க்கும் செல்லப் பிராணிகள் மூலமும் இந்தப் பேன் ஆளாளுக்குப் பரவுகின்றதா என்ற சந்தேகம் உங்களுக்கு எழலாம். ஆனால் தப்பான கணிப்பு. மிருகங்கள் நமது பேனை தம்முள் வாங்கி இன்னொருவருக்குப் பரப்புவதில்லை.

### பேன்களை ஒழிப்பது எப்படி?

உங்கள் மருத்துவரை அணுகும் பட்சத்தில்,

16ம் பக்கம் பார்க்க...

# ஏன் வந்தது பேன்...

15ம் பக்கத் தொடர்ச்சி...

அவர் உங்கள் குழந்தைக்கு மருத்துவக் கலவை கொண்ட ஷாம்பு, அல்லது களிம்பு போன்ற ஒன்றை பாவிக்கும்படி பணிக்க லாம். இவற்றை சாதாரணமாக கடைகளில் வாங்கலாம். அல்லது மருந்துச் சீட்டுக்க ளும் சில சமயங்களில் வைத்தியரால் எழுதித் தரப்படலாம். இப்படி எதை பாவிக்க வேண்டுமென்று சொல்வது, முன்னர் நீங்கள் உங்கள் குழந்தைக்கு என்ன விதமான மருத்துவ அணுகுமுறைகளை, இப்பேன் களை ஒழிக்கப் பயன்படுத்தினீர்கள் என்ப தைப் பொறுத்தே அமையும். ஆனாலும் இம்மாதிரி மருந்துகளை அடிக்கடி, மற்றும் கொடுக்கப்பட்ட அளவுகளை மீறிப் பாவிப் பதைத் தவிருங்கள். பாவிக்கும் முறை பற்றி அந்த சீசாவின் வெளியில் விரிவாக விளக்கப் பட்டிருக்கும். அதை முறையாகக் கையாள வேண்டும். மருந்து ஒழுங்காக வேலை செய்கின்றது என்பதையும் கவன- மாகக் கண்காணிக்க வேண்டும். மருத்துவர் இன்னொரு சிறப்பான மருந்து ஒன்றைக் கொண்டும் முடியைக் கழுவச் சொல்ல லாம். இதனைச் செய்தபின், தலைமுடியை மெல்லிய பற்களைக் கொண்ட சீப்பு ஒன்றி னைக் கொண்டு வாருவதன் மூலம், ஈர்க- ளை மிக இலகுவாக உதிரச் செய்யலாம்.

இம்மாதிரி மருந்துகள் பேன்களையும், ஈர்களையும் ஓரிரு நாட்களில் அறவே ஒழித்துவிடும், ஆனால் அரிப்பு முற்றிலும் அகன்று போக மேலும் சில நாட்கள் எடுக் கும். ஆனால் உங்கள் மருத்துவர் இம் மருந்துகளை ஒரு 7இலிருந்து 10நாட்களுக் காவது பாவிக்கச் சொல்வார். இப்படிச் செய்வதன் மூலம், பேன்களும், ஈர்களும் அறவே இல்லாது போய்விடும், அது மட்டு மல்லாது மேலும் இப்படி பரவும் வாய்ப்புக் களும் அறவே ஒழிக்கப் பட்டுவிடும்.

உங்கள் குழந்தை இரண்டு அல்லது அதற்குக் குறைந்த வயதினராக இருந் தால், இம்மாதிரி மருந்துகளைப் பாவிப்ப தை அறவே தவிர்த்தல் வேண்டும். பேன் களையும், ஈர்களையும் உங்கள் கையால் ஒவ்வொன்றாக அகற்றுவதே சிறந்த முறை யாகும்.

பேன்கள் தலையை விட்டு இறங்கினால், அதன்பின், பலகாலம் உயிர் வாழாது. எனவே பொறுமையுடன் இந்தப் பேன்களை அறவே ஒழிக்கும் வழியைப் பார்த்துக் கொள்ளுங்கள். கீழ்க்கண்ட சில எளிமை யான வழிகளைப் பின்பற்றுவதன் மூலம், பேன் மற்றும் ஈர் என்பன தலைகளில் பெருகுவதையோ, பரவுவதையோ, அன்றி தொற்றுவதையோ நடக்காமல் பார்த்துக் கொள்ளலாம்.

சமீபத்தில் உங்கள் வீட்டில் யாருக்காவது பேன் தொல்லை இருந்திருந்தால், உங்கள் படுக்கை விரிப்புக்கள், தலையணை உறை கள் போன்றவற்றை கடுமையான சுடுநீரில் (130பாகை பரனைட் அல்லது 54.4 பாகை செல்சியஸ்) கழுவி பின்னர் அதை ஆடை கள் உலரப்போடும் இயந்திரத்தில், வெப்ப இயக்கத்தில் 20 நிமிடங்கள் போல் காயவிடவும்.
Washing machineஇல் போடமுடியாத துணி களை Dry Clean செய்து கொள்ளவும்.

கழுவமுடியாத அல்லது dry clean செய்ய முடியாத, பஞ்சடைத்த விளையாட்டுப் பொருட்கள், ஆடைகள், படுக்கை விரிப்புக் கள் போன்றவற்றை ஒரு பொலிதின்பையில் இறுக்கமாகக் கட்டி 2 வாரங்களுக்கு ஒரு ஓரமாக வையுங்கள்.

தரைவிரிப்புக்கள், துணி வைத்துத் தைத்த தளபாடங்கள் முதலியவற்றை Vacuum செய்யுங்கள்(இது வீடு, கார் இரண்டுக்கும் பொருந்தும்).

அமிலத்தில் அல்லது மருத்துவக் கலவை கொண்ட ஷாம்புவில் சீப்பு, தலைமுடியைக் கட்டப் பயன்படும் நாடாக்கள், பட்டிகள், bands, head bands, brushes போன்றவற்றை ஒரு மணிநேரம் போல் ஊற வையுங்கள். இவற்றை நீங்கள் விரும்பின், சுடுநீரிலும் கழுவலாம் அல்லது தேவையில்லையாயின் தூர எறிந்தும் விடலாம்.

ஒரு வீட்டுக்குள்ளேயே பேன்கள் ஒருவரிலி ருந்து இன்னொருவருக்குத் தொற்றும் அபாயம் இருப்பதால், குடும்பத்தின் மற்ற அங்கத்தவர்களும் சில சிகிச்சை முறை களைப் பின்பற்றிக் கொள்வது நல்லது.

## பேன்களை ஒழிக்கும்போது செய்யக்கூடாதவை:

உங்கள் பிள்ளைக்கு மருந்து போட்டுக் கழுவிய தலைமுடியை உலரவைக்கும் போது, எக்காரணம் கொண்டும், தலைமுடி உலர்த்தும் கருவியை உபயோகப் படுத்தா தீர்கள். ஏனெனில் அந்த மருந்துகளில் தீ பிடிக்கக் கூடிய மாதிரியான தன்மையைக் கொண்ட இரசாயனங்கள் கலக்கப் பட்டிருக் கலாம்.

பேன் மருந்தைப் பாவிக்க முன்னர், எக்கார- ணம் கொண்டும் ஷாம்பு மற்றும் கண்டிஷனர் சேர்ந்து உள்ள தயாரிப்புக்களைப் பாவிக்க வேண்டாம்.

மருந்து பாவித்த நாளிலிருந்து அடுத்த ஒன்று அல்லது இரண்டு நாட்களுக்காவது பிள்ளையின் முடியை மீண்டும் கழுவ வேண்டாம்.

பெரிய பெரிய பேன் அகற்றும் நிறுவனங் களின் உதவியை நாடவேண்டாம். ஏனெ னில் அவர்கள் பாவிக்கும் மருந்துகள் மிக வும் கடுமையானதாகவும், தோலைப் பாதிக் கக் கூடிய தன்மையைக் கொண்டதாகவும் இருக்கும்.

ஒருவருக்கு ஒரேவிதமான மருந்தையே மூன்று தடவைகளுக்கு மேல் பாவிக்க வேண்டாம். பிள்ளையின் தலையின் அந்த மருந்தைப் பாவித்த பின்னும், எந்த பலனும் தெரியாவிட்டால், மருத்துவர் இன்னொரு விதமான மருந்தை அறிமுகப்படுத்தக் கூடும்.

ஒன்றுக்கு மேல் வித்தியாசப்படும் மருந்து களை அறவே தவிர்க்கவும். ஒரே தடவை யில் ஒரே வகையைப் பாவிப்பதுதான் மிகவும் சிறந்தது.

## பேன் வராமலே தடுப்பது எப்படி?

தலையில் பேன் பெருகினால், அதற்காக சுத்தமான தலையில்லை, சுகாதாரம் முறை யாகப் பின்பற்றப்படவில்லை என்று அர்த்த மில்லை. பேன் என்பது சிறுவர்களுக்கு இனம், மதம் தாண்டி வரக்கூடியதென்ப தால், எப்பொழுதும் தலைக்கு முழுகுவதும், குளிப்பதும் தவறாது செய்ய வேண்டிய ஒரு காரியமாகும்.

இங்கே குறிப்பிடப்பட்டுள்ள சில வழிமுறை களைப் பின்பற்றுவதன் மூலம், பேன்கள் தலையில் வாசம் செய்வதையும், பரவ முற்படுவதையும் அறவே தவிர்க்கலாம்:

உங்கள் குழந்தைகளை தலையுடன் தலை நெருங்கி விளையாடும் சந்தர்ப்பங்களைத் தவிர்க்கச் சொல்லுங்கள்.

குழந்தைகளிடம் அவர்களின் சீப்புக்கள், தொப்பிகள், scarves, bandanas, ribbons, barrettes, hair ties or bands, துவாலைகள், தலைக்கவசம், அல்லது மற்றவர்களின் எந்த வொரு பிரத்தியேகப் பொருளாக இருப்பி னும், அவற்றில் பேனின் தொல்லை உள்- ளதோ இல்லையோ, அவற்றை யாருடனும் பகிர்ந்து கொள்ளக் கூடாது என்று சொல்லிக் கொடுங்கள்.

பேன் உள்ள ஒருவர் பாவித்த தலையணை கள், படுக்கை விரிப்புக்கள், தரைவிரிப்புக் கள், போன்றவை இருந்தால், அந்த இடத்தில் உங்கள் குழந்தைகள் அவற் றைப் பாவிக்காதவாறு பார்த்துக் கொள்- ளுங்கள்.

உங்கள் வீட்டில் எந்த அங்கத்தினராவது, அண்மையில் பேன்களால் பாதிக்கப்பட்ட ஒருவருடன் பழகியிருந்தால், அந்த அங்கத் தினர் தலையில், 3அல்லது 4நாட்களுக்கு ஒருமுறை அவர் தலையில் பேன்களுக் கான அறிகுறி தென்படுகின்றதா என்று கவனமாக ஆராயுங்கள். ஈர்கள் இருந் தாலே, உடனே அவருக்குத் தேவையான மருத்துவ அவதானிப்பை உடனே அளித்து அவற்றை அப்புறப்படுத்துங்கள்.

■ ■ ■

# இரத்தக் கொதிப்பு...

7ம் பக்கத் தொடர்ச்சி...

கட்டம் 3

## மார்படைப்பு அல்லது இதயத் தசையிறப்பு (Heart Attack Or Myocardial Infarction)

மார்படைப்பின் பொழுது இதய நாடிகளின் ஏதோ ஒரு பகுதியில் குழாய் முற்றாக அடைக்கப்படுகிறது. மார்படைப்பின் பொழுது ஏற்படும் குணங்குறிகள் Anginaவின் பொழுது ஏற்படும் குணங்குறிகளை விட வேறுபடலாம். அநேகமான மார்படைப்புக் கள் Anginaவில் வரும் நோவு போன்ற எச்சரிக்கைச் சைகை இல்லாமலும் ஏற்படலாம். மேலும் 20வீதமான மார்படைப்பு நோய் எந்தவித நெஞ்சுவலியும் உணரப்படாமல் உண்டாகின்றது. இந்த அமைதியான மார்படைப்புக்குரிய காரணங்கள் இன்னமும் கண்டுபிடிக்கப்படவில்லை. ஒரு எடுகோள் என்னவெனில் நீண்டநாள் நீரழிவு நோய் வியாதியுடையவரின் நரம்புகள் செயலிழப்பதால் அத்தகையவர்கள் நோவை உணரமாட்டார்கள் என்பதே.

அதேபோல் சமியாக்குணம், சில சுவாச நோய்கள், பிரிமென்தகட்டில் ஏற்படும் உறுத்தல் என்பனவும் மார்படைப்புப் போன்ற நோவை வெளிக்காட்டும். இதனால் வைத்தியர் ஒருவரே உங்களுக்கு ஏற்பட்ட நோயை சரியாகத் தீர்மானிக்கக் கூடியவராக இருப்பார்.

வைத்தியர் உங்களுக்கு இரத்தம் கட்டிப்படாமல் இருப்பதற்கு அஸ்பிரின் வில்லை, மற்றும் குருதிக்குழாய்களை அகட்டி குருதி விநியோகத்தைக் கூட்டவல்ல Nitro Glycerin போன்ற வில்லைகளுடன், கொலெஸ்ரோல், நீரிழிவு, இரத்த அழுத்தம் போன்ற நோய்களைக் கட்டுப்படுத்தும் மருந்துகளையும் உங்களுக்குத் தரலாம்.

## குருதிக் குழாய்கள் அடைபடுவதற்குரிய காரணிகள் என்ன?

வாழ்க்கை முறைகள்

சமபல உணவை விடுத்து ஏனோதானோவென்று எமது உடலுக்கு அவசியமற்ற உணவை அதிகமாக புசித்தல்.

- சோம்பேறித்தனம்
- உடற்பயிற்சியின்மை
- போதிய தூக்கமின்மை
- மதுபானம்
- புகைத்தல்
- வயது மாற்றம் - வயோதிபம்
- மனத்தாங்கல்கள்
- மகிழ்ச்சியற்ற வாழ்க்கை
- வீட்டில். வேலைத்தளத்தில் பிரச்சினைகள்
- பரம்பரை நோய்கள் - கட்டுப்பாட்டில் இல்லாத நோய்கள்
- சில இருதய வியாதிகள்
- ஈரலில் அதிகளவு கொலஸ்ரோல் உற்பத்தியாதல்
- நீரழிவு அல்லது சலரோகம்
- தைரோயிட்டுச் சுரப்பி நோய் (குறைந்த சுரப்பு)
- இரத்தக் கொதிப்பு

மேற்கூறிய காரணிகளைப் பார்த்தீர்களானால் அதில் வயது மாற்றத்தையும் பரம்பரையையும் நாம் கட்டுப்படுத்த முடியாது. ஏனைய காரணிகள் எல்லாவற்றையும் நாம் நினைத்தால் நன்கு மாற்றியமைக்கலாம். பல இலகுவான ஆலோசனைகள் உண்டு. பலர் அவற்றினை ஒழுங்காக பின்பற்றுவதில்லை. வாழ்க்கைமுறைகளை மாற்றிக்கொண்டால் வயோதிபத்தையும் பின்போடலாம். புதிதாக வேறொரு நாட்டிற்கு குடிபெயரும் பொழுது உறவினர் பிரிவு, வேற்றுச்சூழல், வேலைப்பளு, புதிய இடத்திற்கேற்ப எம்மை இயைபாக்கி கொள்ளல் போன்ற பிரச்சினைகள் இருக்கத்தான் செய்யும்.

## மார்படைப்பின் குணங்குறிகள்

### ஆண்கள்

- நெஞ்சுவலி, நெஞ்சு இறுக்குமாற்போல் உணர்வு
- சிலருக்கு நெஞ்சுவலி இருக்காது
- சில நிமிடங்களுக்கொருதடவை வந்து வந்து போகும் நெஞ்சு நோவு.
- இடதுகை, தாடை, கழுத்து, இருதோள்கள், சிலசமயங்களில் வலது கை ஆகியவற்றினூடாக ஊடறுத்துச் செல்லுமாற்போல் நோவு.
- அதிக வியர்வை
- வாந்திக்குணம்
- தலைச்சுற்று, மூச்செடுக்க கடினமாக உணர்தல்.

### பெண்கள்

- ஆண்களைப்போல் பெண்களில் சான்று பகரக்கூடிய குணங்குறிகள் குறைவு. எனினும் சிலர் நெஞ்சுவலி என்று முறையிடுவார்கள்.
- மூச்செடுக்கச் சிரமம்
- அதிக களைப்பு
- வயிற்றில் ஏதோ செய்கிறது போன்ற உணர்வு

## என்ன செய்யலாம்

- உடனே 911 ஐ அழையுங்கள்
- நோயாளிக்கு வசதியாக நல்ல ஓய்வு தரும் வகையில் கிடத்துங்கள்.
- நோயாளி சுய நினைவுடன் இருந்தால், விழுங்க முடியுமாயின் அஸ்பிரின் வில்லையை பருகக் கொடுக்கவும்.
- நோயாளி Nitro Glycerine என்ற குருதிக் குழாய் அகட்டும் மருந்து பாவிப்பவராயின் அதனைப் பாவிப்பதற்கு உதவி செய்யுங்கள்.
- நோயாளியின் இதயத்துடிப்பு, சுவாசம் இரண்டையும் கண்காணித்தபடி இருங்கள்.
- அம்புலன்ஸ் வண்டி வரமுதல் இதயத் துடிப்பு, சுவாசம் என்பன அற்றுப்போகின் உடனே முதலுதவியைத் தொடங்கவும்.

மார்படைப்பு ஏற்பட்ட எல்லோரும் இறப்பதில்லை. இருதயத் தசைகளின் சிறிய பகுதி பாதிப்படையும் பட்சத்தில் பாதிக்கப்பட்ட இருதயத் தசைகளின் இடத்தைப் பொறுத்து விளைவுகள் அமையும். பாரிய அளவில் மார்படைப்பு நிகழ்ந்து பெரும்பகுதியான இதயத் தசைகள் பாதிக்கப்படும் பொழுது இருதயம் இயங்காது நின்றுவிடும். இந்த இடத்தில் Cardio- Pulmonary Resuscitation (CPR) என்கின்ற மீளவுயிர்ப்பித்தல் செய்முறை கைகொடுத்து உதவுகின்றது. மார்படைப்பால் இறந்த ஒருவரை 4 நிமிடங்கள் தொட்டு 8 நிமிடங்களினுள் மீளவுயிர்ப்பிக்கும் சாத்தியம் உண்டு. நான்கு நிமிடங்களினுள் CPR செய்வது சாலவும் நன்று. நாலு தொட்டு எட்டு நிமிடங்கள் வரையுள்ள காலப்பகுதிக்குள் மூளையிலுள்ள கலங்கள் பிராண வாயுவின்றி இறக்கத் தொடங்கும். இக்கால வரையினுள் CPR முதலுதவியை மனம் சோராது நன்கு தேர்ச்சி பெற்ற ஒருவர் தொடர்ந்து அந்நபருக்கு கொடுப்பாராயின் அவரது இருதயம் குருதியை மூளைக்குச் செலுத்திய வண்ணம் இருக்கும். அத்துடன் செயற்கை சுவாசமும் கொடுத்தல் அவசியம். இதனைச் சிகிச்சை நிலை இறப்பு (Clinical Death) என்று கூறுவர். அதாவது முதலுதவி மூலம் இறந்தவரை மீள எழுப்புவதாகும். எட்டு நிமிடங்களின் பின்பு மூளைக் கலங்கள் இறக்கத் தொடங்கியவுடன் பின்பு முதலுதவி பயன்கொடுக்காது போகலாம். எதற்கும் முயற்சியை கைவிடக் கூடாது. பின்பு நிரந்தரமாக ஏற்படப்போகும் இறப்பை தவிர்க்கலாம். இதனை உயிரியல் இறப்பு (Biological Death) என்று கூறுவர்.

ஒரு குடும்பத்தில் ஒருவராவது முதலுதவி படித்திருப்பதன் நோக்கம் இத்தால் உணரப்படுகிறது. ஒரு விலைமதிக்க முடியாத உயிரைக் காப்பாற்றிய பொழுது உங்களுக்கு ஏற்படும் மகிழ்ச்சி எத்தகையது என்பதை சிந்தித்துப் பாருங்கள்.

■ ■ ■



மூலிகைத் தயாரிப்புக்கள்
புதிய டிசைன்களில் சபோனா காப்புகள்
The ERVAMATIN HAIR LOTION
உங்கள் முடியுதிர்வை தடுக்கவும் மீண்டும் தலைமயிர் வளரவும் மிக உன்னதமாக தொழில் புரிகிறது எவமாட்டின் மூலிகை ஒளடதம்! உலகெங்கும் பல்லாயிரக்கணக்கானவரின் பாராட்டுதலைப் பெற்ற மூலிகைத் தயாரிப்பு. இப்போது எவமாட்டின் சாம்பூவும் கிடைக்கிறது.
SABONA
Tel: 416•264•8787
க்லூட்டியலா
பானமானது மிகுதியான உடல் கொழுப்பை குறைக்கக் கூடியதும், ஊமைச் சதை பெருகுவதை தடுக்கவும், கொழுப்பினால் விளையக் கூடிய கெடுதியினை கட்டுப்படுத்தவும் வழிவகுக்கிறது.
டயபீனா
இது உடலில் மிகுதியான குழுக்கோசினை குறைக்கக்கூடியது. கண்டிப்பாக நீரிழிவு நோயினால் வருந்துபவர்கள் மட்டுமே பாவிக்கவேண்டியது.
இயற்கை மூலிகையிலான தலை முடி மை
இயற்கை மூலிகையான மருதாண்டி கொண்டு செய்யப்படும் இவ் மை உங்கள் தலை முடியையும் நன்கு பராமரிக்கிறது.
கொன்சிடாப் மலச்சிக்கலுக்கு எதிராக போட்டியிடும் சக்திவாய்ந்தது. உடலிலிருந்து கழிவுப் பொருட்களை இயற்கையான முறையில் வெளியேற்றுவதற்கு உதவுகிறது.
Dreamron HENNA
மகிழ்ச்சிகரமான தாம்பத்திய உறவுக்கு
இயற்கையின் மூலிகைகொண்டு தயாரிக்கப்பட்ட பானம். இருபாலாருக்கும் உகந்தது.
லோங்லைஃப்
இதனை தினமும் அருந்துவதன் மூலம் எமது சரீரத்தின் வெளித்தோற்றத்தையும் திடகாத்திரதன்மையையும் விருத்தி செய்து கொள்ளலாம்.
www.dreamron.ca www.mediherbs.ca
இங்கேயும் விற்பனையாகின்றன!
மிக விரைவில் ஐரோப்பா எங்கும் விற்பனையாகவிருக்கின்றன
New Spicy Land 416 292 9769
Daily Needs 416 490 7703
Jaffna Super Store 416 289 8812
M&S Convenience 416 444 8202
Eera Super Market 416 269 2622
Durcaa Supermarket. 905 796 6762
Priyas 905 415 8508
Amazon Health Care
www.amazonhealthcare.com 2602, Eglinton Ave East (Midland/ Eglinton)
JayaCS•416•275•0070


Buy or Sell any properties through us, and WIN this brand new BMW and more..
M CL 4554
$389,900
Beautiful house in Markham Area. 3 bedrooms with Finished basement. Close to Everything. Lots of Upgrades.
Justin William-Broker
Cell:416-803-7344
$154,900
Prime Scarborough Area. An Absolute Gem! Immaculate Spacious 1+1 Bed Rooms. 24 Hrs Security Building.
Seelan Siva Aiyadurai-Broker
Cell:416-451-0271
$149,000
Luxury 2 bedroom condominium. Well maintained building. 24 hrs gate house security. Close to everything.
Balan Kanesapillai-Sales Rep.
Cell:416-844-5401
$144,900
Spacious 3 bedroom condominium close to all amenities. Affordable price. Perfect starter home for first timers.
Sasi Chelvaratnam-Sales Rep
Cell:416-725-1125
Exclusive
Prestigious John Buddy Home. 3300 sq. Over100k in upgrades & improvements. Partially finished basement.
Jayanthi Sritharan-Broker
Cell:416-918-5872
$189,000 + stock
Well Established convenience store. Avg weekly sales $ 15k. Lotto comm approx $4500/ month.
Nel Ketha-Sales Rep
Cell:416-677-4707
$279,900
Beautiful semi detached house with 3+2 bedrooms. Finished basement with separate entrance. Excellent condition.
Wilton Gnanapragasam-Sales Rep
Cell:416-554-4747
$489,900
4 Bedroom House is in a mint condition. Fully upgraded property. Finished basement. Don't miss this one.
Ravi Raveendran-Broker
Cell:416-817-8479
$328,000
Full brick detached home. Prime west Rouge location. 3+1 bedrooms , finished basement with separate entrance.
Siva Sivanesan - Sales Rep
Cell:416-464-4525
$329,900
Beautiful house in Scarborough Area. 3 bedrooms with Finished basement. Close to Everything.
Sasi Selvaratnam-Sales Rep
Cell:416-725-1125
$336,900
3 bedroom detached house with finished basement. Less than 5 years old. Please call for more informations.
Kumar Sinnathamby- Sales Rep.
Cell:416-576-4357
$149,900
2 Bedroom condominium in a great location. Very well maintained bldg. Close to Kennedy commons.
Vijay Seevaratnam-Sales Rep
Cell:416-457-8990
$1,500,000 + stock
Money making gas station in Oshawa. Enough space to built Tim Hortons & car wash. Call for details..
Nel Ketha-Sales Rep
Cell:416-677-4707
$399,900
4+2 Bedroom detached home in a prime Scarborough location. 2 minutes walk to 24 hrsTtc bus. Please Call..
Balan Kanesapillai-Sales Rep
Cell:416-844-5401
$658,888
5 Bedroom detached. immaculate family home. Bright and spacious. Very well maintained. Walk to Seneca College.
Seelan Siva Aiyadurai-Broker
Cell:416-451-0271
$282,900
Well maintained town house in a prime Scarborough location. 2+1 Bedrooms. Well known Tridel built.
Justin William-Broker
Cell:416-803-7344
$284,900
Luxury Tridel built 2+1 bedroom town house in great location. 24 hrs gate house security.
Wilton Gnanapragasam-Sales Rep
Cell:416-554-4747
$184,000
Luxury Monarch condominium. One bedroom unit. Steps to Scarborough Town Center and many amenities..
Jayanthi Sritharan-Broker
Cell:416-918-5872
$310,000
This home is an absolute beauty. All new hardwood flooring. Thousands spent on upgrades.
Ravi Raveendran-Broker
Cell:416-817-8479
Your Home Goes Here
HOMELIFE
HIGHER STANDARDS
HomeLife GTA Realty Inc., Brokerage*
1711 McCowan Road, Scarborough,ON. 416-321-6969
*Independently owned and operated
This is not to intented to solicit buyers or sellers currently under contract.
Some condtions do apply



# 0% இலும்

## Bad Credit இலும் கூடிய வட்டி வீதத்தில் வீடு வாங்குவது உங்களை நீங்களே அழிப்பதற்கு சமமானது

digi Media Creations



**Siva Ratnasingam**
Mortgage Consultant
416.430.0111

2005, 2006 Diamond award winner
No. 1 Invis Mortgage agent in Canada

RE/MAX
Remax Vision Realty Inc.
1-2210 Markham Rd., Scarborough, ON, M1B 5V6



**Karuna Gopalapillai**
Real Estate Broker
416.430.0111

invis
CEYLINGO FINANCIAL GROUP.
**416.430.0111**
2929 Lawrence ave east, suite 203
Scarborough, ON M1P 2S8


வீடு, வியாபாரம் வாங்க, விற்க..
20 வருடங்களாக இத்துறையில் முன்னணியில்.....
அனுபவம்! அறிவு! திறமை! பொறுமை!
THE CHAIRMAN'S CLUB
NATIONAL Award Winner 2003 - 2007
Top 1% in Canada
KARU'S ROYAL TEAM
Top 10 TEAM in CANADA
ROYAL LEPAGE
Connect Realty, Brokerage
INDEPENDENTLY OWNED AND OPERATED
Karu Kandiah FRI. CRES,
Real Estate Broker.
DIR: 416-284-5555
Bus: 416-284-4751(24 Hrs)
Toll Free: 1-888-766-4456
Markham/Eglinton
3+1 Bedrooms, 3 Washrooms
Well Maintained All Brick
Freehold Town House.
One Of The Largest
Houses In The Complex.
$319,900
Mccowan/Hwy 401
1+1 Bedrooms, 1 Washroom
Well Maintained,
Bright & Spacious Condo
With Sunfilled East View
Exposure, Convenient Location
$184,800
Scar Golf/Lawrence
3+2 Bedrooms, 2 Washrooms
Excellent Location ,Affordable
For First Time Buyers , Finished
Basement , Kitchen, Rec Rm,
4 Pc & Separate Entrance
$282,000
Nielson/Sheppard
2+1 Bedrooms, 2 Washrooms
Newly Painted, Spacious Condo
Laminated Floors In
Living, Dining, Solarium.
Close To Schools
$140,000
Staines/Steeles
4 Bedrooms, 3 Washrooms
Unique Bungalow Style
2750 Sqft Home,
Beautiful Ravine Lot,
Large Br On Ground Floor
$484,900
Warden/Finch
3 Bedrooms, 2 Washrooms
Excellent Location.
Steps To 24Hr Ttc .
Walk To Schools, Parks, Malls,
Close To Hwy 401 & 404.
$179,000
Finch/Pharmacy
4+2 Bedrooms, 4 Washrooms
Immaculate Condition
Well Kept
House! Lower Maintenance,
Custom Painting
$239,900
Finch/Middlefield
2+1 Bedrooms, 1 Washroom
Low Rise Condo Facing
Courtyard. Excellent Location.
A Few Upgrades
From The Builder.tc
$199,500
Midland/Sheppard
Prime Agincourt Location!
Lot Size 80 X 150 Fits
To Build A Custom
Home Up To 4800 Sq.Ft.
Walk To Go Station & 401.
$349,900
Mccowan/Eglinton
2+1 Bedrooms, 2 Washrooms
Well Maintained Complex!
Good Facilities!
Close To All Ammenities!
Shows Well!
$176,900
9th Line/14th Ave
4 Bedrooms, 3 Washrooms
Excellent Box Grove
Neighbourhood!
2712 Sq Ft! Less Than 1 Year
New Arista Home! Dble Dr Entry
$549,900
Mccowan/Denison
5+2 Bedrooms, 6 Washrooms
Stunning House - Monarch
Built, Basement Finished,
Interlocking Driveway,
Double Enclosed Porch
$599,900
Markham/Bur Oak
4 Bedrooms, 4 Washrooms
Less Than 1 Year New, Well
Maintained Approx. 2850 Sq. Ft.
Home With 9Ft Ceiling.
Double Door Entrance
$494,900
Kipling/Steeles
2+1 Bedrooms, 2 Washrooms
Luxury 2 Bedroom Condo.
Overlooking Beautiful
Ravine And Parklands.
Balcony With Eastern Exposure
$149,900
Hwy 427/Rexdale
2 Bedrooms, 2 Washrooms
Brand New Tridel/Hallmark
Luxury Condo In Etobicoke
Never Lived In, Laminate
Flooring In Living &Dining Room
$274,900
Mississauga Rd/Erin Mills Rd
4 Bedrooms, 3 Washrooms
As Opportunity Knocks It's Well
Established Money Making
Store At Prime Location
Mississauga Rd/Erin Mills Rd
$119,900
Steeles/Chinguacousy
3 Bedrooms, 2 Washrooms
Budget! Why Rent When You
Can Own This Beauty?
Extra Deep Lot Gives You A
Large Backyard.
$249,900
Victoria/Pinnacle
Excellent Location. Detached
Commercial Bldg W/Main Floor
3156 Sq Ft And 2nd Floor
2330 Sq Ft. Price Includes
Restaurant And Bldg
$400,000
Victoriapk/Ellesmere
Restaurant Located In
Great Area.
Excellent Street Exposure.
Few Blocks South Of Hwy 401.
$120,000
Finch/Birchmount
Excellent Dollar Store In
Busy Plaza. Over 10 Yrs In
Business. Avg.Sale $700/Day.
Rent $1750 Including Tmi
And Utilities. Good Lease Term
$48,000

# Home Inspection மூலம் தெரிந்து கொள்ளவேண்டியவை

அலன் சிவசம்பு
- வீடு விற்பனைப் பிரதிநிதி -



ஒரு வீடு வாங்கும் போது அந்த வீட்டில் என்ன பிரச்சினைகள் உள்ளன என்பதை, எமது கண்ணால் காணமுடியாதவற்றை வீட்டுப்பரிசோதகர் மூலம் தெரிந்து கொள்ளக் கூடியதாக இருக்கும். ஒரு வீட்டுப் பரிசோதகர், வீட்டைப் பரிசோதனை செய்யும் போது சிறிய பிழைகளை அவர் உங்களிடம் கையளிக்கலாம். ஆனால் அவ்வாறான பிழைகள் உங்களது வீடு வாங்கும் நிலையை மாற்றக் கூடியது. காரணம், பிழைகள் ஒன்றுமே இல்லாத வீடு இருக்க முடியாது. இருந்தாலும் Structural defects, electrical plumbing, heating, அத்தோடு Cooling Systemகளில் பிழைகள் இல்லாமல் இருப்பது நல்லது. காரணம் அவ்வாறன பிழைகள் வீடு வாங்குவதற்கான Offersஜக் கொடுத்த பின்பு, வாங்குபவரின் வீட்டுப் பரிசோதகர் ஏதாவது பிழைகள் அறிந்து அந்த வீட்டை வாங்காமல் இருப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டால் உங்களது வீடு மீண்டும் சந்தைக்கு வரும் போது சில வேளைகளில் கேள்விகளுக்கு உரிய வீடாக வரலாம். அவ்வாறான நிலைமை உங்களது வீட்டின் விற்பனைக் காலத்தை அதிகரிப்பதோடு மட்டுமல்லாமல் வீட்டின் விலையைக் குறைப்பதற்கும் சந்தர்ப்பம் உண்டு. ஆகவே வீடு விற்பவர்கள் உங்களது வீட்டில் ஏதாவது பிழைகள் இருந்தால் அதை உங்களது வீடு விற்கும் பிரதிநிதியுடன் தெரியப்படுத்திக் கொள்வது நல்லது.

கீழே சில முக்கியமான பிழைகளை அறிந்து, எவ்வாறு செயற்படலாம் எனப்பார்ப்போம்.

முதலாவதாக Damp or Wet basement பரிசோதனை செய்வதைப் பார்ப்போம்.

வீட்டுப் பரிசோதகர் வீட்டின் உட்பகுதியில் வெள்ளைப்படலங்கள் படிந்திருப்பதையும், சாதுவான மணம், சிறிய பெரிய வெடிப்புகள் என்பவற்றையும் ஆராயலாம். அத்துடன் வீட்டின் Basement முடிந்து இருந்தால் Moisture defector மூலம் ஏதாவது பகுதியில் கசிவு உள்ளதா? எனப்பாத்துக் கொள்ளலாம். சிலவேளைகளில் வீட்டுப் பரிசோதனை செய்தபின்பு Washroomல் பழைய கசிவுகளால் அந்த இடம் உடைவதாகச் சிலர் முறையீடு செய்துள்ளார்கள். அப்படியான நிலையில் தண்ணியைத் திறந்து விட்டு பின்பு Moisture defectorஜப் பாவிப்பதால் அப்படியான பிழைகள் வராது பார்த்துக்கொள்ளலாம்.

அத்துடன் வீட்டின் வெளிச்சுவர்களில் ஏதாவது ஈரப்பதன் இருக்கின்றதா எனப்பார்ப்பதாலும் Basementன் உட்பகுதியில் கசிவுகள் வருவதற்குச் சந்தாப்பம் உள்ளதா என அறிவதற்கு வாய்ப்பு உண்டு.

அடுத்ததாக Electrical பரிசோதனையைப் பற்றிப் பார்ப்போம்.

Electrical Panelன் முன்பாகக் குறைந்தது மூன்று அடி என்றாலும் இருத்தல் நல்லது. Wires வீட்டுச் சுவர்களின் ஊடாகச் செல்லும் போது சரியாகத் தொடுக்கப் பட்டுள்ளனவா என அறிய வேண்டும்.

எந்த Wireஆக இருந்தாலும் அதில் ஏதாவது பாதிப்பு உள்ளதா என அறிந்து அவற்றைச் சரி செய்தல் நல்லது. இல்லாவிடில் அந்த Wire இலகுவாகச் சூடேறி நெருப்பு உண்டாவதற்கு வாய்ப்பு உண்டு.

உங்களது appliancesற்கு ஏற்றவாறு Wire தொடுக்கப்பட்டுள்ளனவா என அறிதல் நல்லது.

Junction Boxes சரியாகப் பொருத்தப் பட்டுள்ளதா எனப்பார்த்தல் வேண்டும்.

Switches அல்லது Cover platesல் ஏதாவது வெடிப்புகள் இருந்தால் மாற்றிக் கொள்ள வேண்டும்.
ஏதாவது வேலை செய்யாத Lights இருந்தால் அதைச் சரியான Electrician உடன் அணுகி அதைச் சரிசெய்து கொள்வது நல்லது.

எல்லா Outletsம் நிலத்துடன் தொடுக்கப்பட்டுள்ளதா எனப் பார்த்தல் நல்லது.

நீங்கள் Extention Cods பாவிப்பதானால் அதை Permanent Wiringஆக வைத்துக் கொள்ளாமல் இருப்பது நல்லது.

வெளிப்பகுதியில் கொண்டு செல்லப்பட்டுள்ள Wires அது outdoor பாவனைக்கு உகந்ததா எனவும் அறிதல் வேண்டும்.

Aluminium Wiring கூடுதலாக 1960ல் இருந்து 1978வரை வீடுகளில் பாவிக்கப்பட்டது. அப்படியான Wiring உள்ள இடங்களில் அந்த வீட்டில் Special Connections, Aluminium wiringஉடன் சேர்ந்து போகக் கூடியதாக உள்ளதா எனப்பார்த்தல் நல்லது. அப்படி இல்லாத நிலையில் வீட்டை வாங்குவதாக இருந்தால் Aluminium Wiringற்கு Home Insurance கொடுக்கப்படும் Insurance Company உடன் தொடர்பு கொண்டு அந்தக் Companyயின் உத்தரவாதத்துடன் வீட்டை வாங்குவது நல்லது. காரணம் அந்தக் Company நீங்கள் வாங்கிய 30 நாட்களில் சரியான Outletsஜப் பொருத்தி Certificateஜப் பெற்ற பின்புதான் அவர்கள் தொடர்ந்து Insuranceஜத் தருவதற்கு இணங்குவார்கள். நாம் சரியான Outlets இல்லாது வீட்டு Insuranceஜ வாங்கினாலோ or கொடுக்கப்பட்டாலோ ஏதாவது விபரீதம் ஏற்பட்டால் Home Insurance செல்லுபடியாகாமல் போவதற்கு வாய்ப்பு உண்டு.

ஆகவே உங்களது வீட்டுப் பரிசோதகர் ஏதாவது பிழைகளைச் சுட்டிக் காட்டினால் அவற்றைக் கருத்தில் கொண்டு, சீர்திருத்திக் கொள்வது நல்லது.

■ ■ ■


"The Home Team"
Shan Thayaparan
Sales Representative
Direct: 416.567.7675
"FREE MARKET EVALUATION"
"FLEXIBLE COMMISSION"
Your peace of mind is our goal
Call Us First!
Kumar Muthusamy
Sales Representative
Direct: 416.518.0118
Viki Velauthan
Sales Representative
Dir: 416.457.7162
PIZZA STORE
Very Good opportunity to Start Your Family Business Pizza Store for more than 30 Years. Possibility for Catering or Deli. Low Rent, Good Sale, No Royalty Fees, 40 Seats allowed
$59,900
PLAZA
TIMHORTONS & ESSO
EXCLUSIVE
VERY PROFITABLE PLAZA WITH TIMHORTONS, ESSO, AND NINE OTHER BUSINESS WITH LONG TERM LEASES.8%CAP RATE.
$3,750,000
14th/9th Line
Brand New House. Never Lived In. Hardwood Floor Throughout
14th/9th Line
$379,900
Location Access To Public Transportation, Schools, New Plaza; Lot's Of $$$ Spent On Upgrades
Warden/St.Clair
Location! 3 Bed Rooms Close to Subway, Schl, Shp.
Meadowale & Sheppard
$239,900
Across Fr. School. Steps To Rouge Valley Conservation. Home Backs On To Forest Like Setting w/ 3+1 Bedrooms
McCowan & Sheppard
$144,900
Excellent Location! Close to Scar. Centre! 2 Bedroom Unit
Lawrence & Morningside
Well Maintained.
Stunning,Good Condition; Close to Plaza
Elderbank/Bovard
All Brick 3-Bedroom With Built-In Garrage. Backing Onto Wonderful
Bayley/Pick Beach
$319,999
Fully Fenced Backyard, Potential For Separate Inlaw Apt. W/O To Garage
9th Line/16th Ave
$379,900
Great Location For This Cozy Detached 3 Br.
Close To Schools, Hospital, Go Train
Middlefield & Denison
Home In Prestigious Loc! Corner Lot. 4 Bdrm House With 1 B/R Basement Apart.
We will help you to get financing for your Business or Home
Visit Us @ www.shan123.com
GTA Realty Inc., Brokerage
Bus: 416.321.6969
Fax: 416.321.6963
HomeLife GTA
GTA Realty Inc., Brokerage*
206 - 1711 McCowan Rd., Scarborough, ON. M1S 3Y3
Not Intended to solicit properties currently listed for sale or buyers under contract.
*Each office is independently owned and oprerated

# அழகிய பூஞ்செடிகள்



செ. சந்திரசேகரி

சென்ற இதழ்களில், டாலியாஸ் தாவரத்தின் அறிமுகமும், தாவரம் வளரும் சூழலும், கிழங்குகள் பதிக்கும் முறைபற்றியும், பாது காப்புத் தடிகள் ஊன்றுதலும், நுனிமுளை கிள்ளுதலும், அரும்புகள் நீக்குதலும், பூச்சி பூளுக்களின் தாக்கம் பற்றியும் பார்த்தோம்.

இன்றைய இதழில், வளரும் தாவரம், நல்ல செழிப்பானமுறையில் இருக்க எவ்வாறு கவ னிக்கமுடியும் என்பதைச் சற்று பார்ப்போம். இயற்கையான பசளைகள் மட்டும் தாவரங் களுக்குப் போதுமானதெனத் தீர்மானிக்கக் கூடாது. வர்த்தகரீதியான பசளைகள், கூடிய போசாக்குத் தன்மையைக் கொடுக்க வல்லன என்பதையும் நாம் உணர வேண் டும். எனவேதான், தாவரங்களுக்கு வேண்டிய பசளைகள், அளவுமுறைகள் பற்றிய அட்ட வணைகள் இங்கு தரப்பட்டுள்ளன.

இதனை நீங்கள் நன்கு கவனிக்கவும். இவற்றை உபயோகிப்பதால் கூடிய பயன் கிடைக்கும்.

மேற்படி பசளைகள், தாவரத்திற்குக் கிடை- க்கும்போது அவை மிக எளிதாக இலை கள், தண்டுகள், பூக்கள் போன்றவற்றிற்குச் செல்கின்றனவா என்ற கேள்வி எழுகின்றது.

அட்டவணை 1: சில இயற்கைச் சத்துக்களின் போசாக்கு அளவுகள்

| பசளைச் சத்துக்கள் | நைதரசன் % | பொசு-பேற்று% | பொற்றாஸ் % | கிடைக்கும் திறன் |
|---|---|---|---|---|
| இரும்புச் சத்து | 0.7 - 4.0 | 18 - 34 | 0 | மெதுவாக |
| கலவை உரம் | 1.5 - 3.5 | 0.5 - 1.0 | 1.0 - 2.0 | மேதுவாக-விரைவாக |
| மாட்டு உரம் | 0.25 -2.0 | 0.15 -0.9 | 0.25 -1.5 | சுமாராக |
| குதிரை உரம் | 0.3 - 2.5 | 0.15 -2.5 | 0.5 - 3.0 | சுமாராக |
| ஆட்டு உரம் | 0.6 - 4.0 | 0.3 - 2.5 | 0.75 -3.0 | சுமாராக |
| பாசீ உரம் | 1.5 - 3.0 | 0.25 -0.5 | 0.5 - 1.0 | மிகக் குறைவாக |
| மரத்தூள் உரம் | 0 | 1.2 | 3.7 | விரைவாக |

அட்டவணை 2: நிலத்துக்குத் தேவையான பசளைச் சத்துக்கள்

| பசளைச் சத்துக்கள் | ஏக்கர் | 1,000 சதுரஅடி | 100 சதுரஅடி |
|---|---|---|---|
| இரும்புச் சத்து22% | 175 இறா | 4 இறா | 6.5அவு |
| பொசுபேற்று 45% | 87 இறா | 2 இறா | 3.2 அவு |
| கலவை | 13 அந் | 600 இறா | 60 இறா |

இப்போது, இதற்குரிய முறைகளை

### தண்ணீர், வளர்ச்சிக்கு முக்கியமானது:

இளவேனீர்க் காலம் வரட்சியாக இருந்தால் மட்டும், கிழங்குகள் பதித்த வேளையில் நீர் விடவேண்டும், இல்லையேல் தேவை யில்லை. ஏனெனில், கிழங்குகள், ஈரத்தன்- மையில் முளைவிட்டு, தாவரம் திடமாகவும் நோயற்றதாகவும் இருப்பதற்காக நன்கு வேர்களை விடுகின்றன. கூடுதலாக நீர் கிடைக்கும்போது, மென்மையான வேர்கள் அழுகநேரிடம். வளரும் தாவரத்திற்கு படிப் படியாக நீரின் அளவைக் கூட்டலாம். வெளிச்சமான காலை வேளையில், இளந்- தாவரத்தினை அவதானிக்கும்போது நீர்த் துளிகள் காணப்படுவது சர்வசாதாரணம். இதனால், நீர்ஆவியாதல் நடைபெற்றிருக் கிறது என்பது உசிதமாகின்றது. தாவரத் தின் விரைவான வளர்ச்சிக்கு ஓரளவென்றா லும் பசளை இருக்கவேண்டும். இவற்றுள் காணப்படும் போசாக்குகள் கரைந்து செல் வதற்கு போதிய தண்ணீர் தேவைப்படு கிறது. நீங்கள் கூடிய பசளை போடவேண் டும் என்பதிலும் பார்க்க தண்ணீர் ஒழுங் காக விடவேண்டும் என்பதைக் கவனத்தில் கொள்ளவேண்டும். கூடிய பசளை, மெல்லியதான வேர்களையும் இலைகளின் இழைகளையும் எரித்துவிடும். தாவரத்திற்கு, கூடுதலான மாப்பொருள்கள் தயாரிப்பதற் குரிய சிற்றறைக் கலங்கள் (cellulose), தண்டுகள், தாவரப் பகுதிகள் உருவாகு வதற்குத் தேவை. நீரையும் கரியமல வாயுவையும் பெற்று ஒளிக்தொகுப்பின் மூலம் மாச்சத்தை ஏற்படுத்தி உபயோகத் திற் குள்ளாக்கப்பட்டு, திரும்பவும் நிலத்தை நோக்கி கீழே அனுப்பப்பட்டு கிளங்குகளில் சேமித்துவைக்கப்படும். தாவரம் சிறியதாக இருக்கும்போது வேர்கள் வைப்பதற்காக, சறிதளவு நீர் விடலாம். தொடர்ந்து போதிய இலைகள் இருக்கும் போதும், பூமொட்டுகள் வைக்கும்போதும், படிப்படியாக நீர் விடுவ தைக் கூட்டிக்கொள்ளவேண்டும். வெய்யில் காலங்களில், தாவரம் சரிந்து மழ்ந்திருப் பதை அவதானிக்கமுடியும். இதற்கு, போதிய நீர் கிடைக்காமை ஒரு காரண மாகும் அன்றி, போதிய வேர்த்தொகுதி நீரை எடுப்பதற்கு இல்லாமல் இருப்பது இன்னோரு காரணமாகும். எனவே சில காலங்களில் உதாரணமாக, தாவரஇலைக- ளின் பரப்பிலும், தாவரவளர்ச்சியைப் பொறுத்தும் கூடுதலான பூக்கள் ஏற்படும் போதும் மேலதிகமான நீர் தேவை யாகின்றது. இது மட்டுமல்ல, கிளங்குகள் வளர்ச்சிக்கும் நீர் தேவை. இலைகள், பகுதிகள் நனைவதற்கு மட்டும் அல்ல, நிலம் செழிக்க நீர்ப் பாய்ச்சவேண்டும்.

### பூக்கும் தாவரம் பல வகைகள்

தாவரத்தின் பக்கக் கிளைகள் வளர்ந்து முழுமையான பூக்களைத் தருவதற்கு ஏறக்குறைய 30 - 40 நாட்கள் காத்திருக்க வேண்டும். அநேகமாக ஆடி மாதங்களில் காட்சிக்கு தக்கபடி போதிய பூப்பொலிவு களைக் காணலாம். இந்தவேளை, தாவரத் தின் அடியிலுள்ள சில தொகுதி இலை களை நீக்கும்போது, ஓரளது தாவரத்திற்கு போதிய காற்றோட்டத்தை ஏற்படுத்துவ தோடு, பூஞ்சணம் பிடிப்பதைத் தடுக்கவும் முடிகிறது. பூக்களின் பருமனைப் பொறுத்து, பல வகைகள் காணப்படுகின்றன.

7

- மிகப்பெரிய இனம் பூவின் பருமன் 10அங் விட்டம்
- பெரியஇனம் பூவின் பருமன் 8-10 அங் விட்டம்
- நடுத்தர இனம் பூவின் பருமன் 6-8 அங் விட்டம்
- சிறிய இனம் பூவின் பருமன் 4-6 அங் விட்டம்
- பந்து இனம் பூவின் பருமன் 3 அங் விட்டம்

## - வீட்டுத் தோட்டம் - 3





- பொம்பன் இனம் பூவின் பருமன் 2 அங் விட்டம்

பூக்களின் இதழ்கள் அமைப்பு வேறுபடு கின்றன. பூக்களின் அமைபிற்கேற்ப, பல தரப்பட்ட பிரிவுகளைக் காண்கின்றோம்.

- சாதாரண அலங்கார வகை: பூவிதழ்கள் அகலமாக, தட்டையாக, வழவழப்பாக இருக்கும்.
- அசாதாரண அலங்கார வகை: பூவிதழ்கள் ஒழுங்கற்ற முறையில், பின்னப்பட்டும் வளைந்தும் காணப்படும்.
- நேரான கள்ளி வகை: பூவிதழ்களின் அடி ஒடுக்கமானதாயும் நேராகவும் நடுப்பூவிலிருந்து எல்லாப் பக்கமும் பரவலாக நுனிகள் கீழ்நோக்கி வளைந்தும் காணப்படும்.
- இடைப்பட்ட கள்ளி வகை: பூவிதழ்களின் அடிஅகலமாகவும் நேராகயும் நுனியிதழ்கள் கீழ்நோக்கி வளைந்தும் காணப்படும்.
- வளைந்த கள்ளி வகை: பூவிதழ்கள் கூராகவும் ஓரளவு நீளமாகவும் பூவின் உட்புறமாக வளைந்தும் காணப்படும்.
- இதழ்நுனி பிளவுபட்ட வகை: பூவிதழ்களின் நுனி பிளவுபட்டு இருக்கும்.
- பந்துவகை: சீரான இதழ்களையுடையதாயும் நுனியிதழ்கள் கீழ்நோக்கி வளைந்ததாயும் பந்து வடிவமானதாயும் காணப்படும்.
- பொம்பன்வகை: பூவிதழ்கள் முழுநீளத்திற்கும் உட்புறமாக வளைந்து காணப்படும்.

### நிலத்திலிருந்து கிளங்குகள் எப்படி எடுக்கவேண்டும், சேமிக்க வேண்டும்.

கிளங்குகள் போதிய முதிர்ச்சியடைந்ததும், நிலத்திலிருந்து எடுக்கப்பட வேண்டும், சில நாடுகளில், கிளங்குகள் போதியகாலம் நிலத்தில் விடப்படுகின்றன. உறைபனி, கூடிய குளிர் இருக்கின்றவேளை, கிளங்கு களை நிலத்திலிருந்து எடுத்துவிட வேண் டும், இல்லையேல் கிளங்குகள் பாதிக்கப் படும். சிலர், குளிரிலிருந்து விடுபடப் பாதுகாப்புத் தூவல் (mulch) தாவரத்தைச் சுற்றிய இடங்களில் 4அங் உயரத்தில் போடுவார்கள். கடுமையான குளிர் ஏற்படும் போது, தாவரத்தை நிலத்திலிருந்து தண்டி னை 6அங் மேல் விட்டு வெட்டவேண்டும். வெட்டியவுடன், கிளங்குகள், முளைகளை விடுவதற்குரிய கண்களை ஏற்படுத்தக் தூண்டுகின்றன. ஏறக்குறைய 4-5 நாட்க ளில் இவை தோன்றலாம். பின்னர், கிளங்கு களை நிலத்திலீருந்து கிண்டி எடுக்க வேண்டும்.

தொடரும்... ■ ■ ■

## Family Moraceae : அரசமரம்

(Botanical Name: Ficus religiosa) (English Name: Sacred Bo tree)



“Religiosa” refers to “religion”. இலங்கை, இந்தியா, வங்காளம், இமயமலை போன்ற இடங்களில் இயற்கையாகக் காணப்படும். உயரமான பரந்த கிளைகளையுடைய மரமாகும். இந்துக்களுக்கும், பௌத்தர்களுக்கும் புனிதமான மரமாக விளங்குகின்றது. எனவே, இம்மரத்தினை கோயில்களிலும், சமய ஆச்சிரமங்கயிலும் வளர்திருக்கின் றார்கள். கிமு 3ம் நூற்றாண்டில், ஈழநாட்டில் வளர்க்கப்பட்டிருக்கிறது. பௌத்தர்கள் “போதிமரம்” எனப் போற்றி, புத்தரை “அரசுநிழலிலிருந்தோன்” எனக் குறிப்பிடுவர். புத்தவிகாரைகளில் அரசமரத்தடியில் அமைக்கப்பட்டிருப்பதை நாம் பார்க்கக்கூடியதாக இருக்கின்றது. இலைகள், மரப்பட்டை, கனிகள், விதைகள் பயனுடையவை. பொடி செய்யப்பட்ட பட்டைகள் நாட்சென்ற புண்களை ஆறவைக்கும். இலைகள் மலம் இளக்கு பவை, கனிகள் ஜீரணத்தை ஊக்குவிப்பதோடு, பாம்புக்கடி, இதயநோய், ஆஸ்துமா போன்றவற்றைக் குணப்படுத்தும். வித்துக்கள், சிறுநீர்ப் பிரச்சனைகளை நீக்கும். இலைகள், கனிகள். தளிர்கள் கால்நடைப் பிராணிகளுக்கு உணவாகும். பண்டைய நாகரீகம், ஆலமரத்தை ஆணாகவும் அரசமரத்தை பெண்ணாகவும் நினைத்து அருகருகே இரண்டையும் வளர்த்து கலியாணவைபவங்களை இவ்விடத்தில் வைப்பது வழமை.

# வீடு மட்டும் தான் செல்வமா?

## காசுமேலே காசுவரும் நேரமிது



பெரி முத்துராமன்
- நிதித்துறை ஆலோசகர் -

பலபேரிடம் உங்கள் ஓய்வு காலத்துக்கு என்று என்ன சேமித்திருக்கிறீர்கள் என்றால், என்னிடம் வீடு இருக்கிறது. அதை விற்றால் பணம் மிச்சப்படும். சின்ன வீட்டுக்குப் போகலாம். இந்தியாவில் போய் செட்டில் ஆகிவிடலாம். என்பிள்ளைகள் காப்பாற்றுவார்கள் என்றெல்லாம் பதில் கூறுவார்கள்.

வீட்டு விலைகள் எப்போதும் ஏறிக் கொண்டுதான் இருக்குமா? கனடாவிலும் வீட்டு விலைகள் வீழ்ந்த காலம் ஒன்று உண்டு. ஏதோ முன் ஒரு காலம் அல்ல. கடந்த ஐம்பதாண்டு காலத்துக்குள்ளும் நிகழ்ந்துள்ளது. இன்று அமெரிக்காவில் இருக்கும் நிலை கனடாவிலும் வரும் நாள் வெகுதூரத்தில் இல்லை என்று ஆருடம் கூறுபவர்களும் இன்று நம்மிடையே இருக்கிறார்கள். அது உண்மையாகுமா? எனக்குத் தெரியாது. அத்தகைய ஆருடம் கூறுபவர்களில் முக்கியமானவர் லிபரல் கட்சியைச் சார்ந்த பாராளுமன்ற உறுப்பினர் கந்த் டெர்னர் (GARTH TURNER) ஆவார். உங்கள் சொத்து மதிப்பில் மூன்றில் ஒரு பங்குக்கு மேல் வீட்டின் மதிப்பிருந்தால் விற்றுவிட்டு வாடகை வீட்டில் குடியிருக்க இவர் அறிவுரை கூறுகிறார். பிறகு வீட்டு விலைகள் விழும்போது மலிவில் வீட்டை வாங்கலாம் என்பது இவர் கருத்து. இது சரியா? இதுவும் எனக்குத் தெரியாது.

GARTH TURNERஇன் கருத்துப்படி வீட்டைப் பற்றி மக்களிடையே நிலவும் தவறான அபிப்பிராயங்கள்:

- பங்குச்சந்தை ஆபத்து நிறைந்தது, வீடு ஆபத்து இல்லாத முதலீடு.
- வீட்டு விலைகள் எப்போதுமே உயரும்.
- கனடிய வங்கிகள் அமெரிக்க வங்கிகளைப் போல இல்லாது சற்றே கவனமானவை.
- தொழில்துறை மேதைகளின் கருத்துக்கள் கவனத்தில் கொள்ளப்பட வேண்டியவை.
- இருப்பதற்கு எப்படி இருந்தாலும் ஒரு வீடு தேவைதானே!
- வீடு ஒரு சிறந்த முதலீடு
- வாடகைக்கு இருப்பதை விட சொந்த வீடு மேலானது.
- கனடா (மற்ற நாடுகளிலிருந்து, குறிப்பாக அமெரிக்காவிலிருந்து) வித்தியாசமானது.

மேலே குறிப்பிட்ட எல்லாமே தவறான அபிப்பிராயங்கள் என்று டர்னர் கூறினாலும், என்னால் சிலவற்றை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஆனால், அதே சமயம் வீட்டு விலைகள் எப்போதுமே ஏறும் என்று நம்புவது போன்ற சில அபிப்பிராயங்கள் தவறு என்று நானும் நம்புகின்றேன்.

வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு டர்னர் கூறும் அறிவுரைதான் என்ன? இதோ சில:

- காத்திருந்து (இன்றைய சூழ்நிலையில்) என்ன நடக்கின்றது என்று பாருங்கள். (விலைகள் விழும்)
- சிறந்ததை எதிர்பார்த்துக் காத்திருங்கள், சில வருடங்களில் வீட்டுவிலைகள் விழும்.
- வீட்டை விற்றுவிட்டு, வேறுசில தக்க முதலீடுகளில் பணத்தைப் போட்டு விட்டு வாடகைக்குக் குடியிருங்கள்.
- எல்லாவற்றிலும் முதலீடு செய்யுங்கள். உங்களுக்கு நீங்களே மீண்டும் முட்டாளாயிருக்க மாட்டேன் என்று சொல்லிக் கொள்ளுங்கள்.

இவருடைய இந்த அறிவுரைகளில் எனக்கு மிகவும் உடன்பாடான அறிவுரை ‘எல்லாவற்றிலும் முதலீடு செய்யுங்கள்” என்பது தான்.

உலகத்தில் வெற்றி பெற்ற முதலீட்டாளர்களைப் பார்த்தால் அவர்கள் எங்கு முதலீடு செய்திருக்கிறார்கள் என்று நினைக்கிறீர்கள்?

வீட்டிலா? பங்குச் சந்தையிலா? கடன் பத்திரங்களிலா? வங்கி வைப்புக்களிலா? எதில்?

விடை: எல்லாவற்றிலும் தான்.

1995 டிசம்பரில் ஒரு சராசரி சிறிய குடும்பத்துக்கான வீட்டின் விலை கனடாவில் 150,720 டாலர்கள். இதே பணத்தை ஐந்தாண்டு வங்கி வைப்புக்களில் பத்தாண்டுக்கு முதலீடு செய்திருந்தால் பத்தாண்டு முடிவில் என்ன கிடைத்திருக்கும்? 267,237 டாலர்கள். (ஐந்தாண்டு வங்கி வைப்புக்களுக்கான வட்டி விகிதம் இந்த கால கட்டத்தில் ஸ்கோஷியா வங்கி கொடுத்ததை அடிப்படையாக வைத்துக் கணக்கிடப்பட்டுள்ளது.)

இதே பணத்தை ஒருவர் கனடியன் பாலன்ஸ் பன்டில் முதலீடு செய்திருந்தால் எவ்வளவு கிடைத்திருக்கும்? 307,458 டாலர்கள். சரி, 150,720க்கு வாங்கிய வீட்டின் மதிப்பு இந்த கால கட்டத்தில் எவ்வளவாக உயர்ந்திருக்கும்?

விடை: 249,201 டாலர்கள்.

முடிவாக என் கருத்து இதோ:

குடியிருக்க ஒரு வீடு தேவை. அந்த வீடு விரலுக்குத் தகுந்த வீக்கம் என்பதற்கு ஏற்ப, அவரவர் சக்திக்குத் தகுந்த வீடாக இருக்கலாம். விலை விழும் என்று முதல் வீடு வாங்கக் காத்திருக்கத் தேவையில்லை.

இரண்டாவது வீடு வாங்க நினைப்பவர்கள் யோசித்துப் பார்த்துத்தான் வாங்க வேண்டும். அதே சமயம் பங்குச் சந்தையிலும் தக்க ஆலோசனை உடன் முதலீடு செய்து வருவது காலப் போக்கில் நல்ல வளர்ச்சியைக் கொடுக்கும்.

பெரும் பணத்தைத் தான் பங்குச் சந்தையில் போட வேண்டும் என்பதில்லை. சிறு துளி பெருவெள்ளம். மாதந்தோறும் ஒரு தொகையை இவ்வாறு சேமித்து வரலாம்.

சிந்தியுங்கள், செயல்படுங்கள்.

■ ■ ■







**அறியவில்லையானால் அறிந்துகொள்ளுங்கள் - கனடாவில் சில தகவல்கள்**

# நிரந்தர வதிவுரிமையுடன் கனடாவுக்கு வர ஐந்து பேரின் குழுவான ஸ்பொன்சர் (Group Sponsor)



சிவ பஞ்சலிங்கம்
- ஆயுட்காப்புறுதி பிரதிநிதி -

**தகவல் தொடர் - 16**

தாயக மண்ணில் கொடிய யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட எம்மினத்தவர்களை கனடாவுக்கு அழைப்பதற்கு சிலவழிகள் திறந்துள்ளன. அதில் ஒரு வழி!

## கனடாவில் வரியிறுக்கும் ஐந்து பேரின் குழுவான ஸ்பொன்சர்

- ஐந்து பேரும் கனடாவில் பிரஜையாக அல்லது நிரந்தர குடியுரிமை பெற்றவராகவும் பதினெட்டு வயதுக்கு மேற்பட்டவராகவும் இருத்தல் வேண்டும்.
- ஸ்பொன்சர் செய்யப்படுபவர்கள் அகதி என்ற நிலையில் போர் சூழலில் பாதிக்கப்பட்டு, சொந்த நாட்டுக்குப் போகமுடியாத நிலையில் ஏதாவது ஒரு நாட்டில்- அது இலங்கையாகவோ கனடாவாகவோ இல்லாமல் - தஞ்சம் கோரிய நிலையில் இருத்தல் வேண்டும். (உதாரணமாக, ஈழமண்ணில் அகதியாக இந்தியா வந்து, அங்கு அகதியாக பதிவு செய்துவிட்டு இருப்பவரை அல்லது இன்னொரு நாட்டில் அகதிஅந்தஸ்து கோரல் நிரகரிக்கப்பட்டவரை குறிப்பிடலாம்.)
- குழுவாக ஸ்பொன்சர் செய்யப் போகும் ஐந்து பேரும் எவருக்கு ஸ்பொன்சர் செய்கின்றார்களோ, அவர் கனடாவினுள் வருகை தந்த நாளிலிருந்து குறைந்தது ஒரு வருடத்திற்கு அவருக்கு ஏற்படும் சகல செலவுகளுக்கும் தாம் பொறுப்பு என்ற உத்தரவாதம் வழங்கப்படல் வேண்டும்.
- இவ்வுத்தரவாதத்தினை வழங்கும் உறுதியினை நிரூபிக்கும் வகையில் தமது தொழில், வருமானம், நிதி நிலைமைகள் உட்பட ஸ்பொன்சர் செய்வதற்கு தகைமையுடையவர்களா? என்பது நிரூபிக்கப்படல் வேண்டும்.
- குழுவாக ஸ்பொன்சர் செய்யப்போகும் ஐந்துபேரும் கட்டாயம் உறவினர்களாகத்தான் இருக்கவேண்டும் என்று அல்ல; எவராகவும் இருக்கலாம்.
- ஸ்பொன்சர் என்பது தனி ஒருவருக்கும் செய்யலாம்; குடும்பமாகவும் செய்யலாம். அதற்கும் குடிவரவு பிரிவினர் அங்கீகரிக்க வேண்டும்.

அகதியாக கனடாவில் தஞ்சம் கோரும் நோக்கில் எங்கேயாவது தயார் நிலையில் இருப்பவர்களுக்கு ஸ்பொன்சர் செய்ய விரும்புவோர் - முதல் கட்டம் குறைந்தது ஐந்து பேர்கொண்ட தரமான குழுவினை உருவாக்குவது!

அடுத்த நடவடிக்கை!

விண்ணப்பப் பத்திரங்கள், தகவல்களைப் பெற்று பூரணமாக நிரப்பிக் கொள்வது. இதனை ரொறன்ரோவில் பின்வரும் விலாசத்தில் பெறலாம்.

**Citizenship & Immigration Centres,**
**Suit # 200 - 25, St. Clair Ave. East,**
**Toronto, ON M4T 1M2**
**Tel: 1 888 242 2100 Fax: (416) 954 6579**
**Web : www.cic.gc.ca**

விண்ணப்பப் படிவங்கள், தகவல்களை தபாலில் பெறவேண்டுமாயின் தொடர்பு கொள்ள வேண்டிய மின்னஞ்சல் முகவரி: **kit-trousse-req@cic.gc.ca**

பின்வரும் விண்ணப்பப் படிவங்கள் கனடாவின் குடிவரவுத் திணைக்களத்தில் இருந்து பெற்று பூரணமாகவும் தெளிவாகவும் நிரப்புதல் வேண்டும்.

1. Undertaking application to sponsor groups of five (ஐந்து பேர் குழுவாகப் பொறுப்பேற்கும் பிரதான விண்ணப்பப் படிவம்)

ஐந்துபேர் கொண்ட ஸ்பொன்சர் குழுவிற்கு முதலில் ஒரு பெயர் குறிப்பிடல் வேண்டும் என்பது விண்ணப்பப் படிவத்தில் முதலாவதாகக் கேட்கப்பட்டுள்ளது,

உதாரணம்: கிருபா கந்தையா குழுவினர்
தொடர்ந்து முதலாவது குழுவின் பிரதான நபர்
குழுவின் இரண்டாவது நபர்
குழுவின் மூன்றாவது நபர்
குழுவின் நான்காவது நபர்
குழுவின் ஐந்தாவது நபர்
(விரும்பினால் ஐந்துக்கு மேற்பட்டோரும் சேர்ந்து ஸ்பொன்சர் படிவத்தில் நிரப்பலாம். ஆனால், விண்ணப்பப் படிவத்தில் ஐந்து பேருக்கு மட்டுமே இடமுண்டு. மேலதிகமாக இருந்தால் இன்னொரு கடதாசியில் அதில் உள்ளமாதிரி நிரப்ப வேண்டும்.)

இங்கு ஐந்துபேரும் ஒரே விண்ணப்பத்தில் வழங்கப்பட வேண்டிய தகவல்கள் பின் வருமாறு:

- முழுப் பெயர்
- பிறந்த திகதி, ஆண்டு விபரங்கள்
- விலாசம், தொலைபேசி, தொலைநகல், மின்னஞ்சல்
- அகதியாக தஞ்சம் கோர இருப்பவர் உறவு முறையாக இருந்தால் என்ன மாதிரியான உறவு முறை என்பது. (குழுவினர் அகதியாக உள்ளவரின் உறவினுள் இருப்பவராக இருந்தால் ஸ்பொன்சர் சற்று வலிமையுடையதாக இருக்கும் வாய்ப்பு இருக்கலாம்.)
- இதற்கு முன்னர் எவருக்காவது ஸ்பொன்சர் பண்ணியிருந்தால் அது பற்றிய விபரங்கள்.
- அகதியாக ஸ்பொன்சர் பண்ணப்படப் போகின்றவர்களின் பெயர், பிறந்த திகதி, ஆண்டு முதலிய விபரங்கள், பிறந்த நாடு, தற்போது பிரஜா உரிமை உள்ள நாடு, ஆணா, பெண்ணா, திருமணமானவரா போன்ற சகல விபரங்களும் உட்பட அவர் தற்போது தங்கியிருக்கும் நாட்டின் விலாசம், மற்றும் மேலதிகமாக கனடாவில் உள்ள இரு உறவுக்காரர்களின் பெயர், விலாசங்கள்.

மேற்குறிப்பிட்ட தகவல்களை வழங்கி ஐந்து பேரும் கூட்டாக இவ்விண்ணப்பத்தில் கைச்சாத்திட வேண்டும்.

இது தவிர, மேலதிகமாக நிரப்பப்பட வேண்டிய இரண்டாவது விண்ணப்பப் படிவம் இதுவாகும்.

2. Sponsor Assessment (ஸ்பொன்சர் பண்ணுபவரின் தகைமை மதிப்பீட்டு விண்ணப்பம்)
இங்கு ஸ்பொன்சர் செய்யும் ஐந்துபேரும் தனித்தனியே இவ்விண்ணப்பப் படிவத்தை நிரப்பி கைச்சாத்திடல் வேண்டும். இத்தகைமைகள் பற்றிய கேள்விகள் பின்வருமாறு கேட்கப்பட்டுள்ளன. அதாவது ஸ்பொன்சர் பண்ணுபவர்கள் ஐந்துபேரும் -

- பதினெட்டு வயதுக்கு மேற்பட்டவர்களா?
- கனடாவின் நிரந்தர குடியுரிமை அல்லது பிரஜாவுரிமை பெற்றவர்களா?
- ஏதாவது சில குறிப்பிட்ட கிரிமினல் (Criminal) பதிவுகள் உள்ளதா?
- அப்படியானால் அதுபற்றிய முழு விபரங்கள்
- எங்கேயாவது பணக் கொடுப்பனவுகள் தவறி, நீதிமன்ற தீர்ப்பு ஏதாவது ஏற்பட்டிருந்தால் அதுபற்றிய விபரங்கள்
- பிரஜா உரிமை சட்டத்தின்கீழ் ஏதாவது பிரச்சினைகள், அல்லது கனடாவினை விட்டு நாடு கடத்தப்பட வேண்டிய நிலைமை ஏற்பட்டால் அதுபற்றிய விபரங்கள்.

மேற்குறிப்பிட்ட ஸ்பொன்சர் பண்ணுபவர்கள் ஐவரினதும் 'தகைமை மதிப்பீட்டு விண்ணப்பம்' பூர்த்திசெய்யப்பட்டு, ஒவ்வொருவரும் தனித்தனி விண்ணப்பத்தில் கைச்சாத்திடல் வேண்டும்.

### மூன்றாவதாக நிரப்பப்பட வேண்டிய படிவம்

3. Settlement plan & financial assessment (தஞ்சம் கோருபவர்கள் குடியேறும்போது உருவாக்கும் திட்டங்களும் நிதி மதிப்பீடும்)
இது ஐவருக்கும் பொதுவாக குழுவின் தலைமைப் பிரதிநிதியால் மட்டும் நிரப்பி கைச்சாத்திடல் வேண்டும்.

அதாவது, ஸ்பொன்சர் செய்யப்பட்டவர் கனடாவுக்கு வருகைதந்த பின்னர் ஏற்படலாம் என எதிர்பார்க்கும் செலவுகள். அவருக்காக உருவாக்கும் திட்டங்கள் ஆகியன இங்கு கேட்கப்படும் கேள்விகளுக்கு விடையாக நிரப்பப்படல் வேண்டும்.

### நான்காவதாக நிரப்பப்பட வேண்டிய படிவம்

4. Financial profile – Group of five - (குழுவில் உள்ள ஐந்து பேரினதும் நிதி நிலைமை)
இவ்விண்ணப்பப் படிவத்தை குழுவிலுள்ள ஐந்துபேரும் தனித்தனியாக நிரப்பிக் கைச்சாத்திடல் வேண்டும்.

பெயர் விபரங்கள், பிறந்த திகதி, ஆண்டு, தற்போது இவர்களின் வருமானத்தில் தங்கியிருப்போர் தொகை, செய்யும் தொழில் பற்றிய விபரங்கள், இதற்கு முதல் செய்த தொழில் பற்றிய விபரங்கள், பெற்றுக்கொள்ளும் வருமானங்கள் ஆகிய தகவல்களை நேர்மையான முறையில் சமர்ப்பித்தல் வேண்டும்.

மேற்குறிப்பிட்ட விண்ணப்பங்களைத் தவிர, விரும்பினால் பிரதிநிதி ஒருவரை நியமிப்பதற்காக நிரப்பும் விண்ணப்பப் படிவம் இதுவாகும்.

5. Use of a Representative
பொதுவாக சிலர் தங்களால் இயலாது போனால் தங்களது ஸ்பொன்சர் நடவடிக்கைகளை முன்னெடுப்பதற்கு தங்கள் குழுவின் சார்பில் ஒரு அனுபவம் உள்ள வக்கீலை அல்லது குடிவரவுத் துறையில் அனுபவம் உள்ள பிரதிநிதிகளை நியமிப்பது வழமையாகும். இவ்வாறு நியமிக்க விரும்பினால், இவ்விண்ணப் பத்திரம் மூலம், தங்கள் குழுவின் சார்பில் ஸ்பொன்சரினை முன்னெடுப்பதற்கு குழுவின் தலைமை பிரதிநிதி கைச்சாத்திட்டு, குறிப்பிட்ட நபருக்கு அங்கீகாரம் வழங்குதல் வேண்டும்.

குழுவின் தலைமை பிரதிநிதியிடமிருந்து இவ்விண்ணப்பப் படிவம் மூலம் அங்கீகாரம் பெற்றபின்பே பிரதிநிதியால் குழுவின் சார்பில் இயங்க முடியும். ஆனால் இந்நியமனம் என்பது கட்டாயம் அல்ல.

இவ்விண்ணப்பம் மேலதிகமாக இணைக்கப்படல் வேண்டும்.

**6. Document Checklist – Group of five (பத்திரங்களைப் பரிசோதனையிடும் விண்ணப்பம்)**

- அதாவது ஐவரும் கூட்டாக கைச்சாத்திடும் பிரதான விண்ணப்பம்
- ஸ்பொன்சர் பண்ணுபவர்கள் ஒவ்வொருவரினதும் தகைமை மதிப்பீட்டு விண்ணப்பம்
- தஞ்சம் கோருபவர்கள் குடியேறும்போது உருவாக்கும் திட்டங்களும் நிதிமதிப்-

30ம் பக்கம் பார்க்க...

# நிரந்தர வதிவுரிமையுடன்...

29ம் பக்கத் தொடர்ச்சி...

பீடும்

### குழுவில் உள்ள ஐந்து பேரினதும் தனித்தனி நிதி நிலைமைகள்.

5. பிரதிநிதியை நியமித்தால் அவருக்கு அங்கீகாரம் வழங்கும் விண்ணப்பம்

மேற்குறிப்பிட்ட ஐந்து விண்ணப்பங்களும் இங்கு சரியாக இனைக்கப்பட்டுள்ளதா? என இவ் விண்ணப்பப்பத்திரத்திநூடாக இவைகள் உறுதிப்படுத்தப் படுகின்றன. இது ஒரு கைச்சாத்திடும் விண்ணப்பப் பத்திரம் அல்ல. ஒவ்வொரு பத்திரமும் பூரணமாக நிரப்பப்பட்டு, இங்கு இணைக்கப்பட்டுள்ளதா என்பதனைச் சரியாகப் பரிசீலனை செய்து, சரி என்றால் சரி என புள்ளடியிட்டு இறுதியாக இவற்றுடன் சமர்ப்பிக்கவேண்டிய ஒரு பத்திரம்.

மேற்குறிப்பிடப்பட்ட விண்ணப்பப் பத்திரங்களுடன் குழுவில் உள்ள ஐந்துபேரும் தனித் தனியாக தங்களின் அடையாளத்தினை உறுதிப்படுத்தும் அடையாள அட்டையின் பிரதிகள் சமர்ப்பித்தல் வேண்டும். நிரந்தர வதிவுரிமை அட்டை, குடியுரிமை அட்டை, கனடாவின் பிறப்பு பத்திரம், இப்படி ஏதாவது ஒரு பத்திரத்தின் பிரதியினை இணைத்துக்கொள்ளலாம்.

இதேபோல, ஒவ்வொருவரும் தங்களின் வருமானத்தினை உறுதிப்படுத்த பின்வரும் பத்திரங்களில் ஏதாவது ஒன்றின் பிரதியினை இணைக்கலாம்.

A copy of T(4), T1 slip (வருமானத்தினைக் குறிப்பிட்டு வேலைசெய்யும் இடத்தினால் வருமான வரித் திணைக்களத்திற்கு சமர்பிக்கும் சிறு பத்திரம்).

A copy of a "Notice of assessment" வருமான வரித் திணைக்களத்தினால் வழங்கப்படும் வருமான வரி மதிப்பீட்டின் பிரதி பத்திரம்

An original letter of proof of annotated cheque stubs from the employer confirming financial profile details: வேலை இடத்தில் பெறும் சம்பள காசோலையின் பிரிக்கப்பட்ட ஒரு பகுதி அல்லது தொழில்செய்யும் இடத்தில் இருந்து உத்தியோகபூர்வமாக பெறப்பட்ட வருமானத்தினை உறுதிப்படுத்தும் கடிதம்.

Proof of other sources of income. ஓய்வூதிய வருமானம், முதலீட்டு வருமானம் என்றால் அதனை உறுதிப்படுத்தும் பிரதிகள்

Employment Insurance Pay stubs. தொழில் காப்புறுதி வருமானமாயின் பிரிக்கப்பட்ட காசோலையின் பிரதி.

சகல குறிப்பிடப்பட்ட விண்ணப்பங்கள், வருமானத்தினையும், ஆள் அடையாளத்தினையும் உறுதிப்படுத்தும் பிரதிகள் ஆகியவற்றுடன் இவற்றின் பிரதிகளை எடுத்து வைத்துக்கொண்டு, மேலே குறிப்பிட்ட தங்கள் நகரில் உள்ள கனடாவின் குடிவரவு பிரிவுக்கு அனுப்பிவைத்தல் வேண்டும். விண்ணப்பம் அனுப்புவதற்கு எதுவிதமான செலவும் அறவிடப்பட மாட்டாது.

விண்ணப்பம் ஏற்கப்பட்டு முப்பது நாட்களுக்குள் விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்டதா? அல்லது நிராகரிக்கப்பட்டதா? எனக் குறிப்பிட்ட கடிதம் குழுவின் தலைமை பிரதிநிதிக்கு அனுப்பிவைப்பார்கள். இவ்வாறு முப்பது நாட்களுக்குள் தீர்மானம் எடுக்கும் கடிதம் வரவில்லையானால், தீர்மானம் எடுப்பதற்கு கால அவகாசம் கேட்டு இம் முப்பது நாட்களுக்குள் ஒரு கடிதம். அனுப்புவார்கள்.

விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்டால் இவ் விண்ணப்பத்திற்கு ஒரு கோப்பு இலக்கம் (file number) குறிப்பீட்டு தேவையாயின் எங்கு எவருடன் தொடர்பு கொள்ளப்படும் எனக் குறிப்பிட்டு, விண்ணப்பம் இன்னும் எவ்வளவு காலத்தில் ஸ்பொன்சர் பண்ணப்படப் போகின்றவர் தங்கியிருக்கும் நாட்டு கனடிய தூதராலயத்திற்கு அனுப்பிவைக்கப்படும் என குறிப்பிட்டு கடிதம் அனுப்புவார்கள். இவ்வாறு அனுப்பிவைக்கப்படும்போது, விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்டது என்பதுடன், அடுத்த கட்டத்திற்கு முன்னெடுக்கப்படுகிறது என்பதும் உறுதிப் படுத்தப்படுகிறது.

### விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப் பட்ட பின்பு அடுத்த கட்ட நட வடிக்கை என்ன?

உதாரணமாக, ஸ்பொன்சர் பண்ணப்படவேண்டியவர் இந்தியாவுக்கு வந்து, அங்கு பொலிசில் அகதி என பதிந்துவிட்டு தங்கியுள்ளார் அல்லது உலகில் எந்த நாட்டிலாவது எதுவித நிரந்தர குடியுரிமை அந்தஸ்து என அந்த நாட்டில் இல்லாது அங்கு அகதியாக நிற்கின்றார் என கருத்தில் கொள்வோம். அவர் நிற்கும் நாட்டில் உள்ள கனடிய தூதராலயத்திலிருந்து கனடாவின் நிரந்தர வதிவுரிமை பெற்றுக்கொள்வதற்கான விண்ணப்பப் படிவங்கள் அனுப்பி வைக்கப்படும்.

விண்ணப்பத்தினைப் பூரணமாக நிரப்பி, கேட்கப்படும் கேள்விகள் யாவுக்கும் தெளிவாகவும் விபரமாகவும் ஸ்பொன்சர் பண்ணப்பட போகின்றவர்களால் பதில் வழங்கி அனுப்பிவைத்தல் வேண்டும்.

**மேற்குறிப்பிட்ட வழி தவிர, இதனை விரைவாக முன்னெடுப்பதற்கு இன்னும் ஒரு வழி உள்ளது. கனடாவில் சமர்ப்பிக்கப்பட்ட ஸ்பொன்சர் விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்டது என்ற அங்கீகாரம் கடிதத்தில் கிடைத்தவுடன், ஸ்பொன்சர் பண்ணியவர்கள் அக்கடிதத்துடன் மேலும் ஏற்கனவே தாங்கள் கனடாவில் சமர்ப்பித்த விண்ணப்பங்களின் பிரதிகளுடன் ஸ்பொன்சர் பண்ணப்பட வேண்டியவருக்கு அந்த நாட்டு தூதராலயத்தில் இருந்து அனுப்பப்படும் விண்ணப்பப் படிவங்களை, கனடா குடிவரவு பிரிவில் இருந்து எடுத்து அனுப்பிவைத்து, அவர் அதனைத் துரித கதியில் நிரப்பி முடித்து அந்த நாட்டின் தூதராலயத்திற்கு அனுப்பிவைத்தால் சற்று விரைவாக அலுவல் முடியும். அல்லது, கனடாவில் கூட்டாக ஸ்பொன்சர் பண்ணுபவர்கள் கனடா குடிவரவு பிரிவில் இருந்து ஸ்பொன்சர் பண்ணப்படப் போகின்றவரால் நிரப்ப வேண்டிய விண்ணப்பங்களை எடுத்து, அவர் தங்கிநிற்கும் நாட்டுக்கு அனுப்பி, அதனை நிரப்பி கைச்சாத்திட்டு, மீண்டும் அதனை கனடாவிற்கு எடுத்து, தங்களின் குழுவான விண்ணப்பப் படிவங்களுடன் சேர்த்து அனுப்பிவைக்கலாம்.**

**இதுவும் வேலையினை சற்று துரிதமாக முடிக்க உதவும். ஏனெனில், கனடா குடிவரவு பிரிவின் இணைய தளத்தின் தகவல் மையத்தில் இம் முன்னெடுப்புகள் முடிய இரண்டு மூன்று வருடங்கள் எடுக்கலாம் எனவும், காலதாமதம் இல்லாது வேலையினை முடிக்க இத்தகைய ஆலோசனைகளையும் வழிகாட்டல் களையும் வழங்கி இருப்பதனையும் யாரும் அறிந்து கொள்ளலாம்.**

### இரு பக்கத்திலும் விண்ணப் பங்கள் சமர்பிக்கப்பட்ட பின்பு, அடுத்த கட்ட நடவடிக்கை என்ன?

கனடாவுக்கு வருகைதர ஆவலுடன் நிற்கும் ஸ்பொன்சர் பண்ணப்பட வேண்டியவர்களை அந்த நாட்டில் உள்ள கனடிய தூதராலயத்தில் இருந்து நேர்முக பரீட்சைக்கு அழைப்பார்கள்.

விண்ணப்பங்களில் இரு பக்கங்களிலும் இருந்து வழங்கப்பட்ட தகவல்கள் ஒத்த நிலையில் சரியானதா என்பது பரிசீலனை செய்யப்படும்.

இவர் உண்மையில் கலவரங்களால் பாதிக்கப்பட்ட ஒரு அகதியா என்பதுடன் கலவரங்களினால் குறிப்பிடப்பட்ட திகதிகளில் நேரடியாகப் பாதிக்கப்பட்ட இவர்கள், சொந்த நாட்டுக்குத் திரும்புவது என்பது ஆபத்து என்பதுடன் நிரந்தரமாகத் தங்கி வாழ்வதற்கு வேறு நாடு எதுவும் இல்லை என்பதும் நிஜமாக உள்ளதா என்ற விபரங்கள் கதை கதையாகக் கேட்கப்பட்டு பரிசீலனை செய்யப்படும். இவ் விசாரணையில் பாதிக்கப்பட்டதற்கு ஆதாரமாக ஏதாவது நிறுவனங்களில் இருந்து கடிதங்கள், அத்தாட்சிகள் இருந்தால்கூட உதவியாக இருக்கும். கதை சொல்வதற்கு மொழி ஒரு பிரச்சினையாக இருந்தால் அதுபற்றி தெரிவிக்கும்போது, மொழி பெயர்ப்பாளரை ஒழுங்குசெய்து கொடுப்பார்கள். தீவிரவாதங்களுடன் தொடர்புடையவர் என்ற ஒரு சந்தேகம் நேர்முக விசாரணையில் அவர்களுக்கு உருவாகுமானால் அவர்கள் எந்தச் சந்தர்ப்பத்திலும் கனடா வர அனுமதி வழங்கமாட்டார்கள். கனடாவின் அரசாங்கத்திடம் சமூக நல உதவி பெறாது, தமது உழைப்பில் வாழக்கூடியவர்களாக இருப்பார்கள் எனத் தெரிந்தால் அது மேலும் சாதகமாக அமையும்.

கனடாவில் உறவினர்கள் உள்ளனரா? கனடாவின் உத்தியோக மொழியான ஆங்கிலம் அல்லது பிரெஞ்சு மொழியில் புலமை அல்லது அதனை இனிமேலாவது படித்துக்கொள்ளும் திறமை உள்ளதா? கனடாவில் தொழில்செய்யும் திறமைகள் எந்த அளவில் உள்ளது? என்ற விபரங்கள் நேர்முகப் பரீட்சையில் பரிசீலனை செய்யப்படும்.

இது ஒரு மனிதாபிமான அடிப்படையில், போர்ச் சூழலில் பாதிக்கப்பட்ட ஒரு அகதிக்கு குடிவரவு அந்தஸ்து கனடாவில் வழங்கப்படுகிறது. ஏதாவது அவசரமான பாதுகாப்பு இவ் குறிப்பிட்ட அகதிகளுக்கு தேவையா என்பதும் கருத்தில் கொள்ளப்படும். அத்தகைய அவசரமான பாதுகாப்பு தேவையென அவர்கள் ஏற்றுக்கொண்டால், துரித கதியில் கனடாவினுள் வரும் சந்தர்ப்பம் உருவாகலாம்.

நேர்முக பரீட்சைகளின் முடிவில் அல்லது அதன் பின்னர் கடிதம் மூலம் நிரந்தர குடியுரிமை வழங்கப்படுமா இல்லையா என்பதனை அறிவிப்பார்கள். இங்கு முடிவு எடுக்கும் அதிகாரம் அந்த நாட்டின் தூதரக அதிகாரிகளிடமே உள்ளது. ஏற்றுக்கொண்டால் குற்றவியல் பரிசீலனைகள் முடிந்து, மருத்துவ பரிசோதனைக்கு அனுப்பி, அதிலும் திருப்தி என்றால் நிரந்தர வதிவுரிமை பத்திரம் வழங்குவார்கள்.

அடுத்த கட்டம்!
விமானம் ஏற தயாராக வேண்டியதுதான்!
இங்கு விமானம் ஏறத் தயாராகும் நிலையில் இன்னுமோர் வசதியும் உண்டு. தங்கியிருக்கும் நாட்டில் உள்ள கனடிய தூதரகத்தில், கனடிய அரசிடம் விமான பிரயாணரிக்கற் மற்றும் அங்கு செய்யவேண்டிய மருத்துவ செலவுகளுக்கு என கடன்களுக்கு விண்ணப்பிக்கலாம். கடன் வழங்க தகுதியானவரா, கடனை திருப்பி செலுத்துவாரா என்பதனைப் பரிசீலனை செய்து, தூதரக அதிகாரிகள் கடன் வழங்குவது பற்றி முடிவு செய்வார்கள். இக்கடன் வட்டியற்றதும், படிப்படியாகத் திருப்பிச் செலுத்தப்படவேண்டியதுமாகும்.

■ ■ ■

# கருத்தரிக்கின்ற போது ஒரு பயங்கரம் நிகழ்கின்றது!

- சிவா சுப்ரா -

பெரும்பான்மையான பெண்கள், தாம் கருத் தரித்து விட்டோம் என்பதை அறிந்து கொள் வதற்கு குறைந்த பட்சம் 28 நாட்களுக்கு மேல் செல்கின்றது. ஒரு மாதவிடாய் தவறும் போது தான் பெரும்பான்மையான பெண்கள் தாம் கருத்தரித்து விட்டோமா? என்று கேள்விக்குள் மூழ்குகின்றனர். அதன் பிறகு தமது குடும்ப வைத்தியரிடம் சென்று பரிசோதனை செய்து கொள்கின்றனர். அந்த முடிவு வர இன்னம் சில நாட்களாகும்.

ஆனால் அதற்கிடையில் தாம் 'கருத்தரித்து விட்டோம்' என்பதை பெண்கள் அறிந்து கொள்ள முன்னரே இந்த பயங்கரம் நிகழ்ந்து முடிந்து விடுகின்றது. அவர்களுடைய பிறக்காத குழந்தையின் மூளை மற்றும் முள்ளம் தண்டுகளின் வளர்ச்சியை இது பாதிக்கிறது. சமயத்தில் மூளை முழுமையான வளர்ச்சியை அடையாமல் போகின்றனது. அல்லது மூளை முற்றாகவே வளர்ச்சியடையாமல் போய்விடுகிறது. இந் நிலைமை கருவில் உள்ள குழந்தை, கருச்சிதைவடைந்து போகின்ற நிலைமைக்குக் கொண்டு சென்று நிறுத்துகிறது.

இது Neural tube defects (NTDs) என்று அழைக்கப்படுகின்றது. கருப்பையில், பெண்ணின் முட்டையும், ஆணின் விந்தும் இணைந்து 17-30 நாட்களுக்குள் இந்த விபரீதம் நடந்து முடிந்து விடுகின்றது. இவை எல்லாம் நடந்து முடிந்த பின்னர் தான் கர்ப்பம் தரித்துள்ளதை அறிந்து பெண் பெருமகிழ்சி அடைகின்றாள். அவள் மட்டுமல்ல, அவள் கணவன், குடும்பத்தினர் என்று எல்லோருமே மகிழ்சியில் திளைத்திருக்க, அவர்கள் அறியாத வண்ணம் ஒரு பயங்கரம் நடந்து முடிந்திருக்கும். இந்த Neural tube defectsஆல் பாதிக்கப்பட்டதின் பின்னரும், கருச்சிதைவடைவதிலும் நின்றும் தப்பித், தவறிப்பிறக்கின்ற குழந்தைகள் பிறந்த சில மணிநேரங்களில் இறந்து போகின்றன. அதனையும் மீறி உயிரோடு உள்ள குழந்தைகள் உள்ளன. அவை தம் வாழ்நாள் முழுவதும் மூளை வளர்ச்சிக் குறைபாடுடனோ அல்லது அங்கவீனர்களாயோ வாழவேண்டி ஏற்படுகிறது.

கனடாவில் வருடாந்தம் 260 குழந்தைகள் இந்த Neural tube defects (NTDs) உடன் பிறக்கின்றார்கள். இதே Neural tube defects (NTDs) வருடாந்தம் நாலாயிரம் கர்ப்பிணிகளை அமெரிக்காவில் பாதிக்கிறது. இதில் 3000 குழந்தைகள் இக்குறைபாட்டுடன் பிறக்கின்றனர் என்கின்ற தகவல்கள் புதிய குழந்தைக்காக, பெரும் எதிர்பார்ப்போடு காத்துக்கொண்டிருக்கும் பெற்றோர்களுக்கு மனக்கிலேசத்தை ஏற்படுத்தத் தான் செய்யும். கருத்தரிப்பின்போது முதலில் முதலாவது கலம் உருவாக்கப்படுகின்றது. பின்னர் இது இரண்டு கலமாக பிரிகின்றது. அதன் பிறகு நான்கு, எட்டு, பதினாறு என்று பிரிவடைந்து மில்லியன் அளவுக்குக் கலங்கள் உருவாகின்றன. கலங்கள் பிரிவடைவது மட்டுமில்லை இந்தக் கலங்களில் இருந்து சொல்லிவைத்தாற்போல் உறுப்புகளும் பின்னர் உருவாகின்றன. கருத்தரித்து பதினேழு நாட்களிலிருந்து முப்பது நாட்களுக்குள், மூளையாக மற்றும் முள்ளந்தண்டாக உருவாக வேண்டிய திசுக்கள் உரிய முறையில் வளர்ச்சியடையாமல் தடைபடுகின்ற நிலை (when the tissues that form the brain and spinal cord fail todevelop properly) Neural tube defects (NTDs) என்று அழைக்கப்படுகின்றது. இச்சமயத்தில் வழமையாக தாம் கர்ப்பம் தரித்துள்ளதையே பெண்கள் அறிந்திருப்பதில்லை.

Neural tube defects (NTDS) பலவகைப் படும். கபாலம், மூளை முழுமையாக வளர்ச்சியடையாத நிலைமை அல்லது மூளை முற்றாகவே வளர்ச்சியடையாமல் போய்விடுகின்ற நிலை Anencehaly என்று அழைக்கப்படுகின்றது. இத்தகைய சந்தர்ப்பத்தில் இது கருச்சிதைவில் முடிகிறது (miscarriage). மீறிப் பிறக்கின்ற குழந்தைகளும் சில மணி நேரத்தில் இறந்து விடு-



கின்றன. மூளை வளர்ச்சி குன்றி, கால்கள் செயலிழந்து போய், சிறுநீரகம் மற்றும் குடலின் செயற்பாடுகளில் குறைபாடுகள் ஏற்பட்டு, கட்டுப்பாடு இல்லாமல் மலம், சலம் வெளியேறுகின்ற நிமைமை Spina bifida என்றும் அழைக்கப்படுகின்றது. பல சமயங்களில் இத்தகைய குறைபாடுகளுடன் பிறக்கின்ற குழந்தைக்கு பிறந்த சில நாட்களிலேயே சத்திர சிகிச்சை தேவைப் படலாம். நிலைமைகளைப் பொறுத்து இவர்கள் வாழ்நாள் முழுவதுமே குறைபாட்டுடன் (disability) வாழவேண்டியிருக்கும். இவற்றை விட Encephalocele என்று அழைக்கப்படும் குறைபாடும் இந்த Neural tubedefects காரணமாக ஏற்படுகின்றதற்கு வாய்ப்புள்ளது. இந்நிலையில் கபாலத்தில் துவாரம் ஏற் படுகின்றது. இந்தத் துவாரம் மூளையில் உள்ள திசுக்களுக்கு நேர் எதிரே ஏற்படுகின்றது. இந்நிலைமைக்கு உட்படுபவர்கள் பல்வேறு வகையான மூளைக் குறைபாடு உடையவர்களாக இருக்கின்றனர்.

> **"போலிக் அசிட் விட்டமின் ட வகையைச் சார்ந்தது. புரோக்களி *(broccoli),* கீரை, தோடம்பழம், தோடம்பழச்சாறு, சோளம், *Lentils,* அஸ்பரகஸ், *Romaine lettuce,* அரசாங்கத்தின் உத்தரவுப்பிரகாரம் செயற்கையாக*(fortified)* வெள்ளை மாவினால் செய்யப்பட்ட பாண் போன்ற உணவுப்பொருட்களில் இது உள்ளது. ஆனால் தாய்மை உற்ற பெண்களுக்கு தேவையான போலிக் அசிட் உணவுப் பொருட்களில் இருந்து மட்டும் பெற்றுக் கொள்ள முடியாது என்பதால் தினமும் .4mg போலிக் அசிட் கொண்ட வைட்டமின் மாத்திரைகளை இவர்கள் எடுக்க வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டுள்ளனர்."**

## Neural tube defects ஏற்படக் கூடிய அபாயகரமான நிலையில் யார் உள்ளார்கள்?

இந்தக் கேள்வி உங்களுக்கும் எழலாம். இந்தக் கேள்வியை மருத்துவவியலாளர்களிடம் எழுப்பு கின்றபோது, அவர்கள் தமது விரல்களை ஒட்டு மொத்தமான எல்லாப் பெண்களையும் நோக்கியே நீட்டுகின்றனர். தாய்மை அடைகின்ற ஒவ்வொரு பெண்ணினது சிசுவும் இந்த அபாயகரமான கட்டத்தில் இருக்கின்றது என்பதால் சுகாதார மையங்கள் இது தொடர்பான தொடர்ச்சியான பிரச்சாரத்தில் இறங்கியுள்ளன.

சுற்றுப் புறச்சூழல், பாரம்பரிய அலகு, சமூக பொருளாதார நிலைமை, இன்சுலினில் தங்கியிருக்கக் கூடிய சலரோக வருத்தம், தாய்மை அடைகின்றவர் அற்ககோல் அருந்துதல் மற்றும் அதிக பருமனாக இருப்பது (obesity), உடலில் போதுமான அளவு 'போலிக் அசிட்' (Folic acid) இல்லாமல் இருப்பது என்பன Neural tube defects ஏற்படக் காரணங்களாகும் எனக் கண்டறியப்பட்டுள்ளது. இந்த இடத்தில் தான் ஒரு வைட்டமினின் முக்கியத்துவம் உணரப்படுகின்றது. கர்ப்பம் தரிப்பதற்கு மூன்று மாத காலம் முன்னர் இருந்தே .4 mg 'போலிக் அசிட்டை' பெண்கள் பாவிக்கத் தொடங்கி கர்ப்பக்காலம் முழுதும் தொடர்ந்து எடுத்து வருவார்களாயின், Neuraltube defectsஐ அதிக பட்சம் 70% தடுக்கலாம் என்று நிருபிக்கப்பட்டுள்ளது. எண்பது வீதமான பெண்கள் 'போலிக் அசிட்டைக்' கேள்விப்பட்டுள்ளனர். ஆனால் 38% மட்டுமே தாய்மை அடையமுன்னர் இருந்தே இதை எடுக்கவேண்டும் என்பதை அறிவார்கள்.

'போலிக் அசிட்' எவ்வாறு Neural tube defects ஏற்படாமல் தடுக்கின்றது என்பது விஞ்ஞானிகளுக்கு திட்டவட்டமாக இதுவரையில் தெரியாது. ஆனால் கருத்தரிக்கின்ற காலங்களில் சிசுவின் திசுக்களினது உருவாக்கத்துக்கும், திசுக்களின் இயற்கையானதும் பூரணமானதுமான வளர்ச்சிக்கும் சிசுவுக்குத் தேவையான போதுமான குருதிச் சுற்றோட்டத்துக்கும் 'போலிக் அசிட்' காரணமாக இருக்கின்றது என அறிந்து வைத்திருக்கின்றனர். அது மட்டுமல்ல கருக்கட்டலின் பின்னர் ஒவ்வொரு புதிய கலமும் உருவாகுவதற்கும், DNA மற்றும் RNA தயாரிக்கப்படுவதற்கும் 'போலிக் அசிட்டே' மிக அத்தியாவசியமானது எனக் கண்டறியப்பட்டுள்ளது.

சுருக்கமாகச் சொல்வதாயின் கலங்கள் பிரிவடைந்து, ஒழுங்கான வளர்ச்சி ஏற்படுவதற்கு போலிக் அசிட்டின் செயல்பாடு முக்கியமானது. ஒரு மில்லி கிராமுக்கும் அதிகமான 'போலிக் அசிட்' எடுக்கக் கூடாது என்று திட்டவட்டமாக அறிவுறுத்தப்படுகின்றனர். அதிகளவான 'போலிக் அசிட்' B12 வைட்டமினை உடலில் இருந்து வெளியேற்றிவிடும் கைங்கரியத்தை செய்துவிடும் என்பதாலேயே இது வலியுறுத்தப்படுகின்றது. ஒரு மனிதருக்கு விட்டமின் எப்போது இருந்து தேவை? என்று கேட்டால், அவர் கருவாக உருவாவதற்கு மூன்று மாதங்களுக்கு முன்னிருந்தே அது தேவை என்பது இங்கு நிரூபணமாகின்றது. அதற்குப் பிறகு அவர் சுகதேகியாகவும், நீண்ட காலமும் உயிர்வாழ, என்னென்ன விட்டமின்கள் தேவை என்பதை பின்னர் பார்க்கலாம்.

■ ■ ■

# துளிர்காலம்

காலங்களில் துளிர் காலம் மிகச்சிறப்பான தாகும். பனிக் குளிரில் வாடிய மக்களுக்கு எதிர்காலத்தில் வரும் நன்மைகளை நினை வூட்டுவதுடன் நம்பிக்கையைத் தரும் கால மல்லவா இது?

வீட்டு உரிமையாளர்கள் துளிர்கால ஆரம் பத்தில் வீட்டுப்பராமரிப்பைக் கவனமெடுப் பது மிக அவசியமாகும். கரைந்து போகும் பனித்திடல்களுடன் இக் காலத்துக்கே உரிய பருவ மழையும் சேர்ந்து பள்ளமான பகுதிகளை வெள்ளக் காடாக்குவது இயல்பே. வீடுகளின் நிலவறைகள் சிறு நீச்சல் தடகமாக மாறுவதற்கு ஏதுவான காலமிது. இதனால் தனிப்பட்ட உடமை களுக்கு பெரும் நட்டத்தைக் கொடுத்து வீட்டின் அடித்தளத்துக்கு - கட்டிடத்திற்கு பெரும் ஊறுளை விளைவிக்கக் கூடும்.

உறைந்த பனிக் கட்டிகள் உருகிய பின்பும் பெரும் மழைக்குப் பின்னும் நிலவறையில் ஒழுக்குகள் ஏற்படலாம். இப்படியான ஒழுக் குகளால் ஏற்படும் தீமைகள் உங்கள் காப்-புறுதிகளால் ஈடு செய்யப்படாமல் போக லாம். குறிப்பாகத் தகுந்த பராமரிப்பு இல்லாததால் ஏற்படும் அனர்த்தங்களை உங்கள் காப்புறுதி ஈடு செய்ய மாட்டாது என்பதே உண்மை.

ஏதிர் பாராமல் காப்புறுதி ஈடு செய்ய மாட்டாது என்று தெரிய வருவதை தவிர் பதற்கு காப்புறுதி செய்யும் வேளையிலேயே எவை எவை காப்புறுதி செய்யப்பட்டுள்ளது எவை தவிர்க்கப் பட்டுள்ளன என்பதனை வீட்டு உரிமையாளர் அறிந்து இருப்பது மிக அவசியம். நீங்கள் காப்புறுதி ஈடு செய்யும் என நம்பி இருந்து பின் அது தரப்படாத பட்டசத்தில் நீங்கள் வேதனைக்கும் மனக் கசப்புக்கும் உள்ளாக நேரிரும்.

ஈரப்பதன், அவைகளுக்கு ஊடாக ஊறிக் கொண்டு வருவது மிக அமைதியாக இடம் பெறுவதுடன் மிக மெதுவாகவும் நடை பெறும். இந்தக் காரணகளால் இது பலர் கவணத்தை ஈர்பதில்லை. உங்கள் நில-வறை நீச்சல் அறையாக மாறுவதிவதைத் தவிர்க்க ஐந்து முக்கிய வழிகளை இங்கு தந்துள்ளேன்.

1. உங்கள் வளவு வீட்டிலிருந்து வெளியே நோக்கி சாய் தளத்தை அமைப்பதனால் நீர் அத்திவாரத்தில் சேராமல் வழிந்தோடி விடும். பொதுவாக புது வீடுகளின் தரை சாய்தளம் வீட்டின் வெளியே நோக்கி சாய்ந்து இருப்பினும் காலப் போக்கில் நிலம் இறுகும் வேளை சமாதளமாக மாறிவிடும். இவ்வேளைகளில் தரையை நீங்கள் மீண்டும் வெளியே நோக்கி சாய்ந்து செல்ல அமைப்பதவசியம்.

2. வீட்டுக் கூரையில் இருந்து வடியும் நீர் வீட்டு அத்திவாரத்திற்கு வராது தள்ளி ஒடும்படி செய்வது அவசியம் மேலும்

இத்தகைய வடிகால்கள் இலைகளில் அடைபடாமல் இருப்பதும் அவசியம். தற்-காலத்தில் கட்டப்படும் வீடுகள் யாவும் மிக நெருக்கமாக இருப்பதனால் அடுத்தவர் வீட்டு நீர் உங்கள் வீட்டு அத்திவாரத்தில் விழாதிருப்பதும் அவசியமாகும்.

3. உங்கள் வீட்டில் விழும் நீர் உங்கள் வீட்டு பூந்தோட்டத்திற்கு அல்லது புல் தரைக்கு செல்ல விடுவது அவசியம். மேலும் இது முடியாதவேளைகளில் நேராக பாதையின் சாக்கடைக்கு ஓட விடவும்.

4. வீட்டில் ஒரு அமிழ்த்தி இறைக்கும் பம்ப் இருப்பது அவசியம் இது கசிந்து வரும் நீரை வெளியே இறைக்க உதவும்.

5. உங்கள் வீட்டின் நிலவறையினைக் காலத்துக்குக் காலம் சோதனை சேய்வதும் அவசியம். பொதுவாக புது வீடுகளின் முதல் ஐந்து வருடங்களும் ஒருவித கட்டுமானங்களும் செய்ய அனுமதிக்கப் பட மாட்டாது. அதன் பின் அவர்கள் பொறுப்பு முடிந்து விடும் இதனால் பொறுப்பு உங்க ளுடையது ஆகும். சிறிய கசிவு ஏற்படும் வேளைகளிலே உடனடியாக ஒரு கட்டிட வல்லுனர் உதவியுடன் அதனைத் திருத்தி விடுவது அவசியம். கசிவு வெடிப்பாகி பெருமளவு நீர் வந்து நீச்சல் தடாகமாகும் வரை இருக்காதீர்கள்.

> “ உறைந்த பனிக் கட்டிகள்
> உருகிய பின்பும் பெரும் மழைக்குப் பின்னும்
> நிலவறையில் ஒழுக்குகள் ஏற்படலாம்.
> இப்படியான ஒழுக்குகளால் ஏற்படும் தீமைகள்
> உங்கள் காப்புறுதிகளால் ஈடு செய்யப்படாமல் போகலாம்.
> குறிப்பாகத் தகுந்த பராமரிப்பு இல்லாததால் ஏற்படும்
> அனர்த்தங்களை உங்கள் காப்புறுதி
> ஈடு செய்ய மாட்டாது என்பதே உண்மை. ”

**- செந்தூரன் புனிதவேல் -**

நிலவறையில் குழாய் வெடித்து வெள்ளம் போடும் வேளைகளில் நட்ட ஈடு தரப்படும் (அதுவும் வீட்டில் உரியவர்கள் வசிக்கும் வேளைகளில் மட்டும்) வீட்டில் ஒருவரும் வசியாது விடுதலையில் செல்லும் வேளை யிலும் வேறு இடத்தில் வசிக்கும் வேளை யிலும் காப்புறுதி அமைப்பிடம் வெற்றிட பத்திரம் (Vacant permit) பெறப்பட வேண்டும். இவ் வேளைகளில் குழாய் வெடித்து வரும் வெள்ளம் ஈடு செய்யப்பட மாட்டாது.

சுவர்கள் வெடித்து அல்லது கசிந்து வரும் நீர் ஏன் ஈடு செய்யப்படுவதில்லை என பல-ரும் வினாவுவது உண்டு. காப்புறுதி செய்யப் படும் வீடுகள் எதிர்பாராத அனர்த்தங்க-ளுக்கு எதிராகத்தான் காப்புறுதி செய்யப்-படுகிறது. இதற்கு உதாரணமாக ஒரு நிலைமையை தரலாம்.

ஒரு வீட்டின் கூரை பழசாகி பழதடைந்து ஒழகினால் அதனை காப்புறுதி ஈடு செய்-யாது. ஆனால் புயல் காற்று வீசி கூரை ஒடுகள் விலகி நீர் உள்ளே வந்தால் நட்டத்தை ஈடுசெய்யும். முன்னையது தகுந்த பராமரிப்பு இல்லாததால் ஏற்ப்பட்டது பின்-னையது எதிர் பார்க்காத நிலமையில் நீர் வருவதுமாகும். குழாய் வெடித்து நீர் வந்-தால் அது எதிர்பார்க்காமல் வந்த அனர்த்-தம் அதேவேளை அவைகளுக்கு உள்ளால் நீர் கசிந்து வருவது சரியான பராமரிப்பு இல்லாமையால் ஏற்படுவது. எனவே துளிர் காலத்தில் சற்று உற்சாகமாக பராமரிப்பில் ஈடு படுவோம்..

■ ■ ■



# www.realhouse.ca

## முகவரி காட்டும் முகவர்களாய் நாங்கள்
## வீடு வாங்க விற்க அழையுங்கள்

**Markham & Denison**



**$354,900**

3 Bedrooms, 3 Washroom
Very Demand Location!!
Premium Lot, Main Floor laminate
And Ceramic, 2nd Floor Hardwood,
Freshly Painted, Demand Location,
Do-Not Miss This Home.

**9th Line & Hwy 7**



**$375,900**

3 Bedrooms, 3 Washroom
Lots Of Quality Upgrades,
Oak Staircase, Oversized Walk-In
Closet In Master Bedroom,
High Quality Appliances,
Upgraded Kitchen Cabinets
& Very Clean & Well Maintained.

**Neilson & Sheppard**



**$262,900**

3 + 2 Bedrooms, 3 Washroom
Excellent Move In Condition
Lots Of Upgrades - Must See The Place
Basement Income Of $ 850.00
Close To Schools, TTC & Malls.

**Brimley & Lawrence**



**$339,000**

3 +1 Bedrooms, 2 Washroom
Fully Upgraded Det.Bungalow
In Demand Location. New High Eff.Furnace,
New AC, Windows Replaced,
Upgraded Insulation, Privately Fenced with
Huge 2 Tier Patio In A Cozy Setting.
Move-In Condition.

**Markham & Highglen**



**$242,500**

2 Bedrooms, 2 Washroom
Stunning Low rise Luxury Condo
in most demand Area in Markham
Just Move in Condition
Show like A Model

**Kennedy & Sheppard**



**$179,900**

Luxury Condo In A Very Demand Area.
Ensuit Laundry With Storage Area,
Walk Out To Patio From Living,
Den Could Be Extra Bedroom,
4 Pc Bathroom with Ceramics

**Markham & Bur Oak**



**$354,000**

3 Bedrooms, 3 Washroom
Luxury Freehold End Unit like Semi
Oak Stairs, Bright Basement, Tastefully
Painted, Close to School, Park & Shopping
Must See !! Priced for quick Sale !!

**Neilson & Finch**



**$249,999**

3 Bedrooms, 2 Washroom
Patio Door, Walkout to deck
and back yard, Close to School,
10 Min. walk to Mall,
Medical Clinic & Park

**Warden & St.Clair**



**$269,900**

3 Bedrooms, 3 Washroom
very convenient & Demand Location,
Close to Warden Subway, Freshly Painted
Hardwood Main Floor, Renovated Washrooms
Gas Heating System, Move in Condition

**உங்களுடையது**



**அழையுங்கள்**

Apex Creations - 416-297-0707



HOMELIFE HIGHER STANDARDS

**HomeLife/Future Realty Inc., Brokerage***
262 Markham Road, Scarborough, Ontario M1J 3C5
**Bus.: 416.264.0101 Fax : 416.261.1519**
*Independently Owned and Operated, REALTOR



**Thamil Suberamaniam**
Sales Representative
**Direct : 647.284.4624**
Email : thamilrealtor@gmail.com

**Mugunthan Nadarajah**
Sales Representative
**Direct : 416.276.8025**
Email : homelifemugunthan@gmail.com

Not Intended to Solicit Currently Listed Properties or Buyers Under Contract.

**Make the Right Move, at the Right Time, with the Right Professional**

# வருமானவரியில் மீளப் பெறக்கூடிய கல்வி சேமிப்புத் திட்டம்?.

## கனடிய பாராளுமன்றத்தில் தீர்மானிக்கப்பட்ட ஒரு பிரேரனை!



**தயா பாலன்**
- ஆயுட்காப்புறுதி பிரதிநிதி -

உங்கள் குழந்தைகளின் உயர் கல்விக்காக, மாதாமாதம் தாங்கள் பதிவுசெய்யப்பட்ட கல்வி சேமிப்புத் திட்டத்தில் சேமிக்கும் பணம், அடுத்த வருடம் தங்களின் வருமானவரிப் பத்திரம் தாக்கல்செய்யும்போது அதன் ஒரு பகுதியை மீளப் பெறலாம்.

### இதனை அறிந்துகொண்டீர்களா?

ஏனெனில், கனடிய அரசுகளினால் அண்மையில் புதிதாக பாராளுமன்றத்தில் பிரேரணைக்குக் கொண்டுவரப்பட்ட ஒரு சலுகை! இதுவரை காலமும் இச்சலுகை பதிவுசெய்யப்பட்ட கல்வி சேமிப்புத் திட்டத்தில் அமுல்படுத்தப்படவில்லை.

கடந்த மாதம் பிக்கரிங் ஸ்காபரோ கிழக்கு தொகுதி பாராளுமன்ற உறுப்பினர் (லிபரல் கட்சி) திரு. டான் மக்ரீக், இப்பிரேரணையினை மத்திய அரசின் பாராளுமன்றத்தில் முன்மொழிந்தபோது 156-122 வாக்குகளினால் இது நிறைவேறியது.

இனி, இது செனற் சபையில் அங்கீகாரம் பெற்றதும் மிக விரைவில் நடைமுறைக்கு வரலாம். கல்வி சேமிப்புத் திட்டத்திற்காக வருடத்தில் சேமிக்கும் மொத்தம் 5,000 டொலர் வரையான தொகையினை அரசுக்குச் செலுத்த வேண்டிய வருமான வரியிலிருந்து கழித்துக்கொள்ளலாம். ஏற்கனவே ஒவ்வொருவரும் தங்கள் சம்பளக் கொடுப்பனவுகளில் இருந்து அரசுக்கு வழங்கிய வருமானவரிப் பணத்தில் இருந்து இப்பணத் தொகையின் ஒரு பகுதியினை மீளப் பெறலாம்.

இது பதிவுசெய்யப்பட்ட கல்வி சேமிப்புத் திட்டத்தினை ஊக்குவிப்பதற்காக அரசு வழங்கும் புதிய சலுகை. ஏற்கனவே சேமிப்பினை ஊக்குவிக்கும்20% மானியத்தை அரசு வழங்கிவருவது சகலரும் அறிந்த விடயம். அதாவது, தங்கள் குழந்தைகளின் கல்விக்காக 100டொலர் சேமித்தால் அரசு தங்கள் சேமிப்பில் இலவசமாக 20டொலரை உங்கள் வைப்பில் இடும். இவ்வருட வரவுசெலவுத் திட்டத்தில் மத்திய அரசு இதற்கு மேலும் பணம் ஒதுக்கியதன் மூலம் குழந்தைகளின் உயர் கல்வி சேமிப்பு திட்டத்தினை மேலும் ஊக்குவிக்கின்றது.

பதிவுசெய்யப்பட்ட ஓய்வூதியத் திட்டமும் (RRSP) பதிவுசெய்யப்பட்ட கல்வி சேமிப்புத் திட்டமும் (RESP) கிட்டத்தட்ட ஒரே அம்சங்களையே கொண்டவை.

பதிவுசெய்யப்பட்ட ஓய்வூதியத் திட்டத்திற்கு (RRSP) சேமிக்கும் பணத்தின் வளர்ச்சிக்கு வருமானவரி செலுத்தத் தேவையில்லை. ஆனால், அப்பணத்தினை வெளியே எடுக்கும்போது வரி செலுத்துதல் வேண்டும். இதில் வருடாவருடம் சேமிப்பவர்கள், இச்சேமிப்புத் தொகையின் ஒரு பகுதியினை மீளப் பெறலாம்.

இதேபோல், பதிவுசெய்யப்பட்ட கல்வி சேமிப்புத் திட்டத்திற்கும் (RESP) இதன் வளர்ச்சிக்கு வருமான வரி செலுத்தத் தேவையில்லை. பணத்தினை கல்விச் செலவுக்காக மாணவர்கள் வெளியே எடுக்கும்போது மாணவர்களின் பெயரில் இது வரி செலுத்தவேண்டிய ஒரு வருமானமாகவே கருதப்படும். ஆனால், வருடாவருடம் இதில் சேமிப்பவர்களுக்கு சேமிப்பின் ஒரு பகுதியினை மீளப் பெற்றுக்கொள்ளும் வாய்ப்பு பதிவுசெய்யப்பட்ட ஓய்வூதியங்களுக்கு (RRSP) ஒரு வரையறை இருப்பது போல் இருந்ததா? இதுவரை இருந்ததில்லை. மத்திய அரசு அதனைப் பற்றிச் சிந்திக்கவே இல்லை. ஏன் இந்தப் பாகுபாடு? இதுவே இப்பிரேரணையினை முன்னெடுத்த லிபரல் கட்சி பாராளுமன்ற உறுப்பினரின் ஒரே கேள்வி!

"இத்திட்டத்தின் அமுலாக்கலினால் கனடிய மத்திய அரசானது, வருடம் ஒன்றுக்கு 900 மில்லியன் டொலரினையும் மாகாண அரசு 450 மில்லியன் டொலரினையும் வருமான வரியில் கிடைத்துவரும் பணத்தினை இழக்கப் போகின்றன என்ற காரசாரமான விமர்சனங்களும் பாராளுமன்றத்தில் முன்வைக்கப்பட்டன. ஆனால், அரசின் இழப்பு என்பது பொதுமக்களுக்கு ஒரு ஊக்குவிப்பு சலுகையாகின்றது." என்றார் மத்திய நிதி அமைச்சின் பேச்சாளர் ஒருவர்.

சேமிப்பின் ஊக்குவிப்பு மானியமாக 20.5வீதம் அரசு தாமும் சேர்ந்து இச் சேமிப்புத் திட்டத்தில் வைப்புச் செய்கின்றது.

கடந்த வருடம் மட்டும் மொத்தம் 500 மில்லியன் டொலர்கள் மொத்த மானியமாக மத்திய அரசு இப்பதிவு செய்யப்பட்ட கல்வி சேமிப்புத் திட்டங்களுக்கு வழங்கியுள்ளது என அரசின் புள்ளிவிபர அறிக்கைகள் தெரிவிக்கின்றன.

ஆனால் இங்கு இவ் பாராளுமன்றத்தின் பிரேரனையினை நடைமுறைப்படுத்துவதில், சிக்கல்களும் விமர்சனங்கள் ஆட்சேபனைகளும் தெரிவிக்கப் படுகின்றன.

இதுவரை பாராளுமன்றத்தின் இம் முடிவு நடைமுறையில் வரவில்லை. ஏனெனில் இப் பிரேரனையில் அரசு தமக்கு வருமானவரியில் வரும் வருமானத்தை இழக்கத் தயார் இல்லை என்ற வாதங்கள் முன்வைக்கப்பட்டுள்ளது.

■ ■ ■

# வாழ்க்கைத்துணை



கே. எஸ். பாலச்சந்திரன்

மனைவி என்பவள் எப்போது துணைவி ஆகின்றாள் என்றால் முதுமை வரும்போது என்று சொல்வேன். மனைக்குரியவள், துணைக்குரியவளாவது அப்போதுதான்.

பிரான்சிஸ் பேக்கன் என்பவர் சொல்வார் - இளம்வயதில் மனைவி ஆசைநாயகியாக வும், நடுவயதில் துணையாகவும், முதுமை யில் தாதியாகவும் ஆகின்றாள். உண்மை-யில் வாழ்க்கையில் திருமண பந்தத்தின் அவசியம் புரியத்தொடங்குவதே நடுத்தர வயதின் பிற்பகுதியில்தான். முதுமையின் தொடக்கத்தில் தான்.

பிள்ளைகள் பயணிகள் போன்றவர்கள் என்று கூறுவதில் தவறு ஒன்றுமில்லை. வாழ்வில் இடையில் வந்து எங்களோடு இணைந்து பின்னர் தாங்கள், தங்கள் பிள்ளைகள் என்று போய்விடும் நிலை வரும். அது காலத்தின் கட்டாயம்.

உடன்பிறந்தோரும் அப்படித்தான்.

ஆனால் துணைவி அப்படியா..?

நீண்டகாலவாழ்வின் அனுபவங்களாக எங்கள் குறை, நிறைகளை அறிந்தவள். எங்கள் விருப்பு, வெறுப்புக்களைத்தெரிந்தவள். எங்-கள் சுவைகளை, அருவருப்புகளை அறிந்த-வள். வாழ்க்கை அவளுக்கு புகட்டிய பாடங்கள் அவை.

எங்களின் ஒவ்வொரு அசைவுகளையும் காலாகாலமாக அவதானித்தவள் ஆதலால் அவற்றுக்கான அர்த்தங்களும் அவளுக்கு தெரியும். ''மனம் அறிந்து'' என்று சொல்வார் களே, அது போல எங்களை உணர்ந்த வள், வாழ்க்கைத்துணை.

எனவேதான் முதுமையில் அவளது துணை அத்தியாவசியமாகின்றது.



ஆனால் புலம்பெயர்வாழ்வில் ஒரு மாற்றம் நிகழ்கிறது. ஊரில் இருந்து வருவிக்கப்படும் பெற்றோர் அவர்கள் இணைந்திருக்க வேண்டிய காலத்தில், உயிரற்ற பொருட்க ளைப் போல, ''பங்கு'' பிரிக்கப்படுகிறார்கள். அவர்கள் உணர்வுகளை புரிந்துகொள்ள இந்த அவசர உலகில் அவகாசமும், அவசியமும் இல்லாமல் போய்விடுவதுதான் பெரியசோகம்.

''அம்மா நீங்கள் என்னோடு இருந்து கொள்ளுங்கள்.. அப்பா அண்ணாவோடோ, அக்காவோடோ இருக்கட்டும்.. நாங்கள் உங்களை ஒரு குறையுமில்லாமல் வைத்தி-ருக்கிறோம்..''

என்றால், ''குறை ஒன்றுமில்லை.. திருமூர்த்தி கண்ணா'' என்று பாடிக்கொண்டு இருக்கச்சொல்கிறீர்களா..?

பெற்ற பிள்ளைகளானாலும், பெறாத பிள்ளைகளான மருமக்களானாலும், எத்த-னை விஷயங்களை உங்களோடு அவர்கள் மனம்விட்டுப்பேசமுடியும்..?

உங்களுக்கு கேட்பதிற்கு அவகாசம் இருக் கலாம். இல்லாமல் போகலாம். ஆனால் அவர்கள் உங்களிடம் கேட்பதிற்கு நிச்சயம் தயக்கம் அடைவார்கள். கூச்சப்படுவார்கள்.

சின்னவயதில், எனக்கு ஏதாவது சாப்பாட்டு வகையில் விருப்பம் வந்தால் நான் என் அம்மாவிடம் இப்படிச் சொல்வேன்.

''அம்மா.. எனக்கு அப்பத்திற்கு பசிக்கிறது''

எப்படியோ அன்று அம்மா எனக்கு அப்பம் சுட்டுத்தருவார் என்று எனக்குத்தெரியும்.

திருமணமானபின், என் மனைவி அந்த இடத்தை எடுத்துக்கொண்டார்.

நோய் என்று வந்துவிட்டால், தளர்வு என்று வந்துவிட்டால் தன் மனைவியின் துணைதான், ஒரு முதியவருக்கு ஆறதலாக இருக்கும்.

காரணங்கள் ஏராளம் இருக்கலாம். அவசி யங்கள் கூட இருக்கலாம்.

ஆனால் அவர்கள் இருக்கும்வரை ஒன்றாக வாழவிடுங்கள்.

■ ■ ■



ADCO HOMEDECOR
905-696-6844
6870 Pacific Circle, Mississauga, On
JET AIRWAYS
Reservations
1 877 U FLY JET
(1 877 835 9538)
STANDARD MORTGAGES INC.
Raj S Director/Broker
416 - 993 - 2638
416.918.9771
www.life100.ca
வீடு வாங்க, விற்க...
கரு கந்தையா
Karu Kandiah
Tel: 416-284-
Credit Recovery Point
Saba Inthiran
Tel. 416 412 6363
Cell. 416 856 5154
தமிழன் வழிகாட்டி
செந்தியின்
வழங்கும்
வர்த்தகச் சோலை
South Asian Trade Show
Info: Athavan Publication 416-615-4646
MAY
SAT SUN
3 4
Downsview Park
(Keele & Sheppard)
Special Kids play area
Standard Mortgages ஆதரவில்
பாட்டுக்கு பாட்டு

# கப்ரியேல் கர்சியா மார்க்வெய்ஸின்

# LOVE IN THE TIME OF CHOLERAவை முன்வைத்து



தேவகாந்தன்

சமீபத்தில் நாவல்களை மூலக்கதைகளாகக் கொண்ட மூன்று சினிமாக்களைப் பார்க்கக் கூடிய வாய்ப்புக் கிடைத்தது. இது வாய்ப்பானது ஓர் எதிர்பாராத அமைவில் ஏற்பட்டதுதான். முதலில் NO COUNTRY FOR OLD MEN. கொர்மாக் மக்கார்தியின் அதே தலைப்பிலான நாவலைச் சினிமாவாக்கியது. அடுத்தது கப்ரியேல் கர்ஸியா மார்க்வெய்ஸின் நாவலான LOVE IN THE TIME OF CHOLERA, சினிமாவாகி வந்திருந்தது. மூன்றாவது ATONEMENT. இது இயன் மக்கீவானின் ATONEMENT நாவலைப் படமாக்கியது.

இவை மூன்றும் அமெரிக்கா, கொலம்பியா, இங்கிலாந்து ஆகிய மூன்று பெரும் நாடுகளை மய்யமாகக் கொண்டவை. மட்டுமில்லை, பெருவாரியான மற்றைய நாவல்கள் சினிமாவாகியபோது தலைப்பு மாற்றம் பெற்றதுபோலன்றி, இவை நாவலின் தலைப்புகளையே சினிமாவாக்கத்திலும் கொண்டிருந்தன. நாவலின் மூலத்திலிருந்து மிகவும் மாறுபட்டுவிடாதபடி இம் மூன்று சினிமாக்களும் எடுக்கப்பட்டிருந்ததை தலைப்புகள் சுட்டிநிற்பது முக்கியமாகக் குறிப்பிடப் பட வேண்டும்.

ஒரு நாவலைப் படமாக்குவது எப்படியென்பதற்கு இம்மூன்றுமேகூட உதாரணமாகக் கூடியவையே. ஆனாலும் மிகச் சமீபத்திலேயே மார்க்வெய்ஸின் LOVE IN THE TIME OF CHOLERAவை வாசித்திருந்ததாலும், அதன் அதிர்வுகள் நீண்டகாலம் மனத்தில் அடைந்து கிடந்ததாலும் இதையே இங்கு சிலாகிப்புக்குரியதாய் நான் எடுத்துக்கொள்கிறேன்.

தமிழில் அகத்திணை சொல்லும் காதலின் விழுமியங்கள் அற்புதமானவையே. பனித்திணை நாடுகளிலும் பாலைவன நாடுகளிலும்கூட இதற்கீடான காதல்கள் உண்டு. ரோமியோ-யூலியட், அன்ரனி-கிளியோபாட்ரா ஆகியோரின் காதல்கள் காவியமானவை. மார்க்வெய்ஸ் காட்டும் காதல் நவீன இலக்கியத் தளத்தில் அவைக்குச் சமாந்தரமாகப் பயணப்படக் கூடியது.

மார்க்வெய்ஸின் Love In The Time of Cholera முதன்முதலாக ஸ்பானிய மொழியில் கொலம்பியாவில் வெளிவந்தது. 1985இல் இது வெளிவந்தபோதே பல்வேறு விமர்சனங்களைச் சந்தித்தது. இதை அணுக வேண்டிய முறை குறித்து விமர்சகர்கள் எச்சரிக்கைகூடச் செய்தார்கள். மார்க்வெய்ஸே அதுபற்றி இவ்வாறு கூறியுள்ளார்: 'you have to be careful not to fall into my trap.' அத்தனைக்கு உணர்வோட்டமானதும், உணர்வுகளில் வாசகர்களைச் சிக்க வைக்கக்கூடியதுமாகும் இது. மோனா சிம்ப்சன் போன்ற விமர்சகர்கள் இதுபற்றி மிக ஆழமான விமர்சனங்களை முன்வைத்துள்ளனர். இது அரசியலையோ, சமூகத்தையோபற்றிப் பேசவில்லை: மாறாக, காலத்தைப் பற்றிப் பேசுகிறது என்றிருக்கிறார் அவர்.

கரிபியன் கடலோர நகரமொன்றிலிருந்து மய்யம் தொள்கிறது நாவல். டாக்டர் யுவனெல் எர்பினோவின் யுத்தத்தில் முடமான நண்பரொருவர் முதுமையை வாழமுடியாமல் தற்கொலை செய்துகொள்ளும் மரண நிகழ்வுதான் அதன் ஆரம்பம். பின்னோட்டமாக சுமார் ஐம்பது ஆண்டுக் களத்துக்கு விரியும் நாவல், பிறகு நிகழ் தளத்தில் சுமார் இரண்டு ஆண்டுகளை விவரிக்கும். சாதாரணமான முக்கோணக் காதல்தான் நாவலின் கரு. எனினும் அது நகர்ந்து செல்லும் வேகமும் காட்டும் காட்சிகளும் பிரமாண்டமானவை.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி இரண்டு தசாப்தங்களையும், இருபதாம் நூற்றாண்டின் முதல் மூன்று தசாப்தங்களையும் இணைக்கும் நாவலென்றும் இதனைக் கூறமுடியும். இந்த சுமார் அரை நூற்றாண்டுக் காலத்தில் ஒரு பதின்ம வயதுக் காதல், உயிர்பெற்றிருந்து அரை நூற்றாண்டு கழிந்த பின்னால் ஒரு சந்தர்ப்பத்தில் எவ்வாறு இணைந்துகொண்டது என்பதை விபரிக்கும் இந்நாவல் காட்டும் காதலின் இலக்கணம் வித்தியாசமானது. மட்டுமில்லை, அதிசயமானதும். இதுவே கொலரா பரவிப் படர்ந்ததுபோல் வாசக உலகத்தைப் பீடித்தது. தனக்குப் பிடித்த நாவலாக முன்னாள் அமெரிக்க ஜனாதிபதி பில் கிளின்டன் இதைக் குறிப்பிட்டிருப்பதும் இத்தளத்தில் வைத்துப் பார்க்கப்படவேண்டியது.

பெர்மினா டாஸாவுக்கும் புளோறென்ரினோ அரிஸாவுக்கும் தோன்றும் காதலுக்கு பெர்மினாவின் தந்தை காட்டும் தீவிர எதிர்ப்பு மட்டுமில்லை, பெர்மினாவே பின்னால் தன் நிகரற்ற அழகினுக்கு ஏற்ற மணமகனாக தந்திச் சேவை அலுவலகமொன்றில் பணிபுரியும் புளோறென்ரினோ இருக்க முடியாதென நம்பத் துவங்குவதும் அவளை டாக்டர் யுவனெல் எர்பினோவுக்கு மனைவியாக்குகிறது.

காலம் விரைந்து கழிகிறது. மறுபடி பெர்மினா அந்நகருக்கு வரும்வரையான காலத்தில் புளோறென்ரினோவின் அந்தஸ்து உயர்ந்து வெகு பணக்காரனாகி விடுகிறான். புளோறென்ரினோவை மறுபடி பார்க்கும் சந்தர்ப்பத்தில்கூட தன் கணவனான யுவனெலுடன் மாறாத காதல் கொண்டவளாகவே இருக்கிறாள் பெர்மினா. இந்நிலையில் யுவனெலின் மரணம் சம்பவிக்கிறது. இறுதிக் கிரியைகளை முடித்துவிட்டு வரும் பெர்மினாவிடம் புளோறென்ரினோ அதுபோன்ற ஒரு சந்தர்ப்பத்துக்காக தான் அரை நூற்றாண்டுக்கும் மேலாகக் காத்திருப்பதைக் கூறி தன் காதலை வெளிப்படுத்துகிறான். அவனை ஏசி விரட்டுகிறாள் பெர்மினா.

இருந்தும் தனக்குள் ஒழிந்திருக்கும் காதலின் ஒரு பொறியை உணர்வதின் மூலமாய் புளோறென்ரினோவின் தொடர்ந்த காதல் கடிதங்களுக்கு இறுதியாகப் பதிலெழுதத் தீர்மானிக்கிறாள் அவள். அவர்களது தொடர்பு பிள்ளைகள், மருமக்கள் வரை தெரியவருவதும், அதை உதாசீனம்செய்து பெர்மினா புளோறென்ரினோவைச் சந்தித்து வருவதும் மட்டுமில்லை, ஒரு கப்பல் உல்லாசப் பயணத்துக்கும் அவள் அவனுடன் தயாராகிறாள்.

அப் பயணத்தின்போதுதான் அவர்களது முதல் உடலுறவு நிகழ்கிறது. அப்போது அவர்களுக்கு வயது எழுபதுக்கும் மேல்.

இக்கதையை மூலமாய் வைத்து எடுக்கப்பட்ட சினிமாதான் 2007இல் வெளிவந்திருக்கிறது.

நாவலுக்கும் சினிமாவுக்குமிடையே பெரிய மாறுபாடுகள் இல்லையென்பதுதான் இதிலுள்ள விசேஷமே. ஆனால் புளோறென்ரினோவின் பாத்திரம் சற்றே உணர்வுகள் சார்ந்த வகையில் மிகைப்படுத்தப்பட்டுள்ளதாய் ஒரு தீவிர சினிமா ரசிகன் உணரவே செய்வான். பெர்மினாவின் பிரிவின் பின் தான் அவளுக்காக காலமெல்லாம் பெண்சுகமற்று வாழவே புளோறென்ரினோ விருப்பப்படினும், அதன் மறுதலையாகவே வாழ்ந்து முடிக்கிறான். பெர்மினாபற்றிய அவனது நினைப்பை வெறும் இந்திய சினிமாத்தன காதல் தோல்வியாக நாவலிலும் சரி, சினிமாவிலும் சரி நம்மால் காணமுடியாமலே இருக்கும். ஆனாலும் எல்லையற்ற ஒரு காமவிழைச்சில் அவன் விழுந்தே கிடக்கிறான். காதலியின் நினைவினது தீராப் பொறி காரணமாவதா-






கவே வாசகன் அல்லது ரசிகன் உணர்த்தப் பெறுகிறான். அதுவரை அவன் 622 பெண்களோடு உடலுறவைக் கொண்டிருப்பானென்பது சாதாரணமானதல்ல. தணியாத காதலை அவன் தணிக்க எடுத்த முயற்சியாகவே பல்வேறு விமர்சகர்களாலும் இது பார்க்கப்பட்டது.

நவீன இலக்கிய உலகுக்கு மாந்திரீக யதார்த்தவாத நாவல்களை அளித்த கப்ரியேல் கர்ஸியா மார்க்வெய்ஸ் இந்த நாவலிலும் அந்த உத்தியையே பின்பற்றியிருக்கிறார். கொலராவாக ஆசிரியர் எதை உருவகித்தார் என்பதுபற்றி இன்றும் விமர்சகர்களிடையே அபிப்பிராய பேதமுண்டு. அவர் காதலின் வலியையே அவ்வாறு உருவகித்தார் என்று ஒருசாராரும், கொலம்பியா போன்ற ஒப்பீட்டளவில் வறிய நாடுகளில் காலரா என்ற பதமே அச்சம் தருவது, அதனால் வசதியீனங்களின் படிமமாக கொலராவை மார்க்வெய்ஸ் அமைத்தார் என்று ஒருசாராருமாய் அபிப்பிராயங்கள்.

நாவலில் இவ்வாறொரு நிறுதிட்டத்தை அடையமுடியாத் தன்மை, சினிமாவில் தெளிவுள்ளதாகக் காட்சியமைப்பாகியிருக்கும். இது சினிமா தவறிவிழுந்த இடமாகத் தெரியினும், மார்க்வெய்ஸின் மாந்திரீக யதார்த்தவாத நாவலைச் சினிமாவாக்கும் இடத்தில் இப்படியான இடர்ப்பாடுகளை ஒரு பிரதியமைப்பாளன் அல்லது நெறியாளுநன் இவ்வண்ணமே கையாள முடியுமென்பதையும் ஒப்புக்கொண்டே ஆகவேண்டும்.

கொலரா நோய்க்குப் பயந்து இடம்பெயர்ந்து வரும் குடும்பமாக பெர்மினாவின் குடும்பம் இருந்தபோதும், கொலரா வேறொன்றின் அடையாளமாய் நாவலில் இடம்பெறுவதாகவே கருதமுடிகிறது என்பது விமர்சகர்களின் கருத்து.

இவையெல்லாம்கொண்டு ஒட்டுமொத்தமாக நோக்குகையில், நாவலின் இணையாக சினிமா வரமுடியாதெனினும், அது அதுமாதிரியான சினிமாக்களுக்கு இணையாக இருப்பதாய்ச் சொல்லமுடிகிறது.







வெகுஜன சினிமாவா, இடைநிலைச் சினமாவா, கலைச் சினிமாவா என இத் திரைப்படம் குறித்து ஒரு முடிவுக்கு வருவதில் இணக்கப்பாடின்மை தீவிர பார்வையாளர் மத்தியில் உண்டு. இம் மூன்று தன்மைகளும் சேர்ந்த ஒரு நல்ல சினிமா என்பதுதான் என் கணிப்பீடு.

இச் சினிமாவை நாவலுடன் பொருத்திப் பார்த்து தகைமை காண்கின்ற ஒரு முயற்சியே இது. நடிப்பு, நெறியாள்கை, ஒளி ஒலி அமைப்புக்கள்பற்றி இதில் நான் அதிகமும் ஒப்புமைக்குச் செல்லவில்லை என்பதையும் சொல்லவே வேண்டும்.

■ ■ ■

# Tips கொடுக்கும் பழக்கம் உண்டா

இன்று பொதுவாக அனைத்துத் தமிழத் தரப்பினரும் உல்லாசப் பயணம் செல்வது, வக்கேசனுக்கு செல்வது, ஊள்ளூரிலேயே உள்ள பல புதிய இடங்களுக்குச் செல்வது எனப் பல புதிய பழக்கவழக்கங்களை மேற் கொள்கின்றனர்.

இப்படிப் போகுமிடங்களில் விடுதிகளில் தங்குவது, விடுதிகளில் உண்பது மற்றும் பல புதிய சேவைகளை உள்வாங்குவது என்பன நடக்கின்றது.

இப்படிப்போகுமிடங்களிலும் தற்போது வதி-யும் நாடுகளிலும் பல நடைமுறைகள் இருக்கின்றன. அவற்றில் சுற்றுலாத்துறை யுடனும் கேளிக்கைத் துறையுடனும் தொடர் புடைய ஓர் நடவடிக்கை 'ரிப்' (Tips) கொடுப்பதாகும்.

ரிப் என்பதற்கு என்ன சரியான தமிழ் என்பது உண்மையில் புத்தியில் தோன்ற வில்லை. எதையாவது எழுதி தமிழப் பண்டி தர்களிடம் வாங்கிக் கட்டவும் விருப்ப மில்லை.

உண்மையில் ஏன் ரிப் கொடுக்க வேண்டும் என்று ஒருவரும் கேட்பதில்லை. ரிப் என்றால் என்ன

தொடர்ந்து வாடிக்கையாகச் செல்லும் கடையில் அல்லது சேவை பெறும் இடத் தில் அங்கிருக்கும் பணியாளர் மனங் குளிரக் கொடுக்கப்படும் சிறு தொகை இது. பலவேளைகளில் அது விரும்ப்பிக் கொடுப் பதாக இருப்பினும் எழுதப்படாத கட்டாய மாக இருக்கிறது. அதற்குப் பல காரணங் களும் இருக்கின்றன.

பல உணவுச்சாலைகளில் உணவை எடுத்து வந்து தரும் பணியாளரின் ஊதியம் ரிப் தொகை ஒன்று கிடைக்கும் என்ற ஊகத் தின் அடிப்படையியேலயே தீர்மானிக்கப்படு கிறது. ரிப் தொகைகிடைக்கவில்லையாயின் அந்த ஊழியரின் ஊதிய அளவு பாதிப்புக் குள்ளாகும் என்பதே உண்மை.

நான் சாப்பிடும் காசுக்கு மேலோக நான் ஏன் கொடுக்க வேண்டும் என்று கேட்பவர் கள் உள்ளனர். உண்மையில் பிரான்சு நாட்டிலும் வேறு சில ஐரோப்பிய நாடு களிலும் ரிப் எத்தனைவீதம் பில்லில் சேர்க்-கப்பட்டுள்ளது என்று குறிப்பிட்டு அதவும் கூட்டப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். அதை விடவும் சில்லறைகளை கொடுக்கப்படு-வதையும் காணலாம்.

உணவு உங்கள் கைக்கு வந்து சேரும்படி செய்யும் பலருக்கு ரிப் என்ற பெயரில் ஓர் சிறிய தொகை கொடுப்பதில் ஏதும் கேடு இல்லை. பல தமிழ் மக்களுக்கு இப்படி ஒரு தொகை கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் இல்லை. அது பற்றித் தெரிந்த-வரும் பெரிதுபடுத்துவதாக இல்லை.

ஆனால் புதிய வாழக்கை முறையையும் பழக்க வழக்கங்களையும் கைக்கொள்ள விரும்பிவிட்டு அதை எப்படி முறைப்படி தொடர்வது என்று தெரியாமல் இருப்பது பேதமைதான்.

உணவகத்திற்கு போய் அமர்ந்து உணவ-ருந்தியவர் ரிப் கொடுக்க வேண்டியது கட்டாயம்...

உணவை டெலிவரி என்ற பெயரில் வீடடுக்கு எடுத்து சாப்பிட நினைத்தாலும் அதைக் கொண்டு வருபவருக்கு ரிப் கொடுக்க வேண்டும் என்பது கட்டாயம்... எழுதாத கட்டாயம். எவ்வளவு கொடுக்க வேண்டும் என்பதும் எப்படிக் கொடுக்க வேண்டும் என்பதும் கூட தெரிந்திருக்க வேண்டும்.

இல்லாவிட்டால் ...உங்களை வேற்றுக் கிரகத்தில் இருந்து வந்த மனிதராகத்தான் உங்களுக்குச் சேவையைத் தருபவர் எண்ணுவார். அந்த எண்ணத்தை.. எமது சமூகம் பற்றிய தவறான அந்தப் பொதுக் கருத்தைப் பரப்புவார். ...

ஒன்று புதிய பழக்கவழக்கங்களுக்கு போகா மல் தமிழர் வழக்கப்படி இருந்து கொள்ள வேண்டும். அல்லது புதிய நடைமுறையை முழுமையாக கைக்கொண்டு தமிழச் சமூ-கத்தின் மொத்தப் பெயரையும் காப்பாற்றித் தரவேண்டும்.

கேளிக்கை தொடர்பான பணியாளர் அனை வரும் பகுதிநேரத்தில் குறைவான ஊதியத் தில் வேலை செய்பவர்கள். அவர்களுக்கு கிடைக்கும் ஊதியம் மக்கள் வருகையுடன் அதிகரித்துச் செலும். மக்கள் வருகை குறைவாயின் அவரக்ளுக்கு ரிப் குறைவி னால் வரும்படி இருக்காது.

வாடகைக்கு வண்டி அமர்த்தினாலும் அந்த ஓட்டுனர்கள் ரிப் எதிர்பார்ப்பார்கள் என்பது பலருக்ககும் தெரியாதது. பெரும்பாலான நாடுகளில் 10 முதல் 15 வீதம் ரிப் வாடகைக்கு வண்டி ஓட்டும் ஓட்டுனர்கள் எதிர்பார்ப்பார்கள். கனடாவில் 10 - 20வீதம் ரிப் எதிர்பார்க்ககப்படுகிறது.

உணவகங்கள், வாடைகை வண்டி ஓட்டு வோர், உணவு டெலிவரி செய்வோர் அனைவரும் இந்த ரிப் தொகையை எதிர்-பார்க்கிறார்கள். குறிப்பாக தண்ணி அடிக்-கப் போகும் இடதிலும் இந்த ரிப் எதிர்-பார்க்கப்படும்.

ஒரு சம்பவத்ததைச் சுவைக்காகச் சேர்க்க லாம். அண்மையில் நடந்த பெரும் பனிப் புயல் அடித்த நாளில் தமிழ் உணவகம் ஒன்றின் டெலிவரி செய்யும் வாய்ப்பு எனது நன்பருக்குக் கிடைத்தது. அந்தக் கடும் பனிப்புயலில் வீதியில் வேறு வண்டிகளே இல்லை. முதல் ஓடர். ஒரு அடுக்குமாடிக்கு. பெரும் தொகை உணவு. கஸ்டப்பட்டு நடந்து மாடி ஏறி போய்க் கதவைத் தட்டினார். அரைக் கால் சட்டை-யுடன் ஒரு நடுவயதிற்கும் சற்றுத் தாண்டி-யவர்.

உணவை வாங்கி வைத்துக் கொண்டே சென்னாராம்.

'தமிழ் போல.. சரியான கஸ்டப்பட்டுத்தான் வந்திருக்கிறீர் போலும்.. கனடா. என்ன செய்யிறது. எல்லாம் செய்யத்தான்வேணும்'
'இந்தாரும் இது உமக்கு... (2 டொலர்.) இந்தக் குளிருக்க எவ்வளவு கஸ்டம்...'
'சரி எவ்வளவு பில்..' (பில் எவ்வளவு என்பது முதலிலேயே வாடிக்கையாளருக்கச் தொலை பேசியில் சொல்லப்பட்டுவிடும்.) பில்லைப் பாரத்துவிட்டு காசைத்தந்தார். அவர் தந்தது பில்லில் உள்ள காசைவிடக் குறைந்தது. உள்ளே பாரத்து "இஞ்சேர் சில்லறை இருக்கோ உம்மட்டை..." பதிலில்லை.

வேறு டெலிவரி ஓடர்கள் வரிசையாய் இருக்க ஒருநிமிசம் பொறுத்துவிட்டு

'கையில சில்லறை எவ்வளவு இருக்கு' என்றார் டெலிவரிக் காரர்

இருந்த சில்லறையுடன் அவர் தந்த ரிப் 2 டொலரையும் சேர்த்தால் பில் காசு சரியாக வருகிறது.

வேண்டிக் கொண்டு நடையைக் கட்டினார் டெலிவரி செய்ய வந்தவர். (உணவு எடுத் தது 45 ெடாடலருக்கு. இவர் உண்மையில் குறைந்தது 5 டொலராவது ரிப் கொடுத்தி ருக்க வேண்டும்.)

சாதாரணமாக ஐந்து நிமிடத்தில் போகக் கூடிய தூரம். அன்று நாற்பது நிமிடத்தின் பின்தான் போகமுடிந்தது.



அதே நாளில்.. இன்னெரு சம்பவம்..

ஒரு மோட்டல்... இளைய தலைமுறை சேரந்து ஒருவரின் பேரத்டே பாட்டி. $150 இருக்கும்... பில் தொகை. 10 டொலரை ஒருவர் எடுக்க மற்றொரு 15 டொலரை மற்றவரும் சேர்த்து 25 டொலர் கொடுத்தார் கள். ..இது நடந்தது அதே நாளில்.. இளைய தலைமுறை இந்த தகவல்களை நடைமுறைகளைத் தெரிந்து வைத்திருக் கிறது.

ஆறுதலுக்காக மனச்சுமையை என்னிடம் இறக்கிச்சென்றார்...

அமெரிக்காவில் 15முதல் 20 வீதம் ரிப் எதிர்பார்க்கப்படுகிறது. சேவை தரும் பல துறைகளிலும் இது எதிர்பார்க்கப்படுகிறது.

இந்த அளவு கோலை வைத்து தென் அமெரிக்கப் பகுதிகளிலும் தரலாம். சில நாடுகளில் ரிப் எதிர்பார்ப்பதில்லை. அந்த நாடுகளில் வாழக்கைத்தரம் ஒன்று மிக உயர்வாக இருக்கும் அல்லது வாழக்கைத் தரம் மிகக் குறைவாக இருந்து ரிப் நடை முறையில் இருக்காது. அனைத்து நாடு களைப்பட்டியலிடுவது சாத்தியமில்லாவிட்-டாலும் தமிழர் அதிகம் போகும் நாடுகளை இங்கு தந்திருக்கின்றோம்.

| நாடு | தொகை வீதம் |
|---|---|
| கியூபா | 10-15 |
| தென் அமெரிக்க-நாடுகள் | 10-15 |
| மெக்சிக்கோ | வண்டி பார்க் பண்ணும் இடத்தில் எதிர்பார்ப்பார் கள். |
| கனடா | 10-20 |
| பிரான்சு | 15 |
| யேர்மனி | 5-10 |
| மலேசியா | 10 |

இவை ஓரபுறமிருக்க தமிழ் மக்கள் தெற் காசியர்கள் என்றில்லை கனடாவின் பல தரப்பினரும் ரிப் நடைமுறை தெரியாதவர் களாக அல்லது கஞ்சர்களாக இருக்கிறார் கள்.

இது நாணயத்தின் மறுபக்கம். நாணயத் துக்கு மூன்றாம் பக்கமும் இருக்கக்கூடும்.

உணவு விடுதிகளில் பிறருடன் சென்று பில் கொடுக்குமிடத்து ஏறக்குரிய உரியளவு ரிப் தொகையை தவறாது கொடுத்து வருவபர் களும் இருக்கிறார்கள்.

தமிழர் ரிப் தொகையைச் சரியாகக் கொடுப்பவர்கள் என்ற எண்ணத்தை அந்த வட்டகையில் உருவாக்கும் நல்லெண்ணம் இதன் நோக்கம்.

நாணயத்துக்கு நான்காம் பக்கம் இருந்-தாலும் இத்துடன் நிறுத்துவோம்.

■ ■ ■

# A1 TOP QUALITY FLORIST





உங்களின் மங்களகரமான வைபவங்களுக்கு

தேவையான பொருட்களுக்கும் நாடுங்கள்

**பிள்ளை 416-269-5522**

**2871 Lawrence Ave. East, Scarborough. Ontario M1P 2S8**

# A1 TOP QUALITY FLORIST

## Funeral Services




**Floral Arrangement for Funeral Needs**

**பிள்ளை 416-269-5522**

**2871 Lawrence Ave. East, Scarborough. Ontario M1P 2S8**






வி. கந்தவனம்

## இயற்கை அழகு

எங்குள்ளவரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய அழகு இயற்கை அழகு. இது இயற்கையில் அமைந்தது; இயல்பாய்த் தெரிவது.

இயற்கையில் அமைந்த உயிர்ப் பொருள்களினதும் உயிரற்ற பொருள்களினதும் நல்லியல்புகளே அழகு. இப்பண்புகள் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் ஆறுடனும் இசைந்து வருதலும் இயல்பு. சில உதாரணங்கள்:

| | | |
|---|---|---|
| பொருளழகு | - | மயில், பூ, தமிழ் |
| இடவழகு | - | கானமயில், குறிஞ்சிப் பூ, ஈழத்தமிழ் |
| காலவழகு | - | கார்மயில், கார்த்திகைப் பூ, பழந்தமிழ் |
| சினையழகு | - | தோகை மயில், கொடிப் பூ, இயற்றமிழ் |
| குணவழகு | - | பச்சை மயில், செவ்வந்திப் பூ, செந்தமிழ் |
| தொழிலழகு | - | ஆடு மயில், நறுமணப் பூ, பயிலுந் தமிழ் |

இயற்கைப் பொருள்களின் வடிவங்களுக்கு மிகவும் பழக்கப்பட்டு விட்ட மக்கள், அவ்வடிவங் களையே முழுமை வாய்ந்த அமைப்புக்களாகக் கருதுகின்றனர். இந்த முழுமையை அழகின் அடிப்படையாகக் கொண்டு வடிவங்களைக் கணிக்கின்றனர். முழு வடிவத்தில் ஒன்றேனுங் குறையின் அவ்வடிவத்தை அழகற்றதெனக் கொள்கின்றனர்.

மூக்கில்லாதவளை அழகி என்று அவர்களால் வர்ணிக்க முடிவதில்லை. ஆறில்லா ஊரில் அழகைக் காண முடிவதில்லை.

எனவே, முழுமை அல்லது செம்மை, அழகுக்கு அடிப்படையாகின்றது. மற்றைய சிறப்புக்கள் யாவும் இதன்மேல் மலர்வன.

தடாகம் அழகானது. தாமரைத் தடாகம் அதனினுஞ் சிறந்தது. அதுபோலவே, சாதாரண மலைக்காட்சியினும் நீர்வீழ்ச்சி கொண்ட மலை, அழகிலே மிகுந்து விளங்குகின்றது. இவை அடிப்படைக்கு அழகு செய்யும் கவர்ச்சிகள். உண்மையில் இத்தகைய கவர்ச்சிகளே மக்கள் கவனத்தை ஈர்க்கின்றன; உள்ளங்களைக் கொள்ளை கொள்கின்றன.

கவர்ச்சி இல்லாத இயற்கைப் பொருள்களும் உள்ளன. ஆந்தை, குரங்கு, கழுதை, எருமை, பட்ட மரம், வெட்டை நிலம் முதலியன கவர்ச்சி இல்லாதவை.

தோற்றத்தால் கவர்ச்சி இல்லாத ஒருவரின் நற்குணத்தால், இனிய பேச்சால், உயர்ந்த ஒழுக்கத்தால் மற்றவர்கள் கவரப்படலாம்.

மாறாக, நல்லொழுக்கம் இல்லாத அழகர் ஒருவரை, கூரையில்லாத வீடே, குலராமன் தூதுவனே என்று இன்னொருவர் ஏசலாம்.

கவர்ச்சியைத் தோற்றுவிக்கும் மற்றைய பண்புகள், தூய்மையும் ஒழுங்குபாடும். சுத்தமாக இருக்கும் இடங்கள் அழகாகத் தெரிகின்றன. கண்டபடி பறக்கும் பறவைகளிலும் வரிசை-யிற் பறக்கும் பறவைக் கூட்டம் காட்சிக்கு இனியது.

இயற்கையைப் பார்த்துப் பாவனை செய்ய விரும்புவது மக்களின் இயல்பு. மக்கள் தோற்றுவிக்கும் அழகு, ஆக்க அழகு. மக்களின் கலை முயற்சிகள் அனைத்தும் இதனுள் அடங்கும். ஆக்க அழகுக்குக் கற்பனை இன்றியமையாதது. அதனால், இதனைக் கற்பனை அழகு எனினும் பொருந்தும்.



இயற்கை அழகும் ஆக்க அழகும் இடத்துக்கு இடமும், காலத்துக்குக் காலமும் வேறுபடும் இயல்பு வாய்ந்தவை; எனினும், அவை பொது வாக எல்லோராலும் மதிக்கப் படுபவை; இரசிக்கப் படுபவை.

மற்றொரு வகை அழகு, தெய்வீக அழகு.

## தெய்வீக அழகு

மனத்தில் அழியாத ஆனந்தத்தைத் தோற்றுவித்து, வாழ்க்கையின் உய்வுக்கு வழி செய்யும் அழகைத் தெய்வீக அழகு என்பர்.

தெய்வீக அழகு, என்றும் நிலைத்திருப்பது; மனத்தை ஈர்க்கும் சக்தி வாய்ந்தது; தெவிட்-டாதது. இதற்கு முருகு என்ற ஒரு சிறப்புப் பெயர் தமிழில் உண்டு. முருகன் என்றால் தெய்வீக அழகுடையவன் என்று பொருள். முருகன் கடவுள். கடவுள் உண்மைப் பொருள். தெய்வீக அழகை, இயற்கைத் தோற்றங்களுக்கெல்லாம் ஆதாரமாயுள்ள உண்மைப் பொருளின் ஒளியாகும் என்று விளக்குவார் கலைப்புலவர் க. நவரத்தினம் அவர்கள்.

பிற கலாசாரங்களில் காணப்படாத ஒரு சிறப்பு, இந்திய கலாசாரத்தில் காணப்படுகின்றது. இந்திய கலாசாரத்திலேதான் அழகு, ஒரு வழிபாட்டுக் கருவியாக வளர்ந்தோங்கி இருக்கின் றது. வைணவத்தில் கண்ணனும் சைவத்தில் முருகனும் அழகுத் தெய்வங்கள்.

மேலும், அழகு வெளிப்பாட்டுக் கலைகளுக்கும் தெய்வங்களே பொறுப்பு என்ற தத்துவமும் வளர்ந்தோங்கி விட்டது.

பொன்னவிர் கொன்றைப் பூப்பொலி செஞ்சடைக்
கண்ணுதல் ஆடற் கலையின் தந்தை

என்று நடராசப் பெருமானும்,

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை

எனக் கலைவாணியும் போற்றப்படுவதைக் காண்கிறோம்.

கலை, ஓர் அபூர்வ சக்தி என்பதனை உணர்த்துதற்கும் அழகு, சுவை (இரசனை) என்ப-வற்றின் தரத்தை உயர்த்துதற்கும் அவற்றுக்குத் தெய்வீக மகத்துவம் வழங்கப்பட்டிருத்தல் வேண்டும்.

அழகு, ஒரு பயன்பாட்டுக் கருவியுமாம். சிறப்பு, நல்லது, நன்மை, பெருமை போன்ற பொருள் களும் அழகுக்கு உள்ளன. அழகலாதன செய்யேல் என்ற ஆத்திசூடியில் அழகு – நன்மை என்ற பொருளில் வந்தது. ஊக்கம் உடைமை ஆக்கத்திற் கழகு என்பது கொன்றை வேந்தன். அழகு இதிற் சிறப்பு ஆகின்றது.

மனிதனுக்கு நன்மை அளிப்பனவும், சிறப்பு, உயர்வு போன்றவற்றைத் தரும் வழி முறைகளும் அழகுடையன. அத்தகைய அழகு என்றைக்கும் வேண்டப்படுவதால் அது அழியாததாயிற்று. அறம், பொருள், இன்பம் என்பன நன்மை செய்யும் பொருள்கள். இவற்றால் முற்றுகின்ற நன்மை, வீடு பேறு. இவை பற்றிப் பேசாத நூல், நூலல்ல என்று விலக்கிய மரபே தமிழ் மரபு.

ஆக, மனத்துக்கு இன்பத்தை அளித்து, அமைதியை ஏற்படுத்துவதோடன்றி, மனத்துக்கும் அதன்மூலம் வாழ்க்கைக்கும் நன்மை செய்யும் அழகே, தெய்வீக அழகாகக் கொள்ளப் படுகின்றது. மனத்துக்கு நன்மை செய்தலாவது, அழுக்காறு முதலிய மலங்களை அகற்றிச் சுத்தம் செய்தல். அதன் மூலம் வையத்துள் வாழ்வாங்கு வாழ உதவுதல்.

அழகு பற்றிய தத்துவம் முருகியல் (aesthetics) எனப்படும். அழகக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்ட கலைகள் நுண்கலைகள் (fine arts) என அழைக்கப் படுகின்றன.

இலக்கியம் ஒரு நுண்கலையா?

## இலக்கியக் கலை

அழகுணர்வைத் தூண்டுகின்ற கலைகள், நுண்கலைகள். அழகு எவரையும் கவர வல்லது; மனத்துக்கு இன்பம் தருவது.

அழகை இரசிப்பதால் வரும் இன்பம், முருகியல் இன்பம் (aesthetic pleasure) எனப்படும். நெடுங்காலமாக ஓவியம், வரைதல், சிற்பம் ஆகிய கலைகளே நுண்கலைகளாகக் கருதப்பட்டு வந்தன. பின்பு நடனம், நாடகம், இசை ஆகியனவும் அழகுக் கலைகளாக அணிவகுக்கத் தொடங்கின.

காலப்போக்கில், அழகு பற்றிய தத்துவ விசாரணைகளின் விளைவாக நுண்கலை என்பதன் பொருள் விரிவு பெறலாயிற்று. மிக நுட்பமான திறன்களை வேண்டி நிற்கும் உயர்தரமான ஆக்கப் படைப்புக்கள் யாவும் நுண்கலைகளாயின. இலக்கியமும் இவற்றுள் ஒன்று.

இக்காலத்தில், நுண்கலைகளை வேறுவிதமாகவும் வகைப்படுத்துகின்றனர்.

கட்புலனுக்கு இன்பம் தரும் ஓவியம், சிற்பம், கட்டிடக் கலை, நிலவடிவமைப்பு (landscape design) புடவையமைப்பு ஆகியவற்றையும் நகை, தளவாடம், பீங்கான் பாத்திரங்கள் போன்றவற்றை உருவாக்கும் கலைகளையும் காட்சிக் கலைகள் ( visual arts) என்கின்றார்கள்.

செவிப் புலனுக்குரிய கலைகளைக் கேள்விக் கலைகள் (auditory arts) என்பர். இசை, நாடகம், கவிதை அல்லது கதை கேட்டல் யாவும் கேள்விக்குரிய கலைகள். இசை, நாடகம், நடனம் போன்றவற்றை அரங்கக் கலைகள் அல்லது அவைக்காற்று கலைகள் (performing arts) எனச்சிலர் வேறுபடுத்துவர்.

நுண்கலை என்பதற்குப் பரந்துபட்ட பொருள் உள்ள காரணத்தால், நுண்கலைகளை இவ்விதம் துணைப்பெயர்கள் பலவால், இனங்காண வேண்டிய நிலை உண்டு. எனினும் அடிப்படையில் இக்கலைகள் யாவும் முருகியல் இன்பத்துடன் தொடர்புடையன.

ஆனால் நுண்கலைகளுக்கும் முருகியல் இன்பத்துக்கும் இருந்துவரும் தொடர்பு பற்றிய கோட்பாடு, இக்காலத்தில் மாற்றம் பெற்று வருகின்றது.

கலைஞர்கள் எப்பொழுதும் அழகுக்குத்தான் முக்கியத்துவம் கொடுப்பார்கள் என்று சொல்வதற்கில்லை. ஆச்சரியத்தை அல்லது அதிர்ச்சியைத் தரும் வகையிலும் பொதுமக்களைத் தூண்டிவிடும் விதத்திலும், கோபம், இரக்கம் போன்ற உணர்ச்சிகளை ஊட்டும் பாங்கிலும் தமது ஆக்கப் படைப்புக்களைக் கலைஞர்கள் அமைக்கலாம்.

கலை, கலைக்காவன்றி வாழ்க்கைக்கு, மனிதகுல முன்னேற்றத்துக்குப் பயன்படல் வேண்டும் என்னும் கொள்கை இக்காலத்தில் வலுப்பெற்றுள்ளது.

வாழ்க்கையின் கொடுமைகளையும் துன்ப நிகழ்ச்சிகளையும் சமுதாய ஒழுங்கீனங்களையும் காட்டுகையில், உள்ளத்துடன் தொடர்புடைய அழகுணர்விலும் மூளையுடன் தொடர்புடைய சிந்தனைத் திறனுக்கே, கலைஞர்கள் முக்கியத்துவம் கொடுக்க முனைகின்றார்கள். இவ்விதமான முயற்சிகளில் முன்னணியில் நிற்பவர்கள் எழுத்தாளர்கள்.

மேலும், நுண்கலைகள் பலவும் சாத்திரப்படுத்தப்பட்டு விட்டன. உதாரணம் பரதநாட்டியம். இலக்கியமும் விதிமுறைகளைக் கொண்ட ஒரு கலையா?

தொடரும்...

■ ■ ■

# வீட்டுச் சந்தையின் வெளிப்பாடு

## (கனடா பதிப்பு)

**S.K. பாலேஸ்**
- வீடு விற்பனை முகவர் -



வீடுகள் விற்பனை 2006ல் இருந்ததைவிட சற்று உயர்ந்து, 2007ல் 228,343 குடியிருப்பு களாக இருந்தது. இது 2008ல் 212,000 ஆகக் குறைந்து, 2009ல் 204,000க்கு வருமென எதிர்பார்க்கப்படுகிறது.

### மறு விற்பனை

பல பட்டியல் மூலம் (MLS) விற்கப்படும் வீடுகள் 2007க்கு ஒரு சாதனையாக 520,000 வீடுகள் வரை விற்கப்பட்டது. 2005ல் முந்திய சாதனை 438,300க்குச் சற்று அதிகமாக இருந்தது. MLS முறை விற்பனை 2008ல் 500,000 விற்பனைக்குக் குறைவாகவும் 2009ல் 480,000 அளவிலும் இருக்கலாம்.

### மறுவிற்பனை விலை

MLS முறையில் விற்பனையாகும் வீடுகளின் விலை பலமாக 10.6 வீதத்தில் 2007இல் இருக்கும். மறு விற்பனைச் சந்தைகள் நிதானமாக வந்ததும் வீட்டு விலை வளர்ச்சி ஏறக்குறைய 5.2 ஆக இருக்கலாம்.
மாகாண விபரம்

### சஸ்கெச்சுவான்

2007ல் சஸ்கெச்சுவான் பொருளாதாரம் பலமாக இருந்தது. இதற்கு இயற்கை வளமும், சிறந்த தொழிலாளர் வளமும் அதிக குடிவரவாளர்களும் உதவுகின்றன. அல்பேட்டா மாகாணத்துக்கு மாற்றாக சஸ்கெச்சுவான் பொருளாதாரச் செழிப்புக்கும் மலிவு விலை வீடுகளுக்கும் பெயர்பெற்றுள்ளது.

2006ல் 3,715ஆக இருந்த குடியிருப்பு விற்பனை 2007ல் 6,000க்குத் தாவியது. இது 20 வருடத்தில் நடந்த அதி உயர் விற்பனையாகும். இது 61.7வீதம் அதிகமாகும். 2008ல் குடியிருப்புகளின் கட்டுமானம் 5,600 குடியிருப்புகளாகும்.

### கியூபெக்

பலமான பொருளாதாரம், அதிக வேலை வாய்ப்பு, வருமானம் அதிகரிப்பு ஆகியன கியூபெக்கின் புதிய வீட்டுச் சந்தையின் 2007ல் ஏற்பட்ட திடீர் செயற்பாட்டுக்குக் காரணமாயிற்று. வீடு கட்டுமானம் 1.4வீதத்தால் உயர்ந்து 2007ல் 48,553 குடியிருப்புகளைக் கொண்டிருந்தது. ஆனால், இது 2008ல் 46,500ஆகக் குறையும். கியூபெக்கில் MLS இன் விலை 2007ல் 6.6 வீதத்தால் அதிகரித்துள்ளது. 2008ல் அது 3.8 வீதத்தால் மேலும் உயரலாம் என நம்பப்படுகிறது.

### தேசிய வீடமைப்பின் வெளிப்பாடு

2007ம், 2008ம் ஆண்டுகள் புதிய வீடுகள் கட்டுவதற்கு மிகவும் சாதகமாக இருந்தது. 2007ல் வீடுகள் 0.4 வீதம் உயர்ந்து 228,343 இருந்தது. 2006ல் இது 227,395 ஆக இருந்தது. பத்து மாகாணங்களில் ஏழில் வீடு கட்டுமானம் 2007ல் உயர்ந்து காணப்பட்டது.

சஸ்கெச்சுவான் 61.7 வீத அதிகரிப்புடன் பிற மாநிலங்களுக்கு முன் மாதிரியாகத் திகழ்ந்தது. வீட்டுக் கட்டுமானம் பின்வரும் மாகாணங்களிலும் அதிகரித்துக் காணப்பட்டன. அவையாவன:
PEI,
Manitoba,
Quebec,
New Brunswick,
BC,
Newfoundland,
Labrador.

எனினும் 2008ல் ஒன்ராறியோ, நியூபவுண்லாந்து, லாப்றடோர், மனிடோபா ஆகியவற்றிலும் வீட்டுக் கட்டுமானம் உயருமென எதிர்பார்க்கப்படுகிறது. குடியிருப்பு விடுகள் கட்டுமானம் 2008ல் 7.3 வீதம் குறைந்து 211,700 ஆகக் குறையலாம். 2008ல் வீடு கட்டுமானம் குறைந்தாலும் 200,000 குடியிருப்புகளுக்கு மேல் ஏழு ஆண்டுகளாகத் தொடர்ச்சியாக விற்ற ஏழாவது ஆண்டாக இது அமைகிறது.

### 2009ல் 204,700 வீடுகள் கட்டப்படுமென எதிர்பார்க்கப்படுகிறது.

தொடர்ச்சியான தொழில் வாய்ப்புகளும் அதிக வருவாயும், ஒரு பலமான வீட்டுச் சந்தைக்கு அத்திவாரமாக அமையும். இவை எல்லாம் இருந்தாலும் சில விடயங்கள், வீடு கட்டும் நடவடிக்கையைத் தளர்த்தலாம். அவற்றில் முக்கியமான விடயம்:

மோட்கேஜ் எடுப்பதில் ஏற்படும் செலவு அதிகரிப்பும் வீட்டு விலை உயர்வும் வீட்டுக்குள்ள கிராக்கியைக் குறைக்கலாம்.

முக்கியமாக முதல் தடவை வீடு வாங்குவோர் இதனால் பயப்படுவார்கள். ஏனெனில், அவர்கள் வீடு வாடகைக்கு எடுக்கும் செலவுக்கும் வீடு சொந்தமாக வாங்குவதால் ஏற்படும் செலவுக்குமிடையில் உள்ள இடைவெளியைப் பார்த்து பயப்படுவார்கள்.

ஏற்கனவே கட்டப்பட்ட வீடுகளுக்கும் புதிய வீடுகளுக்குமிடையில் உள்ள போட்டியினால் புதிய விடுகளுக்குக் கிராக்கி இல்லாமல் போகலாம்.

மத்திய மற்றும் கிழக்கு மாகாணங்களில் வீட்டுச் சந்தை அதிகமாக நிலைத்து நிற்குமானால் வீடு வாங்குபவர்களுக்கு பல தெரிவுகளுக்கு இடம் அளிக்கும்.

மக்களிடையே புது வீடுகளுக்கான விருப்பம் குறைந்துள்ளது. ஒன்ராறியோ, மற்றும் அத்லாந்திக் மாகாணங்களிலும் மக்கள் மத்தியில் புதுவீடுகளுக்கான விருப்பம் குறைந்துள்ளது.

■ ■ ■

**தாய் வீடு பத்திரிகை பற்றிய விமர்சனங்களை எதிர்பார்க்கின்றோம். விமர்சனங்கள் எம்மை ஓர் ஆரோக்கியமான பாதையில் இட்டுச்செல்லும்.**

*E-mail:thaiveedu@gmail.com*
*Fax: 416-849-0594*
*Tel: 416-646-3422*

### மாதமோ சித்திரை, எமக்கோ வேடிக்கை, பாத்திகளோ புதைப்பதற்கு, குறிப்புகளை அறிந்து, இம்மாதமே கிளங்குகளைப் பதிப்போம்.

இளவேனீர்ககாலம், .அநேகமானவர்கள் நீடித்து வாழும் வெங்காயம் போன்ற அமைப்பான கிளங்குகளையும், நிலக்கீழ்த் தண்டுக் கிளங்குகளையும் தெரிவு செய்வார்கள். இவற்றை, ஒருமுறை நட்டுவிட்டால், கவலையின்றி தொடர்ந்து ஒவ்வொரு வருடமும், கிளங்குகள் முளைவிட்டு வளர்ந்து கொண்டேயிருக்கும். நல்ல கிளங்குகளை, Home Depot, Canadian Tire, Valley Garden, Cullen& Wallen போன்ற இடங்களில் இப்போதே சென்று வாங்குங்கள். கிளங்கு நடும் விபரங்கள் வாங்கும் பக்கற்றில் தரப்பட்டிருக்கின்றன.




| இனங்கள் | நடும் காலம் | பூக்கும் காலம் | உபயோகம் |
|---|---|---|---|
| Tulips | April – May | May - July | Excellent display |

தியூலிப்ஸ் கிளங்குகளை பாத்திகளின் கரையோரங்களில் ஒரு அடி இடைவெளியில் 4அங் ஆழத்தில் பதிக்கவேண்டும். தாவரம் வளர்ந்து பல நிறங்களில் குவளை அமைப்பான பூக்களை இளவேனீர்க் காலத்தில் தரும்.

| இனங்கள் | நடும் காலம் | பூக்கும் காலம் | உபயோகம் |
|---|---|---|---|
| Rananculus | Mar-May | Early Spring | Planting under trees |

றனன்குலஸ் கிளங்குகள் பாத்திகளின் நடுப்புறமாக ஒரு அடிஇடைவெளியில் 3 அங் ஆழத்தில் பதிக்கவேண்டும். தாவரம் செழித்து வெட்டுண்ட இலைகளையுடையதாக 12-24 அங் வளர்ந்து பூந்துணர்களைத் தரும். வெள்ளை, மஞ்சள், ஊதா, சிவப்பு, பலவர்ண நிற பூக்களை இளவேனீர்க் காலத்தில் தரும்.

| இனங்கள் | நடும் காலம் | பூக்கும் காலம் | உபயோகம் |
|---|---|---|---|
| Hyacinthes | Mar-April | Spring | ideal for pots, |

கயசின்த் கிளங்குகள் பாத்திகளில் ஓரமாகவும் அடர்த்தியாகவும் பதிக்கலாம். பூக்கள் கதிர்களாக, அடிக்கும் மணிபோன்ற பலநிறப் பூக்களை இளவேனீர்க் காலத்தில் தரும்.

| இனங்கள் | நடும் காலம் | பூக்கும் காலம் | உபயோகம் |
|---|---|---|---|
| Dutch Iris | Feb-April | Spring | Excellent for cutting |

ஐரிஸ் கிளங்குகள் பாத்திகளில் அடர்த்தியாகப் பதிக்கலாம். சித்திரை முற்பகுதியிலேயே பூக்கள் பூத்துவிடும். மிகவும் அழகான பூக்கள், பல நாட்கள் நிலைத்திருக்கக் கூடியவை.

| இனங்கள் | நடும் காலம் | பூக்கும் காலம் | உபயோகம் |
|---|---|---|---|
| Corydalis | April-May | Mid Spring | Excellent beauty |

கோறிடாலிஸ் கிளங்குகள் பாத்திகளில் 12-24 அங் இடைவெளிகளில் பதிக்கலாம். தொடர் பூந்துணரில் அழகிய ஊற்றும் துளிபோலப் பூக்கள் சித்திரை முற்பகுதியில் காணப்படும்.

தொகுப்பு : செ.சந்திரசேகரி

# வயதுமுதிர்ந்தோரின் மனநலம் ( Mental Health of the Elderly)

ஜீவா
திசைராஜா



### அல்ஸ்ஹெய்மர்ஸ் நோய் (Alzheimer's Disease)

அறிவுமழுங்குதலின் ஒரு வடிவமே அல்ஸ்ஹெய்மர்ஸ் நோயாகும். இது ஜேர்மானிய மனவியலாளரான Alois Alzheimer முதலில் 1907இல் விவரித்ததைத் தொடர்ந்து அதிகரித்த கவனத்தைப் பெற்றது.

அமெரிக்காவின் இறப்புக்களுக்கு 4 ஆவது முன்னணியில் இருக்கும் காரணி அல்ஸ்ஹெய்மர்ஸ் நோயாகும். வளர்ந்தோரில் (Adults) 100 பேரில் ஒருவருக்கு இந்நோய் ஏற்படக் கூடிய சாத்தியக் கூறுகள் உண்டு. 65 வயதிற்கு மேற்பட்ட ஒரு மில்லியன் மக்கள், அல்ஸ்ஹெய்மர்ஸ் நோயினால் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளதுடன், இன்னோர் 2 மில்லியன் மக்கள் ஓரளவிலும் இந்த நோயின் பாதிப்பிற்குட்பட்டுள்ளனர்.

இந்நோயினால் ஒருவர் பாதிக்கப்பட்டால் அவரின் குடும்பத்தின் ஏனைய அங்கத்தவர்கள் இந்நோயினால் பாதிக்கப்படக் கூடிய வாய்ப்புகள் அதிகமாகும்.

அல்ஸ்ஹெய்மர்ஸ் நோய் நினைவாற்றலைக் கட்டுப்படுத்தும் மூளையின் பகுதியான மூளைக் கலங்களை இறக்கச் செய்வதன் மூலம் ஆரம்பிக்கின்றது. இது மூளையின் ஏனைய பகுதிகளுக்குப் பரவும்போது, இந்நோயானது, அறிவுபூர்வமான, உணர்வு பூர்வமான மற்றும் நடத்தைத் தன்மைகளையும் பாதிக்ககின்றது.

### அறிகுறிகள்

அல்ஸ்ஹெய்மர்ஸ் நோய் ஆரம்பித்தல் பொதுவாக மிகவும் மெதுவாகவும் படிப்படியானதாகவுமாக இருக்கும். முதலாவது அறிகுறி பொதுவாக உடனடியான நிகழ்வுகளை மறத்தலாக (Short term memory loss) இருக்கும். உதாரணமாக ஒரு நபர் அடுப்பை அணைக்க மறக்கலாம், அல்லது அன்று காலை என்ன மருந்தை எடுத்தார் என்பதை நினைவுக்குக் கொண்டுவர முடியாமல் போகலாம். அளவுக்கதிகமான அக்கறையற்ற தன்மை அல்லது சமூக நடவடிக்கைகளில் இருந்து பின்வாங்குதலும் ஏற்படலாம்.

இந்நோய் தொடர்ந்து முன்னேறும்போது நோயாளிகட்கு குறிப்பாக சிந்திக்க முடியாத தன்மை, பணத்தைக் கையாள்வதில் பிரச்சனை, கட்டணங்களைச் செலுத்தும்போது சரியான முறையில் எண்களைக் கணக்கிட முடியாமை, வாசிக்கும்போது எதனை வாசிக்கிறார்கள் என்பதை விளங்கிக் கொள்ள முடியாமை, அல்லது தமது நாட்களைத் திட்டமிட்டு ஒழுங்கமைத்து வேலை செய்யமுடியாமை போன்றன ஏற்படும். இத்தகைய தன்மைகளுடன் அதிகமாக எரிச்சலடையக் கூடியவர்களாகவும், சண்டையிடுதல், தொந்தரவு கொடுத்தல் போன்ற குணங்களுடன் தோற்றத்தில் அதிக சுத்தமான தன்மையையும் இவர்களிடம் எதிர்பார்க்க முடியாது.

இந்நோயின் இறுதிக் கட்டத்தில், நேரம், திகதி என்பவற்றைப் பற்றி நோயாளி குழப்பமடைவது மட்டுமல்லாது, அவர் எங்கு வாழ்கிறார் என்பதைப் பற்றியோ அல்லது அண்மையில் தான் சென்ற இடத்தைப் பற்றி விளக்கவோ முடியாதிருக்கும். இந்நபர் இறுதியில் பேசுவதை நிறுத்துவதுடன் மனநிலை (Mood) தாறுமாறாக அமைவதுடன், ஒத்துழைக்காத தன்மையும், புலன்களை அடக்க முடியாத தன்மையும் ஏற்படுவதுடன் இறுதியில் தன்னைத் தானே கவனிக்க முடியாதவராகவும் மாறிவிடுவார்.

இந்நோயிற்கான காரணத்தை விஞ்ஞானிகள் இன்னும் வரையறுக்கவில்லை. அல்ஸ்ஹெய்மர்ஸ் நோய் ஏற்பட்ட நோயாளிகளின் மூளையில் நினைவாற்றல் இழப்பு மற்றும் தீர்மானமெடுக்க முடியாமையை ஏற்படுத்தும் ஓர் மூளை இரசாயனம் அதிகளவில் காணப்படுவதாக ஆய்வாளர்கள் தெரிவித்துள்ளனர். ஏனைய ஆய்வாளர்கள், மெதுவாக செயற்படும் ஓர் வைரஸ் இந்த மூளை பாதிப்பை ஏற்படுத்தக் கூடிய சாத்தியக் கூறுகள் காணப்படுகின்றன. அல்ஸ்ஹெய்மர்ஸ் நோயின் காரணம் அறியப்படும் வரை, இந்நோயைக் குணப்படுத்துதல் என்பது பொய்யானதாகவே இருக்கும்.

> "வயதானவர்கள் இன்றைய சமூகத்தை உருவாக்கியவர்கள் மட்டுமல்லாது பல தலைமுறைகட்கு அடித்தளமிட்டவர்கள் என்பதை மனதில் கொண்டு, அவர்களுக்கு பாதகமான மனவுணர்வுகள் ஏற்படாது நடக்க வேண்டியது இளையோரின் கடமை என்பதுடன், அவ்வாறான மனம் சம்பந்தப்பட்ட நோய்கள் ஏற்பட்டால் அவர்களை அதிலிருந்து விடுபடச்செய்ய வேண்டியதும், அச்சந்தர்ப்பத்தில் அவர்களை ஆதரித்து, பாதுகாக்க வேண்டியதும் இளையோரின் பொறுப்பாகும்."

இந்த நோய் பரந்தளவில் காணப்படுதலால், அநேக நிறுவனங்கள், இதனால் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆதரவளிக்கும் குழுக்களை ஒழுங்கமைத்துள்ளதுடன், இந்நோய் பற்றிய கல்வியறிவூட்டும் நூல்கள், கருவிகளை விருத்தி செய்துள்ளதுடன் காப்புறுதித் தகவல்களையும் வெளியிட்டுள்ளன. அநேக ஆதரவளிக்கும் குழுக்கள், நோயாளிகட்கு பகல் நேரத்தில் ஈடுபடக் கூடிய செயற்பாடுகளை ஏற்படுத்திக் கொடுத்துள்ளதுடன், இந்நோயாளிகளை பல வருடங்களாக பராமரித்து வரும் அவர்களின் குடும்ப அங்கத்தவர்கட்கு ஆலோசனைகளையும் வழங்குகின்றது.

### மனஅழுத்தத்திற்கு சிகிச்சை பெறல்

உங்கள் பிரச்சனைகளை அனுதாபத்துடன் கேட்டு விளங்கிக் கொண்டு, விமர்சிக்காமல் கேட்கக் கூடியவர்களிடத்தில் மனச் சுமைகளைக் கூறுவது ஆறுதலளிக்கக் கூடியதாகும். இவ்வாறு உங்கள் மனச்சுமைகளைக் கேட்பவர் ஓர் நண்பராகவோ, உறவினராகவோ, ஓர் தன்னார்வ பணியாளராகவோ (Volunteer) அல்லது நிபுணத்துவம் பெற்றவராகவோ இருக்கலாம். மிகவும் நிபுணத்துவமான உளவியல் அல்லது உரையாடல் சிகிச்சை முறைகள் உள்ளன.

உளச்சிகிச்சை முறையானது (Psychotherapy) உங்களுக்கு கடந்த காலத்தில் என்ன நடந்தது என்பதை விளங்கிக் கொண்டு மன அழுத்தத்தை விளங்குவதற்கு உங்களுக்கு உதவும். இதனை விட உணர்ந்தறியும் நடத்தை சார் சிகிச்சை முறை (Cognitive behavioural therapy) நீங்கள் நன்றாக உணரும் வகையில் (Feel better) உங்களை சிந்திக்க வைக்கும். இது உங்கள் பொது மருத்துவர் அல்லது சமூக மனநல தாதி, உளவியலாளர்கள் போன்றோர்கள் மூலம் ஒழுங்கு செய்யப்படலாம். ஓர் உறவு முறையினால் (Relationship) உங்களுக்கு மன அழுத்தம் ஏற்பட்டிருந்தால், திருமண சிகிச்சை முறை (Marriage theraphy), இழப்புக்கள் அல்லது கடும் துயரம் பற்றிய ஆலோசனை (Bereavement counselling) உங்களுக்கு உதவ முடியும்.

உரையாடல் சிகிச்சை முறைகள் பாதுகாப்பானவை. எனினும் சிலசமயம் கடந்தகால துயரமான நினைவுகள் பீறிட்டுக் கிளம்பலாம். இச்சந்தர்ப்பத்தில் என்ன செய்ய வேண்டுமென்பதை ஓர் சிறந்த சிகிச்சையாளர் அறிவார். இச் சிகிச்சையை நீங்கள் மேற்கொள்ள விரும்பினால் உங்கள் வைத்தியருடன் அல்லது சிகிச்சையாளருடன் கலந்துரையாடலாம்.

### நடைமுறை உதவி (Practical help)

நீங்கள் ஓர் வசதியற்ற வீடமைப்பில் வாழ்ந்தால் அல்லது உங்கள் அயலவருடன் சந்தோஷமற்றிருந்தால் நீங்கள் மன அழுத்தத்திற்கு உட்படலாம். இவ்வாறிருந்தால், நீங்கள் வேறிடத்திற்குச் செல்வதற்கு ஓர் சமூக சேவையாளர் உதவி செய்யலாம். ஆனால், நீங்கள் இன்னும் மன அழுத்தத்திற்கு உட்பட்டிருந்தால், இடம் மாறிச் செல்வது பற்றி உடனடியாக தீர்மானம் எடுக்காதிருப்பது மிக முக்கியமாகும். நீங்கள் மனஅழுத்தத்தில் இருந்து விடுபட்டு நன்றாக உணரும்போது, இடம் மாறியதைப் பற்றி பின்னர் வருத்தப்படலாம். நிபுணத்துவம் பெற்றவர்கள், உங்களை சமூகத்துடன் ஈடுபடச் செய்வதுடன் ஏனைய மக்களுடன் நேரத்தைச் செலவிடக் கூடிய வழிகளில் உதவி செய்வார்கள். அநேக மக்கள் தாம் மனஅழுத்தத்திற்கு உட்படும்போது தனிமைப்படுத்தப்படுவதுடன், மீளவும் தாம் முன்னர் ஈடுபட்ட விடயங்கட்கு திரும்புவதை கடினமாக உணர்வார்கள். மதிய உணவு கிளப்கள் (Lunch clubs) சமூக மையங்கள் (Social centres) போன்றவற்றிற்கு நீங்கள் செல்லலாம். மாலை வேளைகளில் உங்கள் நண்பர்கள், உறவினர்களுடன் ஒன்று கூடுவது நல்லது. இதன் மூலம் நீங்கள் நன்றாக உணர்வதுடன், உங்களுக்கு மன அழுத்தம் திரும்பவும் ஏற்படுவது குறைவாக இருக்கும் என்பதால் ஏனைய மக்களுடன் உரையாடுவது முக்கியமானது.

### எவ்வகையான சிகிச்சை சிறந்தது

உரையாடும் சிகிச்சை (Talking treatments), மனஅழுத்தத்தைக் குறைக்கும் மருந்துகள் என்பன சமமாக வேலை செய்கின்றன. உங்கள் மனஅழுத்தம் கடுமையானதாக அல்லது நீண்ட காலத்திற்கு நீடித்தால் உங்கள் வைத்தியர் மனஅழுத்தத்தைக் குறைக்கும் மருந்துகளை விதந்துரைப்பார். உரையாடல் சிகிச்சையை விட மனவழுத்தத்தைக் குறைக்கும் மருந்துகள் (Antidepressants) விரைவில் வேலை செய்யக் கூடியவை. சிலர் மருந்துகள் இல்லாமலே மனவழுத்தத்தில் இருந்து விடுபட முயற்சி செய்யும் அதேவேளை வேறுசிலர் குளிசைகளை எடுப்பதை விரும்புகின்றனர். நீங்கள் இவை இரண்டையுமே அதாவது உரையாடல் சிகிச்சைகளையும் மருந்துகளையுமே எடுக்கலாம். உங்கள் வைத்தியர் இது தொடர்பாக உங்களுக்கு ஆலோசனை கூறுவர். இத் தெரிவுகள் பற்றி உங்கள் குடும்பத்திடமோ அல்லது உங்களுக்கு நெருக்கமான நண்பருடனோ கதைப்பது சிலசமயம் உங்களுக்கு உதவியாக இருக்கலாம்.

### மனவழுத்தத்திற்கு சிகிச்சை செய்யாவிட்டால் என்ன நடக்கும்?

அநேக மக்கள் சில கிழமை, அல்லது ஒரு மாதம் அல்லது ஒன்று அல்லது 2 வருடங்களின் பின்னர் நன்றாக உணர்வர். ஆனால் குறைந்த காலத்தில் மனவழுத்தம் குணமானால் நல்லது. மனவழுத்தம் கடுமையானதாக இருந்தால், இதனால் பாதிக்கப்பட்டவர் தன் உயிரைத் தானே மாய்த்துக் கொள்ளும் நிலை அல்லது போதுமானளவில் உண்ணாமற், குடிக்காமல் விடுவதன் மூலம் மிகவும் சுகவீனமடையும் நிலை காணப்படுகின்றது.

### ஒரு மனநலநிபுணரை (Psychiatrist) காணுதல்

அநேகமான மக்கள் இந்த சிகிச்சை மூலம் வீட்டில் நன்கு குணமடைந்தபோதும், சிலர் குணமடைவதில்லை. இவ்வாறு ஏற்பட்டால், உங்கள் குடும்ப வைத்தியர் உங்களை சிறந்த நிபுணத்துவ ஆலோசனை பெறுவதற்காக மனநல நிபுணரைப் பார்க்கும்படி கூறுவார். இது மக்கள் உங்களை 'பைத்தியம்' (Mad) என்று நினைப்பதாகக் கருதவில்லை. உங்கள் வைத்தியர் உங்களுக்கு சிறந்த சிகிச்சையைத் தர இரண்டாவது நபரின் கருத்தை (Second opinion) கேட்கிறார் என்பதே அர்த்தமாகும். இன்று, நாடெங்கும் மனவழுத்தத்திற்கு சிகிச்சை அளிக்கக் கூடிய நிபுணத்துவம் பெற்றவர்கள் இருக்கின்றார்கள். நீங்கள் மனவழுத்தத்தினால் பாதிக்கப்பட்டிருந்து இந்தப் பிரச்சனை எவ்வாறு ஏற்பட்டது என்பதை நினைவுக்குக் கொண்டுவருவது கடினமாகும். எனவே ஒரு நண்பர், அயலவர், அல்லது நெருங்கிய உறவினரை உங்களுடன் இருக்கும்படி கூறுங்கள். இதன்மூலம் உங்கள் நிலமை பற்றிய பூரணமான விளக்கத்தை மனநல சிகிச்சை நிபுணர் பெற உதவுவதால் உங்களுக்கு அவரால் உதவ முடியும்.

ஒரு சிறியளவான மக்கள், தமது மனவழுத்தத்திற்கு வைத்தியசாலையில் சிகிச்சை பெற வேண்டியதாக உள்ளது. நீங்கள் மிகவும் சுகவீனமடைந்திருந்தால், அதாவது உணவு உண்ணவோ குடிக்கவோ முடியா-

51ம் பக்கம் பார்க்க...

50ம் பக்கத் தொடர்ச்சி...

திருந்தால் அல்லது உங்கள் உயிரை நீங்களே மாய்த்துக் கொள்ள முயற்சி செய்திருந்தால் உங்களுக்கு Electroconvulsive therapy (ECT) எனப்படும் மின்சிகிச்சை முறை தேவைப்படலாம். இச் சிகிச்சை முறை விதந்துரைக்கப்பட்டால் நீங்கள் உங்கள் உறவினர்களிடமும் வைத்தியர்களிடமும் இதனைக் குறித்து நன்கு ஆலோசிக்க வேண்டும். நீங்கள் இதற்கு உடன்படாவிட்டால், ஓர் தனிப்பட்ட வைத்தியர் இது உங்களுக்கு அவசியமா என தீர்மானிக்கும்படி கேட்கப்படுவார்.

இச் சிகிச்சைகள் ஆரம்பித்த பின் உங்கள் வைத்தியர் கூறும்வரை குளிசைகளை நிறுத்தாது இருப்பது நல்லது. நீங்கள் நன்றாக உணர்ந்தாலும் கூட, குளிசைகளை விரைவாக நிறுத்தியதும் மனவழுத்தம் மீண்டும் ஏற்படும் சந்தர்ப்பங்கள் அதிகமாகும். பொதுவாக உங்கள் உடலாரோக்கியம் நன்றாக இருந்தால் மருந்துகள் 6-12 மாதங்கட்கு எடுக்க வேண்டியது அவசியமாகும். வைத்தியர் மனவழுத்தத்தைக் குறைக்கும் மருந்தை தொடர்ந்து எடுக்கும்படி கூறின் அவர் கூறும் காலம் வரை எடுங்கள்.

## உறவினர்களும் நண்பர்களும் எவ்வாறு பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவலாம்?

உங்கள் நண்பர் அல்லது உறவினர் மனவழுத்தத்திற்கு உட்பட்டதாக நினைத்தால் அவர்களை உதவியைப் பெறும்படி ஊக்குவியுங்கள். மனவழுத்தத்தை அவதானிக்கும் முதலாவது நபர் நீங்களாக இருக்கலாம். உங்கள் நண்பர் அல்லது உறவினர், மனவழுத்தமானது ஒரு பொதுவான நிலை என்பதையும் இது இலகுவில் நீங்கி விடும் என்பதையும் அறியும்படி செய்யுங்கள். அவர்கள் 'பைத்தியமாக' போகவில்லை என்பதை அவர்களுக்கு மீளவும் உறுதிப்படுத்துவது அவசியமாகும். முதன் முதலில் அழைக்க வேண்டியது அவர்களது பொதுவான குடும்ப வைத்தியரையாகும். அவரே சிகிச்சையை முதலில் ஆரம்பிப்பார். அவர்களிற்கு அருகில் அவர்களுடன் நீங்கள் இருப்பதே உங்கள் அக்கறையை அவர்களுக்குக் காட்டப் போதுமானது.

மனவழுத்தத்திற்கு உட்பட்ட வயதானவர்கள் இலகுவில் களைப்படைந்து விடுவார்



கள். அவர்களுக்கு சில நடைமுறை உதவிகளை. அதாவது அவர்கட்கு தேவையான பொருட்களை வாங்க உதவி செய்தல், வீட்டையோ, பொருட்களையோ சுத்தம் செய்வதற்கோ அவர்களுக்கு உதவலாம். அவர்கள் சரியானமுறையில் உணவுண்பதற்கு நினைவுபடுத்த வேண்டியது அவசியமாகும்.

உங்கள் நண்பரையோ உறவினரையோ உரையாடும்படி கட்டாயப்படுத்தாதீர்கள். சில வேலைகளைச் செய்யும்படி கட்டாயப் படுத்தாதீர்கள். சில மெதுவான உடற் பயிற்சிகளைச் செய்வது அவர்களுக்கு உதவிகரமாக இருந்தாலும் நீங்கள் தொந்தரவு கொடுத்தால் அது அவர்களுக்கு உதவியைச் செய்யாது.

பொறுமையாக இருங்கள். வயதான மனவழுத்தத்திற்குட்பட்ட மக்கள் திரும்பத் திரும்ப தமக்கு 'ஒன்றுமில்லையே' என உறுதிப்படுத்துவதற்காகக் கேட்பார்கள். அல்லது உடல்ரீதியில் தமக்கு ஏதோ குறைபாடு இருப்பதாக எண்ணுவார்கள். இதற்கு காரணம் அவர்கள் அதிகமாகப் பயப்படுவதும், தமக்கு என்ன நடக்கிறது என்பதை உணரா ததுவும் காரணமாகும். இவர்கள் கூறுவதை பொறுமையுடன் கேட்க நீங்கள் நேரத்தைச் செலவழிக்க தயாராக இருப்பதுடன், அவர்களுக்கு ஒன்றும் தவறாக நடக்கவில்லை என்பதை உறுதிப்படுத்துங்கள்.

உங்கள் நண்பர் அல்லது உறவினருக்கு தற்கொலை செய்வது போன்ற உணர்வு ஏற்பட்டால் அதனை விசாரிப்பதற்கு கூச்சப்பட வேண்டாம். இதனைப் பற்றி கதைப்பது அவர்களை தற்கொலை செய்ய இன்னும் அதிகமாகத் தூண்டும் என்பது கட்டுக்கதையாகும்.

தற்கொலை எண்ணங்கள் ஒருவருக்கு வரும்போது அவருக்கு உதவி தேவை என்பதை தெளிவாக உணர்த்தும் அறிகுறி இதுவாகும். தற்கொலை எண்ணம் வரும் மக்களை மற்றவர்கள் அக்கறையுடன் விசாரிக்கும்போது, அவர்கள் மனவழுத்தத்தில் இருந்து விடுபடும் உணர்வைப் பெறுகிறார்கள்.

மனவழுத்தத்தில் இருப்பவரை பராமரிப்பது களைப்பான ஒரு செயலாகும். நீங்கள் இந்த விடயத்தில் களைத்துப் போனால் வேறு உதவிகளைக் கேளுங்கள். சமூக மனநல தாதிகள் உங்கள் உறவினருக்கு ஓர் பகல்நேர சமூக மையத்திற்கு செல்ல அல்லது வைத்தியசாலையில் பகல் நேரங்களில் செல்ல ஒழுங்குபடுத்துவார்கள். இதன்மூலம் உங்களுக்கு ஒரு விடுமுறையைத் தருவார்கள். அவர்கள் உங்களுடன் அளவளாவியும் உங்களுக்கு உதவுவார்கள்

இறுதியாக, வயதானவர்கள் இன்றைய சமூகத்தை உருவாக்கியவர்கள் மட்டுமல்லாது பல தலைமுறைகட்கு அடித்தளமிட்டவர்கள் என்பதை மனதில் கொண்டு, அவர்களுக்கு பாதகமான மனவுணர்வுகள் ஏற்படாது நடக்க வேண்டியது இளையோரின் கடமை என்பதுடன், அவ்வாறான மனம் சம்பந்தப்பட்ட நோய்கள் ஏற்பட்டால் அவர்களை அதிலிருந்து விடுபடச் செய்ய வேண்டியதும், அச்சந்தர்ப்பத்தில் அவர்களை ஆதரித்து, பாதுகாக்க வேண்டியதும் இளையோரின் பொறுப்பாகும் என்பதையும் அனைவரும் உணர்ந்து கொள்ள வேண்டும்.

■ ■ ■

# CELL TEL MOBILITY

Cell tel Mobility

For all your cellphone and accessory needs...

We sell new & used cellphones, Pagers and accessories for:

**ROGERS WIRELESS, FIDO, TELUS MOBILITY, BELL MOBILITY**










**WE UNLOCK GSM PHONES**



**Call Toll free:- 1.877.312.5123** *SHOP ONLINE* @ www.celltelmobility.com

## CELL TEL MOBILITY WIRELESS REPAIR CENTER



NOKIA, MOTOROLA, SONY ERICSSON, SAMSUNG, LG HTC,BLACKBERRY,iPHONE.

***Display,Antenna Replacement and all other Repairs (Software & Hardware).***

| | | |
|---|---|---|
| 2637 Eglinton Ave. East,<br>Eglinton Ave/Midland Rd<br>416.266.6818 | 220 - 5990 16th Avenue<br>16th Avenue/ Markham Rd<br>905.201.4859 | 5C - 2950 Birchmount Rd<br>Birchmount / Finch Ave<br>416.495.7776 |

# நாடிசுத்தியின் பயன்கள்:

N.T. கருணாகரன்
- யோகா ஆசிரியர் -



## ஆரோக்கிய ரகசியம் - 3

கடந்த இதழில் நாங்கள் நாடிசுத்தி என்னும் மூச்சுப்பயிற்சியை பார்த்தோம். அதன் தொடர்ச்சியாக ஒரு மனிதர் மூச்சுப்பயிற்சியை செய்வதன் மூலம் அடையக்கூடிய நன்மைகள் பற்றி பார்ப்போம்.

முதலில் சுவாசத்தின் மூலம் என்ன செயற்பாடு எமது உடலில் நடைபெறுகிறது எனப்பார்த்தால், உட்சுவாசம் மூலம் பிராண வாயு கிடைக்கின்றது. இந்த பிராணவாயுவுடன் மிக முக்கியமான பிராணசக்தி எமக்கு கிடைகின்றது. இந்த பிராண சக்தியே – உயிர்ப்பு, உயிர், உயிர் ஆற்றல் ஆக எமது உயிர்வாழ்வை நடத்துகிறது. எமது முன்னோர்களான யோகிகள் மனித உடலில் ஐந்து வகையான வாயுக்கள் பிரதானமாக வேலை செய்வதாகக் கூறுகிறார்கள். அந்த வாயுக்கள் அனைத்துக்கும் தலைமை வாயுவாக பிராணன் எனும் உயிர்க்காற்று இருக்கின்றது.

அடுத்த வெளிச்சுவாசத்தின் மூலம் கரியமில வாயுவாகிய காபனீரொட்சைடு எமது உடலில் இருந்து வெளியேறுகிறது. இவ் வாயு விசத்தன்மை உடையது. உடலின் இயக்கத்தினால் உருவாகும் இரசாயன மாற்றத்தால் இவ்வாயு உருவாகிறது. உள்ளே வரும் காற்றின் அளவை அதிகரிப்பதன் மூலம் உள்ளேவரும் பிராணசக்தி பிராணவாயுவின் அளவை அதிகரிக்கலாம். மற்றும் உடற்கழிவான கரியமில வாயுவை முழுமையாக உடலைவிட்டு வெளியேற்றலாம். இதன்மூலம் உடல் புதுமையடைகிறது. இந்த செயற்பாடு முழுமையாக நடைபெற எமது நுரையீரல் மிகவும் அதி கூடிய கொள்ளளவைப் பெறுவது அவசியம். இதற்காகவே எமது யோகிகள் தந்த ஒப்பற்ற உபாயமே நாடிச்சுத்தியாகும்.

இவ்வாறு மேன்மையான நன்மைகளைத் தரக்கூடிய மூச்சுக்கலையைப் பற்றி அருட்கவி திருமூலர் கூறுவதைக் காண்போம்.

“புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
தெறிப்பட உள்ளே நின்மலம் ஆக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமம் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே”
(தி.ம – 575)

பலரும் எண்ணுவது என்னவெனில் தானாகவே இயங்கும் சுவாசத்திற்கு பயிற்சி எதற்கு என்று. ஆனால் ஒரு கசப்பான உண்மை 100 நபர்களிடம் ஒரு பரிசோதனை நடத்தினால் சுவாசம் சார்ந்த குறைபாடுகள் (அதாவது யோகப்பார்வையில்) 80வீதமான வர்களிடம் காணப்படுகிறது.

அதாவது, சிலர் உடன் களைப்படைவர். சிலர் படி ஏறும்போது மூச்சிரைப்பர். சிலர் அதிவேகமாக சுவாசம் விடுவர்.

எமது உணர்வு நிலைகளுக்கும் மூச்சுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதால் எமது மனமும் மூச்சும் ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்துள்ளது. எனவே பிராணயாமம் எனும் முச்சுக்கலையானது உலகில் மிக முக்கியமானது என்பதை புரிந்துணர வேண்டும்.

மூச்சுதான் உயிர் ஆற்றல் என்பதை குழந்தையும் அறியும் அல்லவா. எனவே மூச்சின் ஆற்றலை மேம்படுத்துவதன் மூலம் வாழ்வில் அனைத்தையும் மேம்படுத்தலாம் என்பது வெளிப்படை உண்மை.

மூச்சுப்பயிற்சியில் பல வகைகள் உண்டு. சில கும்பகப் பிராணாயாகமங்கள் ஒரு ஆசிரியரின் வழிகாட்டலுடன் கற்பதே நலம். மற்றும் சென்ற இதழின் வெளிவந்த நாடி சுத்தி எனும் பயிற்சியால் ஒரு மனிதன் அடையக்கூடிய நேரடி நன்மைகள் சிலவற்றைப் பார்ப்போம்.

- மூச்சின் வேகம் குறைந்து மன அமைதி ஏற்படும்.
- உடலில் நிறைந்த பிராணவாயு இருக்கும். எந்நேரமும் உடல் சுறுசுறுப்பாக இருக்கும்.
- அதிகாலையில் துயில் எழும்போது உடலும் மனமும் உற்சாகமாக இருக்கும்.
- எந்த வேலையானாலும் எமது கவனம் கூடும்.
- மாணவர்களின் கிரகிக்கும் ஆற்றல் அதிகமாகும்.
- பழைய, புதிய உடல் நோய்கள் மறையும்.
- நாளம் இல்லாச் சுரப்பிகள் நலம்பெறும்.
- மன அழுத்தம் நீங்கி அமைதி ஏற்படும்.
- உடல் கழிவுகள் முழுமையதாக வெளியேறும்.
- பயிலுபவரின் அழகு அதிகரிக்கும்.
- உடல் உறுப்புகள் கருவிகளின் மீள்கட்டுமானம் திறம்பட நடைபெறுவதால் நீடித்த இளமை இருக்கும்.

இவ்வாறு இன்னும் எத்தனையோ நேரடி – மறைமுக நன்மைகளை தருவதற்கு யோகக்கலை காத்திருக்கிறது.

அடுத்தாக, மூச்சுப்பயிற்சியால் உடல்க்கலங்கள் எவ்வாறு புதுமை பெறுகின்றது? மூச்சுக்கும் மனதிற்கும் நெருக்கமான தொடர்பு இருப்பதை நாம் முன்பே பார்த்துள்ளோம். உதாரணமாக, கோபம் இருக்கும் போது மூச்சு நிதானம் இன்றி வேகமாக இருக்கும். மூச்சின் வேகம் குறைந்தால் நீண்ட ஆயுள் மற்றும் ஆழ்ந்த அமைதி இருக்கும்.

சாதாரண மனிதர் 1 நிமிடத்திற்கு எத்தனை தடவைகள் மூச்சுவிடுவார்? மூச்சுக்காற்றானது உள்ளே போய் வெளிவர ஒன்று என எடுத்தால் வேண்டும். நிமிடத்திற்கு 15மூச்சுகள் விடும் மனிதன் ஆரோக்கியவான் ஆவான். அவசர இயந்திர கதியான இவ்வுலக வாழ்க்கையில் தற்காலத்தில் நிமிடத்தில் 18மூச்சுகள் இழுத்து விடுபவர்கள்தான் 80% மானவர்களாக இருக்கின்றார்கள். எமது முன்னோர்கள் நிமிடத்திற்கு 12 -13 மூச்சுகள் வரை விட்டார்கள். அவர்கள் வாழ்வு ஆரோக்கியமானதாகவே பெரும்பாலும் அமைந்திருந்தது.

உங்களுக்கு இந்த மூச்சுக் கணக்கு புதிராகவோ அல்லது நம்பிக்கையற்றதாகவோ தென்படலாம். ஆனால் இதுவே யோக சாத்திரம் கூறும் உண்மையாகும். மற்றும் ஒரு மனிதன் ஒரு நிமிடத்திற்கு அதிகூடிய சுவாசங்களை விடாமல் அமைதியாக மூச்சுவிட்டால் அவனது எல்லா முயற்சிகளும் வெற்றி பெறும். அந்த உன்னத நிலையை நாடிசுத்தி எனும் மூச்சுப்பயிற்சி மூலம் நீங்கள் அடைய முடியும்.

முன்பே கூறப்பட்டது போல் மனித உடல் ஓர் இரசாயன தொழிற்சாலையுடன் ஒப்பிடலாம். அதில் கழிவகற்றல் என்பது மிகப் பிரதானமானது. ஒரு நாளைக்கு 24 மணி நேரமும் எமது உடலில் கழிவகற்றும் வேலையை நுரயீரல்கள் இரண்டும் தொடர்ந்து செய்கின்றன. மூச்சுப் பயிற்சிகளினால் எமது வெளிச்சுவாசம் முழுமையாக நடைபெறுவதனால் கரியமிலவாயு முற்றாக தொடர்ந்து அகற்றப்பட்டு இரத்தம் சுத்த மடையும்.

மற்றும் நாடிச்சுத்தி எனும் இந்த ஒரே பயிற்சியால் ஆஸ்துமா மூச்சிறைப்பு இரவில் மூச்சுவிட சிரமப்படுதல் போன்ற குறைபாடுகள் மறைவதுடன் எமது நுரையீரலின் கொள்ளளவு அதிகரிக்கும்.

பல அன்பர்கள் தொலைபேசி மூலம் அழைத்து இந்த மூச்சுப்பயிற்சி முறையை சற்று விரிவான படவிளக்கத்துடன் பிரசுரிக்குமாறு கேட்டதற்கு அமைய இந்த இதழிலும் மீண்டும் நாடிச்சுத்தி எனும் பிராணாயாமத்தை காண்போம்.

## நாடிச்சுத்தி செய்முறை:

பத்மாதனம் அல்லது வைச்சிராதனம் (ஆசனம்) அல்லது முதுகை நேராக இருக்குமாறு பார்த்துக்கொண்டு ஒரு சுவருடன் சாய்ந்து அல்லது கதிரையிலும் இருக்கலாம்.


படம் -1


படம் -2

ஆரம்பத்தில் படம் 1ல் காட்டியபடி வலது கையின் கட்டை விரலால் வலது நாசியை மூடி உள் இருக்கும் காற்றை இடது நாசியால் முழுவதும் வெளிவிடவும்.

பின்னர் இடது நாசியாலேயே 5 வினாடி உள்ளே மெதுவாக இழுத்து மோதிர விரலால் இடது நாசியை மூடி வலது நாசியால் மெதுவாக 5 வினாடி வெளிவிடவும்.

மீண்டும் வலது நாசியாலேயே காற்றை 5வினாடி உள்ளே இழுத்து வலது நாசியை பெருவிரலால் மூடி இடது நாசியால் 5வினாடி வெளிவிடவும்.

கைகளை மடிக்கும் முறையை படத்தில் காணவும்.

இப்பயிற்சியை வெறும்வயிற்றில் காலை அல்லது மாலை 10 நிமிடம் செய்துவர பயனடையலாம்.

தொடரும்...

# நேர்முகத் தேர்வில் எமது திறமைகளை விற்கவேண்டும்

# நேர்முகத் தேர்வும் நாமும்

காலை 9.20 மணி ஒரு அலுவலகத்தின் நேர்முகத் தேர்வாளர்கள் 9.30க்கு நடைபெற அருக்கும் நேர்முகத் தேர்வுக்காக தயாராகிக் கொண்டிருந்தனர். 8.55 மணிக்கு வரவேற்பாளரிடம் இருந்து விண்ணப்பதாரியின் வரவு அறிவிக்கப்பட்டிருந்தது. தேர்வாளர்கள் தேவைப்பட்ட ஆவணங்களுடன் நேர்முகத் தேர்வு அறைக்குச் சென்று விண்ணப்பதாரியின் resume பற்றி சில நிமிடங்கள் ஆராய்ந்தனர். விண்ணப்பதாரியின் பெயரைக் கண்டவுடன் இவர் ஒரு தமிழராக இருப்பார் என்ற யூகம் ஒரு தேர்வாளருக்கு ஏற்பட்டது. 9.28 மணிக்கு வரவேற்பாளரிடம் நேர்முகத் தேர்வுக்கான அழைப்பு விடுக்கப்பட்டது.

விண்ணப்பதாரி நேர்முகத் தேர்வு அறைக்குள் நுழைகின்றார். தேர்வாளர்கள் இருக்கையில் இருந்து எழுந்து கை குலுக்கி சிறிய உரையாடலுடன் மீண்டும் அமர்ந்தார்கள். விண்ணப்பதாரியின் பதற்றத்தைக் குறைப்பதற்காக அவருடன் வாகன நெரிசல் மற்றும் காலநிலை பற்றி சிறிது நேரம் அளவளாவப்பட்டது.

“உங்களைப் பற்றி கூறுங்கள்’’ என்ற கேள்வியுடன் நேர்முகத் தேர்வு ஆரம்பமாகியது. பல விடயங்கள் பேசப்பட்டன. Resume இல் உள்ள ஒவ்வொரு விடயங்களைப் பற்றி முழுதாக அறிவதற்கு தேர்வாளர்கள் முயன்றார்கள். இந்த வேலை இவருக்கு பொருத்தமானதா? என்பதை அறிவதில் குறியாக இருந்தார்கள்.

நேர்முகத் தேர்வு முடிவடைந்தது. இவரிடம் பெறப்பட்ட விபரங்கள் ஆராயப்பட்டன. மேலும் மற்றைய விண்ணப்பாளர்களின் விபரங்களுடன் ஒப்பிட்டு பார்க்கப்பட்டன. பல திறமைகள் இவரிடமிருந்தும் துரதிஸ்டவசமாக இவரை தேர்வாளர்களால் தெரிவு செய்ய முடியவில்லை. இற்கான சில காரணங்களாக இவற்றைக் குறிப்பிடலாம்.

- Resumeஇல் இருந்த விடயங்கள் சம்பந்தப்பட்ட வேலையுடன் தொடர்பின்றி இருந்தமை.
- கேட்கப்பட்ட கேள்விகளுக்கு சுற்றி வளைத்து அதிக நேரம் பேசியமை.
- நிறுவனம் பற்றி எந்தவொரு தேடலும் செய்யாமை.
- நேர முகாமைத்துவம் இன்மை.

இது போன்ற பல திறமையுள்ள விண்ணப்பதாரிகள் நேர்முகத் தேர்வுகளில் தோல்விகளைச் சந்திக்கின்றார்கள். எமது சமுதாயத்தை பொறுத்தவரை அதிகூடிய திறமை சாலிகளாக இருப்பார்கள். ஆனால் நேர்முகத் தேர்வில் கோட்டை விட்டுவிடுவார்கள். உங்கள் திறமைகளை வெளிப்படுத்துவதற்கும் உங்களை நீங்களே விற்பதற்கும் நேர்முகத் தேர்வு பற்றிய தெளிவு அவசியம் தேவை. பல தேடல் தளங்கள் இருக்கின்றன. இருந்தும் இங்கே ஒரு சில விடயங்களை உங்களுடன் பகிர்ந்து கொள்கின்றோம்.

## நம்பிக்கை: (Confident)

உங்களுடைய திறமைகள் பற்றியும் அது எப்படி இவ்வேலைக்கு தொடர்புடையதாக இருக்கின்றது என்பதிலும், முழுமையான அக்கறை காட்டுவது அவசியம். இது உங்களுக்குள் உங்களை அறியாமலேயே ஒரு நம்பிக்கையை வளர்த்து விடும். இந்த நம்பிக்கைதான் உங்களை வெற்றியாளனாக்கும்.

## முதல் சந்திப்பு: (First impression)

முதல் கோணல் முற்றிலும் கோணல் என்பார்கள். அதேபோல் உங்களது முதலாவது சந்திப்பு மற்றும் கை குலுக்கும் முறை என்பன உங்களை ஒரு நல்ல நிலையில் நேர்முகத் தேர்வாளர்களின் மனதில் பதிய வைத்துவிடும். எனவே உங்கள் உடை மற்றும் கை குலுக்கல்களில் கவனமாக இருங்கள். கை குலுக்கும் போது மிகவும் நேர்த்தியாகவும் இறுக்கமாகவும் கண்களை நோக்கியவாறு (eye contact) அமைவது அவசியம். இது எந்த ஒரு இடத்திற்கும் பொருந்தும்.

## நேர முகாமைத்துவம் (Time Management)

நேரம் பிந்துவது எவ்வளவுக்கு எவ்வளவு முக்கியமோ அதேபோல் அதிக நேரத்திற்கு முந்தி வருவதும் ஒரு முக்கியமான விடயமாகும். இது உங்களின் நேர முகாமைத்துவத்தை அப்பட்டமாக வெளிப்படுத்தி விடும். எனவே 15 நிமிடத்திற்கு முன்னதாக நேர்முகத் தேர்வுக்கு செல்வதை தவிர்த்துக் கொள்ளுங்கள். அதேபோல் பிந்தி வருவதையும் முற்றாக தவிர்த்துக்கொள்ளுங்கள்.

## Resume

இது ஒரு மிகப்பெரிய விடயம். இதுபற்றி இங்கே நாம் ஆராயவும் இல்லை ஆனால் இது சுருக்கமாகவும், தேவையான விடயங்களை மட்டுமே கொண்டதாகவும் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். Resumeயின் வடிவத்தைவிட அதில் உள்ள விபரங்களே முக்கியமாக பார்க்கப்படுகின்றன. உங்கள் resumeயில் உள்ள ஒவ்வொரு தரவுகளிலும் மிகுந்த ஆளுமை இருத்தல் வேண்டும். உதாரணமாக, Detail Oriented அல்லது Team Player என்று அநேகமாக எல்லா resumeகளிலும் பார்த்திருப்போம். ஆனால் அதற்குரிய உதாரணங்கள் கேட்டால் சரியான பதில் கிடைக்காது. இது பற்றிய உதாரணங்கள், மற்றும் முன் அனுபவங்களை தயார்படுத்தியிருத்தல் அவசியம்.

நேர்முகத் தேர்வாளர்கள் உங்கள் Resume யில் உள்ள முக்கியமான விடயங்களை எடுத்து அவை எவ்வாறு தமது வேலைக்கு தொடர்புடையதாக இருக்கும் என்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பார்கள். இதேபோல் நீங்களும் அவ்வகையான விடயங்களில் ஆயத்தமாக இருக்கவேண்டும்.

## உங்களைத் தயார்படுத்தல்:

நேர்முகத் தேர்வுக்கு முன்னர் உங்களை நீங்கள் தயார் பண்ணிக்கொள்ளுங்கள். நீங்கள் விண்ணப்பிக்கும் நிறுவனம் பற்றியும், வேலை பற்றியும் உங்களால் முடிந்த தரவுகளை சேகரியுங்கள். பல நேர்முகத் தேர்வுகளில் “எமது நிறுவனம் பற்றி என்ன அறிந்தீர்கள்’’ என நேரடியாகவே கேட்கப்படுகின்றன.

**ராஜ்மோகன் செல்லையா**

## அதிகம் பேசுதல்:

நேர்முகத் தேர்வில் அதிகம் பேசுவதை முற்றாக நிறுத்துங்கள். கேட்கப்பட்ட கேள்வி சாதாரண கேள்வியாக இருக்கும். ஆனால் அதனைப்பற்றி சுற்றி வழைத்து அதிகம் பேசுவார்கள். உங்கள் பதில் சுருக்கமாகவும் சம்பந்தப்பட்டதாகவும் 2 அல்லது 3 நிமிடங்களுக்கு மேற்படாதவையாகவும் இருத்தல் வேண்டும்.

## Eye Contact:

நேர்முகத் தேர்வின் முழுநேரமும் eye contactஐ பேணவேண்டும். ஒன்றுக்கு மேற்பட்ட தேர்வாளர்கள் இருந்தால் எல்லோருக்கும் சமமாக பகிர்ந்து கொள்ளவேண்டும். அதேவேளை ஒருவர் கேள்வி கேட்டால் அந்த தேர்வாளருக்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். பெண், ஆண், மற்றும் பதவி என்று எதையும் பார்க்காமல் யாவரையும் மதித்து (Respect) நடக்க வேண்டும்.



## முன் அனுபவம்:

விண்ணப்பிக்கும் வேலை சம்பந்தப்பட்ட முன்னனுபவங்களின் விபரங்களை பகிர்ந்து கொள்ளலாம். ஆனால் உங்கள் முன்னைய நிறுவனங்கள் பற்றியோ அல்லது அதன் அலுவலகர்களைப் பற்றியோ ஒருபோதும் குறைத்துப் பேசாதீர்கள். இது உங்களைப் பற்றிய எதிர்மறையான எண்ணத்தை ஏற்படுத்திவிடும். இதேபோல் உங்களது தற்போதைய நிறுவனத்தின் email addressஐ இது போன்ற விடயங்களுக்கு ஒருபோதும் உபயோகிக்காதீர்கள்.

## உத்வேகம்: (Energetic)

உங்கள் இருக்கையில் முன்னோக்கிய ஒரு உத்வேகத்துடன் அமர்ந்திருங்கள். இது உங்களை உற்சாகப்படுத்துவது மட்டுமல்லாது தேர்வாளர்களையும் உற்சாகப்படுத்தும். ஒரு உத்வேகத்துடனான விண்ணப்பதாரியையே எந்த ஒரு நிறுவனமும் எதிர்பார்த்திருக்கும்.

## உங்களைப் பற்றி கூறுங்கள் (Self review)

“உங்களைப் பற்றி கூறுங்கள்’’ என்ற கேள்வி அனேகமான நேர்முகத் தேர்வுகளில் கேட்கப்படும் முக்கியமானதொரு கேள்வி. இது உங்களைப் பற்றிய ஒரு முற்று முழுதான, சுருக்கமான ஒரு review என்றே கூறவேண்டும். இந்தக் கேள்விக் குரிய பதிலை நீங்கள் தயாரித்து உங்களுக்குள்ளேயே பரீட்சித்துப் பாருங்கள்.

## கேள்வி நேரம்:

உங்களுக்குரிய கேள்வி நேரம் தரப்படும் போது உங்கள் கேள்விகளை கேட்க தவறாதீர்கள். உங்களுடைய கேள்விகளும் நேர்முகத் தேர்வுக்கு மிகவும் முக்கியமானது. இந்தப் பதவி புதிதாக ஏற்படுத்தப்பட்டதா? அல்லது ஏற்கனவே உள்ள பதவியா? அப்படியானால் எதற்காக இந்த வெற்றிடம் வந்தது போன்றே பல கேள்விகளும் முக்கியமானவை. நாம் சிலவேளைகளில் நினைப்போம் கேள்வி கேட்டால் நேர்முகத் தேர்வாளர்கள் எதுவும் நினைத்து விடுவார்கள் என்று. ஆனால் அப்படி அல்ல. அதே நேரம் உங்கள் கேள்விகளும் தரமானதாகவும் பிரயோசனமானதாகவும் இருக்க வேண்டும்.

நம்மவர்களில் அனேகமானோர் அதிக திறமைகளுடன் இருப்பதைப் பார்த்திருப்போம். ஆனால், அவர்கள் தம்மை விற்கத் தெரியாத காரணத்தால் முன்னேற்றங்களின்றி காணப்படுவார்கள். இதற்குரிய சில அடிப்படைக் காரணங்களாக மொழித் தேர்ச்சி, முன்னைய கல்வி முறைகள், கலாச்சார மாற்றங்கள் போன்றவற்றைக் குறிப்பிடலாம். ஆனால் இவை எல்லாம் எமது முயற்சியினால் திருத்தப்படக் கூடியவை. எனவே இப்படியான விடையங்களில் கவனமெடுத்து எம்மையும் எமது திறமைகளையும் சரியாக விற்கத் தெரிந்தால் வெற்றி எம்மவர் கைகளில் மட்டுமே.

■ ■ ■

# காலத்தின் கோலங்கள் - 2

- பொன் குலேந்திரன் -

தமிழர் கலாச்சாரத்தில், காலத்திற்கு ஏன் மதிப்பளிப்பதில்லை? குறித்த நேரத்தில் வேலைகளைச் செய்து பழகாதது ஒன்று, காலத்திற்கு ஏற்ப தொழில்களுக்கு முக்கி-யத்துவம் கொடுத்துப் பழகாதது மற்றொன்று. காலப்பரிபாலனம் செய்யாததும் ஒரு காரா-ணம். தமக்கு ஒரு குழந்தை பிறக்கும் போது, பிறக்கும் நேரத்தைச் சரியாகக் குறித்து ஜாதகம் குறிப்பதற்கு கொடுக்கும் முக்கியத்துவம் ஒரு கூட்டத்துக்குப் போகும் போது அல்லது செய்யும் வேலைக்கு எடுக்கும் நேரத்துக்கு கொடுப்பதில்லை.

சிறீலங்காவில் பல அரச ஊழியர்கள் நேரத்துக்கு வேலைக்கு போவது கிடை-யாது. இது உயர் அதிகாரிகளும் உட்பட்ட செயலாகும். அரசாங்கத்தில் வேலை செய் பவர்கள் வேலைக்கு தாமதித்து வருவது, மாலை வேலை முடியுமுன் செல்வது போன்றவை தமக்கு அரச உத்தியோகத் தில் கிடைத்த சலுகையாக கருதுகிறார்கள். காலை ஒன்பது மணிக்கு வேலைக்குப் போனாலும் முதல் அரை மணி நேரம் தேனீர் குடிப்பதிலும் பத்திரிகை வாசிப்பதி லும் புதினம் பரிமாறுவதிலும் காலத்தைக் கடத்துவார்கள். அது வழக்கமாகிவிட்டது. பொதுமக்கள் அவர்களுக்காக காத்திருக்க வேண்டிய நிலை. அதோடு மட்டுமல்ல, பகற் போசனத்துக்கு அரைமணி நேரம் கொடுக்கப்பட்டிருந்தாலும் மேலதிக ஒரு மணி நேரம் வெளியே சென்று, உணவுப் பொருட்களை மலிவு விற்பனையில் கியூ-வில் நின்று வாங்கி வர நேரத்தை செலவு செய்வார்கள். உயர் அதிகாரி தமிழராக இருந்தால் அவர்கீழ் வேலைசெய்யும் சிங்கள ஊழியர்களைப் பார்த்து ''இவ்வளவு நேரம் என்ன செய்தாய்'' என்று கேள்வி கேட்க முடியாத நிலை ஒரு காலத்தில் நிலவியது. (Overtime) மேலதிக நேரம் வேலைசெய் வது தமது உரிமை எனவும் சிறிலங்கா அரச ஊழியர்கள் கருதுகிறார்கள். கிடைக் கும் சம்பளத்தோடு கிம்பளமாய் மேலதிக நேரத்தில் வேலை செய்வதன் மூலம் கிடக்-கும் பணம் சேர்கிறது. மேலதிக நேர வேலைக்குக் கிடைக்கும் மதிப்பு அது! அதோடு லீவு நாட்களில் மேலதிக நேர வேலை செய்தால் கிடைக்கும் ஊதியம் ஒன்றரை அல்லது இரு மடங்காகும்.

> **“ ‘ஏழரைச் சனி நடக்கிறது’ அல்லது ‘வியாள சுகமில்லை’ என்று ஜாதகத்தைப் பார்த்துவிட்டு குறை சொல்லி, அக்காலத்தைப் பற்றியே மனம் வருந்துவதால் புதிய பல வியாதிகள் தான் தோன்றும். வளாச்சிக்கு அது தடையை உருவாக்கும். ”**

உண்மையில் மேலதிக நேரத்தில் மிகுதி யாக இருக்கும் வேலையை செய்து முடிக்-கிறார்களா என்பதும் கேள்விக்குரியது.

இங்கு நேரத்துக்கு மதிப்பு கொடுக்கிறார் கள் - காரணம் வேலை செய்யும் நேரம் பணத்தோடு தொடர்புடையது. மேலதிக நேரத்தில் வேலைசெய்யும் போது வேலை செய்பவர்களை மேற்பார்வை செய்ய அதிகாரிகள் பெரும்பாலும் கிடையாது.

ஊடகத்துறையில் பல மாற்றங்கள் ஏற்பட்-டுக்கொண்டிருக்கிறது. காலத்தோடு தொழில் நுட்பத்துறை எத்தனையோ மாற்றங்களைச் சந்தித்துக் கொண்டிருக்கிறது. இணையத் தளம், தகவல் பரிமாற்றத்துக்கும், வணிகத் தின் வளர்ச்சிக்கும் பேருதவியாக இருக்கி றது. காலத்தில், ஐந்து தசாப்தங்கள் பின்னோக்கி பயணம் செய்தால் இந்த மாற் றம் ஏற்பட்டுள்ளது என்பது புரியும். இணை-யத்தள சஞ்சிகைகள் விரைவாக வளாந்து வருகிறது. வணிகத்துக்கு “வெப்” பக்கம் முக்கியமாக திகழ்கிறது. அதோடு மின்னஞ்-சல் விரைவாக தகவல்களை பரிமாறுகிறது. தகவற் பரிமாற்றுக் கலாச்சாரத்தில் மேலும் மாற்றங்கள் ஊற்பட்டுள்ளது. காலத்தின் கோலங்களில் இதுவுமொன்று. ஒரு சம்ப-வம் உலகத்தின் எந்த முலையில் நடந்தா-லும் சில நிமிடங்களில் அதைப்பற்றி அறிய முடிகிறது. இதற்கு உதாரணம் 2004ம் ஆண்டு டிசம்பரில் நடந்த சுனாமியாகும்.

தேசம், தூரம், மொழி, கலாச்சாரம் போன்ற எல்லைகளைக் கடந்து காலத்தோடு விரிவடைகிறது செய்தி பரிமாற்றம்.

விவசாயத்தில் விதைகளை விதைப்பதற் கும், பயிர்களை நடுவதற்கும் பூக்கள் மலர்வதற்கும் ஒரு குறிப்பிட்ட காலமுண்டு. கார்த்திகை மாதத்தில் மலரும் மலருக்கு கார்த்திகைப் பூ என்பர். சில மலர்கள் குறிப்பிட்ட மாதங்களில்தான் மலரும். வெப்பநிலையையும் பருவ நிலையையும் பொறுத்தே மலர்கள் மலர்கின்றனஸ கனி-கள் காய்க்கின்றன. வசந்த காலத்தில் மரங்கள் பூத்து குலுங்கும். ''எங்களுக்கும் காலம் வரும் காலம் வந்தால் வாழ்வு வரும் வாழ்வு வந்தால் அனைவரையும் வாழவைப்போமே'' என்ற சினிமாப்பாடலில் தான் காலம் பற்றிய எத்தனை அர்த்தங் கள். ஏழையாக இருப்பவன் காலம் வரும் போது அதிர்ஷ்டத்தினால் லொட்டரி கிடைத்து பணக்காரனாகிறான். தான் வாழந்த காலத்-தை நினைத்து ஏழைகளுக்கு உதவுகிறான். காலமும் அவனுக்கு பாடம் கற்பித்து விட்டது. அனுபவம் அவனைப் புது மனித-னாக்கிவிட்டது. தொடர்ந்து காலம் பூராவும் கஷ்டப்படுபவன் வாழ்க்கையில் விரக்தி-யடைகிறான். அது அவனது தலைவிதி எனக் காலத்தோடு இணைத்துப் பேசுகிறார்-கள். இதில் காலத்தைக் குறை சொல்லிப் பயனில்லை. முயற்சி எடுக்காமல், நம்பிக்-கையோடு செயல்படாது காலத்தை நொந்து கொள்வதில் பயனில்லை. ‘ஏழரைச் சனி நடக்கிறது’ அல்லது ‘வியாள சுகமில்லை’ என்று ஜாதகத்தைப் பார்த்துவிட்டு குறை

57ம் பக்கம் பார்க்க...

56ம் பக்கத் தொடர்ச்சி...

சொல்லி, அக்காலத்தைப் பற்றியே மனம் வருந்துவது வியாதிகளை தோற்றுவிக்கும். வளாச்சிக்கு தடையை உருவாக்கிறது.

வருடமும், நாட்களும் காலத்தின் அளவு கோல்களில் முக்கிய இடம் வகிக்கின்றன. இதைவிட மணித்தியாலம், நிமிடம், வினாடி என்று சிறிய அளவுகோல்களும் உண்டு. கண் சிமிட்டும் நேரத்தைக் கூட அளவுகோல் கொண்டு கணித்துள்ளனர். மைக்கிரோ செக்கண்ட் ஒரு செக்கண்டின் 1000000 பங்காகும். இதைவிட நேரத்தின் சிறிய அளவு கோல்களுண்டு. இப்படி மிக நுண்ணிய அளவு கோல்களைக் கொண்டும் விஞ்ஞானத்தில் நேரம் கணிக்கப்படுகிறது. ஒரு வருடம் என்பது பூமி சூரியனை ஒரு தடவை சுற்றி வரும் காலமாகும். இது 365 நாட்களும் 6 மணித்தியாலங்களுமாகும். பூமி தன்னைத்தானே சுற்றி வரும் காலத்தை ஒரு நாள் என்பர். இது கிரகத்துக்கு கிரகம் வேறுபடும். கிரகம் சூரியனில் இருந்து அமைந்துள்ள தூரத்தைப் பொறுத்தது அதனது சுழற்சிக்காலம். வியாழக் கிரகத்தின் சுழற்சிக் காலம் கிட்டத்தட்ட 12 வருடங்களாகும். புதன் கிரகம் சூரியனுக்கு அண்மையில் இருப்பதால் அதன் சுழற்சிக் காலம் 8.8 வருடங்களாகும் சனி கிரகத்தின் சுழற்சிக் காலம் 29.4 வருடங்களாகும். செவ்வாய்க் கிரகம் தன்னைத் தானே சுற்று வதற்கு 1.03 நாட்கள் எடுக்கிறது. யூரேனஸ் கிரகம் 84.7 வருடங்கள் எடுக்கும் ஒரு தடவை சூரியனைச் சுற்றி வருவதற்கு. நேப்டியூன் சூரியனை சுற்றி வர 164.8 வருடங்கள் எடுக்கும். 1846ல் இந்த கிரகம் கண்டு பிடிக்கப்பட்டது. ஆகவே கண்டு பிடித்த ஆண்டிலிருந்து இது வரை இக் கிரகம் தனது ஒரு சுழற்சியை 2011ம் ஆண்டு முடிக்கும். இக்கிரகம் சூரியனிலிருந்து வெகு தூரத்தில் உள்ளது. இந்த காலங்களை வைத்தே ஜாதகத்தில் உள்ள கிரகங்களின் தசாபுத்திகளை கணிப்பார்கள்.

உலகம் 24 நேர மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மண்டலங்களும் 15 பாகைக்குள் அடங்கியுள்ளது. ஆகவே உலகம் 24 x 15 = 360 பாகைக்குள் அடங்கும். இந்த பாகை பிரிப்பு இங்கிலாந்தில் உள்ள கிரின்விச் நகரத்தினூடாக செல்லும் பூச்சியம் பாகையிலிருந்து ஆரம்பிக்கிறது, ஆகவே அந்த மண்டலத்துக்குள் அடங்கும் நேரத்தை கிரீன்விச் சராசரி நேரம் (GMT – Greenwich mean Time) என்பர். அலஸ்கா மாநிலத்தில் அமெரிக்காவின் எட்டு நேர மண்டலங்களில் நான்கை ஒரு காலத்தில் உள்ளடக்கி இருந்தது. 1983ம் ஆண்டு அமெரிக்க காங்கிரசில் கொண்டு வரப்பட்ட சட்டத்தின்படி ஒரு நேர மண்டலமாக குறைக்கப்பட்டது. தினக் கோடு எனப்படும் Date line, கிரீன்விச் கோட்டிலிருந்து கிழக்கை மேற்கை நோக்கி 180 பாகையில் அமைந்துள்ளது. இதனைக் கடக்கும் போது நாள் மாறுகிறது. கிரீன் விச்சிலிருந்து மேற்கு நோக்கி 12 மணித்தியாலங்கள் பயணம் செய்தால் இக்கோட்டினை கடக்கலாம். கனடா 8 நேரமண்டலங்களையும், அமெரிக்கா 10 நேர மண்டலங்களையும் உள்ளடக்கியுள்ளது. வட துருவமும் தென் துருவமும் எந்த நேரமண்டலத்தில் உள்ளடக்கப்பட்டுள்ளன? இந்த கேள்விக்கு பதில் அண்மையில் உள்ள எந்த நாட்டிலிருந்து இத்துருவத்துக்குப் போகிறார்களோ அந்த நாட்டின் நேரமண்டலததையே கணக்கில் எடுப்பார்கள்

நாம் எமது அன்றாட கடமைகளைச் செய்வதற்கு நாட்காட்டியின் உதவியை நாடுகிறோம். சந்திரனை அடிப்படையாக வைத்து நேரத்தை 12000 ஆண்டுகளுக்கு முன்னர் கணித்தனர். கிட்டத்தட்ட கி.மு 2000ஆண்டுகளுக்கு முன்னர் சுமேரியன் நாகரீகத்தில் நேரத்தை பகுப்பதற்கு எண் 60 பாவித்தனர். இதனால் ஒரு மணித்தியாலத்தில் 60 நிமிடங்கள், ஒரு நிமிடத்தில் 60 வினாடிகள் தோன்றியது. வருடம் கூட 60 X 60 + சில நாட்கள் என கணிக்கப்பட்டது. கி.மு 45ல் ஜூலியஸ்சீசர் சூரியனை மையமாக வைத்து நாட்காட்டியை உருவாக்கினார். 1582ல் கிரகெரி என்ற பாப்பாண்டவர் கிரகேரியன் நாற்காட்டியை உருவாக்கினார். இதில் கிறிஸ்து பிறந்த தினத்தை ஆரம்ப வருடமாக வைத்து இந்த நாட்காட்டி உருவாக்கப்பட்டு இப்போது உலகில் பொதுவான நாட்காட்டியாக இயங்குகிறது. தமிழர்களிடையே புது வருடம் எப்போது ஆரம்பிக்கிறது என்பது பிரச்சனைக்குரிய விடயமாக அமைந்துள்ளது. ஜனவரி 14ம் திகதி வரும் பொங்கல் தினமா புத்தாண்டு அல்லது ஏப்ரல் 14ம் திகதி பிறக்கும் தமிழ் புத்தாண்டா புது வருடம் ஆரம்பம் என்பது தான் பிரச்சனைக் குரிய வாதம். 60 தமிழ் ஆண்டுகள் பிரபவ ஆண்டில் இருந்து அட்சய ஆண்டுவரை, வடநாட்டு சாலிவாகனன் என்ற மன்னனால் பெயரிடப்பட்டதாம். இந்த பெயர்கள் தமிழ் பெயர்கள் அல்லவே. ஆகவே எவ்வாறு தமிழ்ப் புத்தாண்டாகலாம் என்பது ஒரு சாரார் வாதம். இந்த 60ஆண்டுகள் சுழற்சியாக வருவதால் பல ஆண்டுகளுக்கு முன்னர் நடந்ததை குறிப்பு வைப்பது கடினம். மறைமலை அடிகள் போன்ற தமிழ் அறிஞர்கள் ஒன்று கூடி கலந்தாலோசித்து தைமாதத்தின் முதலாம் திகதியே தமிழ் இனத்துக்கு புது வருடம் பிறக்கும் தினமென முடிவுக்கு வந்தனர். அதைத் தொடர்ந்து மாசி, பங்குனி முதல் மார்கழி வரை உள்ள 12 மாதங்கள் தமிழ் பெயர்களைக் கொண்டவை. அதோடு திருவள்ளுவர் கி.மு 31ம் ஆண்டு பிறந்தார். ஆகவே ஆங்கில ஆண்டுகளுக்கு 31 வருடங்களைக் கூட்டி திருவள்ளுவர் ஆண்டு என்று கணக்கெடுத்தனர். பொங்கல் தினத்தை திருவள்ளுவர் தினமாகக் கொண்டாட வேண்டும் என 1969ம் ஆண்டு தமிழ்நாட்டு முதல்வர் மு கருணாநிதி வேண்டிக்கொண்டார். சீனர்கள் தங்களது புத்தாண்டை பெப்ரவரி 7ம் திகதி ஆரம்பிக்கிறார்கள். ஒவ்வொரு வருடமும் ஒரு மிருகத்தின் பெயரை வைப்பார்கள். இவ்வருடம் எலி வருடமாகும்.

தமிழில் 7 வார நாட்கள் கிரகங்களின் பெயர்களைக் கொண்டுள்ளது. சூரியன், சந்திரன் உட்பட. மாதங்களின் பெயர்கள் சமஸ்கிருத பெயர்களில் இருந்து மருவியது. இந்து மத நாட்காட்டிகள் பல. அவை வேத காலத்தில் இருந்த வேதாங்க ஜோதிடத்திலிருந்து தோன்றியவை. பின்னர் கி.பி 499ல் ஆரியபட்டா என்ற வானசாஸ்திர வல்லுனராலும், அதன்பின்னர் வரஹமிகிர வாலும் ஏற்படுத்தப்பட்டது. இக்காலத்தில் ஈழத் தமிழர்களிடையே வாக்கியப் பஞ்சாங்கம், திருக்கணிதப் பஞ்சாங்கம் என இரு வேறுபட்ட அடிப்படையில் நாட்காட்டிகள் பாவனையில் இருக்கிறது. இந்து மதத்தில் நான்கு யுகங்கள் உண்டு. அவை முறையே சத்திய யுகம், திரேதயுகம், துவாப்பரயுகம், கலியுகமாகும். இதனை முறையே ஆங்கிலத்தில் தங்க, வெள்ளி, வெண்கல வயது என்னபர். தர்மம் படிப்படியாக இக் காலங்களில் குறைந்து வருகிறது. கலி யுகம் 432,000 வருடங்களை கொண்டது. திவாப்ர, திரேதயுகம், சத்திய யுகம் முறையே கலியுகத்தின் 2, 3. 4 மடங்காகும். இந்த 4 யுகங்களும் சேர்ந்த காலம் 4,320,000 வருடங்களாகும். இதனை சதுர் யுகமென்பர். சதுர் என்ற சமஸ்கிருத சொல் நான்கை குறிக்கும். இதில் இருந்து பிறந்த வார்த்தையே சதுரமாகும்.

வேகத்துக்கும், தூரத்துக்கும் நேரத்துக்கும் இணைப்புண்டு. இதில் இருந்து கணிக்கப் படுவதே வேகமாகும். வார்ப்புத் தத்துவத்தின்படி வேகம் அதிகரிக்கும்போது வேகத்தில் மாற்றம் ஏற்படுகிறது. வேகம் ஒளியின் வேகத்திற்கு அருகே அளவைப் பெறும் போது, வேகத்தின் அளவில் பெரிதளவு மாற்றம் ஏற்படுகிறது. ஒருவர் பூமியை விட்டு வான் வெளிக் கப்பலில் ஒளியின் வேகத்துக்கருகே பயணம் செய்தால் அவரது கைக்கடிகாரத்தில் அதிக வருடங்கள் பயணம் செய்ததாக காட்டும். ஒளி ஆண்டு என்றால், ஒளிக்கும் தூரத்துக்கும் நேரத்துக்கும் தொடர்பு என்ன என்பதை அடுத்த மாதம் வரும் கட்டுரையில் அலசி ஆராய் வோம்.

காலத்தை விரையமாக்காதீர், காலத்தை திட்டாதீர், காலத்துக்கு மதிப்பளியுங்கள். டிக் டிக்கென்று ஓடிக் கொண்டிருக்கும் காலம் கல்லறை உங்களை அழைக்கிறது என்பதை நினைவூட்டுகிறது. அக்கால எல்லைக்குள் பூமியில் நல்லதை செய்து விட்டுச் செல்லுங்கள்.

■ ■ ■

# குடிநீரில் கண்டறியப்பட்ட மருந்துப் பொருட்கள்!



பாஸ்கரன் சின்னத்துரை
வீடு விற்பனைப் பிரதிநிதி -

அநேகமான கனடியர்கள் தமது வீட்டுக் கழிவுப் பொருட்களான மின்கலங்கள் (Batteries) மற்றும் மருந்துப் பொருட்களை அகற்றும் முறை குறித்த அறியாமையால், தெரிந்தோ, தெரியாமலோ தாம் வாழும் சூழலை மாசடையச் செய்கின்றனர்.

தாம் பயன்படுத்திய மின்கலங்களை, அவற்றை அகற்றுவதற்கேயுரிய சிறப்பான மையங்களில் கொண்டு சென்று பாதுகாப்பாக அகற்றாது சாதாரணமான கழிவுகளுடன் (Garbage) அகற்றுகின்றனர். தமது வீடுகளில் எஞ்சும் அல்லது காலாவதியாகிப் போன மருந்துப் பொருட்களை மலகூடக் குழியினுள் இட்டு அகற்றுகின்றனர். கனடாவில் ஒவ்வொரு வருடமும் பல நூறு மில்லியன் கணக்கான மின்கலங்கள் (Batteries) விற்கப்படுகின்றன. கழிவுப் பொருட்களுடன் இவற்றை அகற்றும்போது மேர்க்குரி, கட்மியம், ஈயம் போன்ற நச்சுப்பதார்த்தங்கள் சூழலினுள் வெளிவிடப் படக் காரணமாகின்றது.

தென்ஒன்ராறியோவின் 15 நகரங்களின் குடிநீரில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளின்படி வலிநிவாரணிகளும் ஏனைய மருந்துப் பொருட்களும் இந்நீரில் கலந்திருப்பதாக அறிக்கைகள் தெரிவிக்கின்றன. எவ்வெவ் இடங்களில் இந்த ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன என்பது திட்டவட்டமாகக் கூறப்படாதபோதும், Environment Canadaஇன் தேசிய நீரியல் ஆய்வு நிறுவனத்திற்கு அண்மித்த பகுதிகளில் இந்த ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டதாகக் கூறப்படுகின்றது.

நீரைச் சுத்திகரிக்கும் இயந்திரத்தினூடாகச் (Water Treatment Plants) செல்லும்போது அநேகமான இம் மருந்துக் கலவைகள் மிகக் குறைந்த அளவில் அல்லது கண்டறிய முடியாத மட்டத்தில் குறைக்கப்படுகின்ற போதிலும், ஆய்வாளர்களின்படி, எந்த ஒரு இரசாயனமும் சிறியளவிலேனும் குடிநீரில் காணப்படுதலானது வேறு அநேக இரசாயனங்களும் காணப்படக் கூடியதற்கான அறிகுறியாகும்.

வாட்டலூ பல்கலைக்கழகத்தின் ஆய்வாளரான Mark Servosஇன் இந்த ஆய்வானது கனடாவின் நீர்த்தர ஆய்வு சஞ்சிகையின் (Water Quality Research Journal of Canada) தற்போதைய வெளியீட்டில் காணப்படுகின்றது.

Ibuprofen போன்ற வலிநிவாரணிகள், கொலஸ்ரோலைக் கட்டுப்படுத்தும் மருந்துகள், வீட்டில் பக்டீரியாவைக் கட்டுப்படுத்தப் பயன்படும் Triclosan போன்றன உள்ளடங்கிய கலவைகள் இதில் காணப்படுகின்றது.

குறைந்தது 41 மில்லியன் அமெரிக்க மக்களின் குடிநீரில் மருந்துப் பொருட்கள் கண்டறியப்பட்டதைத் தொடர்ந்து கனடாவில் இவ் ஆய்வு அறிக்கையும் வெளியிடப்படுகின்றது.

நதிகளில் கழிவு நீர் வெளியேறிக் கலக்கும் இடங்களில் எடுக்கப்பட்ட நீர் மாதிரிகளே மிக அதிகமாக மாசடைந்தவையாக ஆய்வாளர்களினால் கண்டறியப்பட்ட அதே நேரம், பாரிய ஏரிகளில் இருந்து எடுக்கப்பட்ட நீர் மாதிரிகளிலும், கண்டறியக் கூடிய அளவில் மருந்துப் பொருட்கள் பல காணப்பட்டதாகக் கூறப்படுகின்றது. இந்த இரசாயனங்கள் சூழலில் பரந்தளவில் காணப்படுவதாக ஆய்வுகள் கூறும் அதே வேளை கிணறுகளில் இருந்து எடுக்கப்பட்ட நீர் மாதிரிகளில் மருந்துப் பொருட்களின் கலவைகள் எதையும் காணமுடியவில்லை.

சுத்திகரிக்கப்பட்ட நீரில் (Treated water) அமிலத்தன்மையான மருந்துப் பொருட்கள் எதையும் காணமுடியாதபோதும் Naxproxen, Triclosan போன்ற வலி நிவாரணிகள் ஓரளவு காணப்படுகின்றன. எனினும் சுத்திகரிக்கப்படாத நீருடன் ஒப்பிடும்போது இவற்றின் செறிவு குறைவாகும். நீர் சுத்திகரிக்கும் இயந்திரத்தினூடாக செல்லும்போது இந்த மருந்துக் கலவைகளின் அளவு அளந்தறியப்படாத மட்டத்திற்கு மிக அதிகமாகக் குறைக்கப்படுவதே இதற்குக் காரணமாகும். CBC செய்தியின்படி, நீரில் கலந்திருக்கும் இந்த மருந்துப் பொருட்கள் தற்போதைக்கு குறைந்தளவு அபாயத்தையே கொண்டுள்ளன எனக் கூறப்படுகின்றது.

பயன்படுத்தப்படாத மருந்து மாத்திரைகள் மலசலகூடக் குழியினுள் போடப்படுவதுடன், மக்கள் உட்கொள்ளும் மாத்திரைகளுள் பெரும்பாலானவை கழிவாக மலகூடக் குழியினுள் அகற்றப்பட்டுப் பின் கழிவுநீர் சுத்திகரிக்கும் இயந்திரத் தொகுதியை அடைகின்றன. அத்துடன் கால்நடைகளின் உரமும் நீரினுள் சென்றடைந்து நோயெதிர்ப்பு மருந்துகளின் (Antibiotic) அளவை அதிகரிக்கின்றன.

பக்டீரியாவை அகற்றுவதில் கழிவுநீர் சுத்திகரிக்கும் இயந்திரத் தொகுதிகள் சிறந்தவையாக இருந்தபோதும் மருந்துக் கலவைகளின் இரசாயனங்களை அகற்றுவதற்காக இவை வடிவமைக்கப்படவில்லை. இம் மருந்துகளை அகற்றுவதற்கு தற்போது பல முறைகள் கண்டறியப்பட்டுள்ளதுடன் Peroxide, ஓசோன், காபனின் வெவ்வேறு வடிவங்களுடன் புற ஊதா வெளிச்சம் (UV light) என்பன இந்த மருந்துகளின் அளவைக் குறைக்க முடியும். லண்டன் மற்றும் மிசிசாகாவில் உள்ள இரு ஒன்ராறியோ கம்பனிகள் இந்த மருந்துகளை அகற்றுவதற்கான தொழில் நுட்பத்தை முன்னேற்றுவதில் முன்னணியில் உள்ளன. எனினும் இவை தொடர்பாக மேலும் ஆய்வுகள் மேற்கொள்ள வேண்டியுள்ளது.

■ ■ ■

**தாய் வீடு பத்திரிகை பற்றிய விமர்சனங்களை எதிர்பார்க்கின்றோம். விமர்சனங்கள் எம்மை ஓர் ஆரோக்கியமான பாதையில் இட்டுச்செல்லும்.**

*E-mail:thaiveedu@gmail.com*
*Fax: 416-849-0594 Tel: 416-646-3422*

# நலம் பல நல்கும் நவ பிருந்தாவனம்



திரு மகேசன்

சென்றமாதக் கட்டுரையின் முதலில் 'நலம் பல நல்கும் நவபிருந்தாவனம்' என்று குறிப்பிட்டு முடித்திருந்ததை குறிப்பிட்டு பல வாசகர்கள் கேள்வி மேல் கேள்வி கேட்டு துளைத்தெடுத்துவிட்டார்கள். சென்ற மாதக் கட்டுரையை முடித்து டில்லியிலிருந்து வீடு பத்திரிகை அலுவலகத்திற்கு email செய்து விட்டு நவபிருந்தாவனம் நோக்கியே பயண-மானேன். எனவேதான் அக்கட்டுரையில் நவபிருந்தாவனத்தை பற்றி குறிப்பிடவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

நவபிருந்தாவனம் நோக்கிய பயணத்தின் போதே மனதில் இன்றைக்கு எங்கெல்லாம் அற்புதங்கள் நிகழ்ந்துகொண்டிருக்கிறதோ, கடவுளின் கருணை கண்ணில் தெரிகின்றதோ அவற்றையெல்லாம் இம்மக்களுக்கு இனிவரும் காலங்களில் கட்டுரை வடிவில் வீடு பத்திரிகை மூலம் வழங்க வேண்டும் என்ற எண்ணமே மேலோங்கியிருந்தது. இந்த மனநிலையை எம்மால் AMR ஐயா என்று செல்லமாக அழைக்கப்படும் குமுதம் A.M. RAJAGOBALAN அவர்களாலேயே தோற்றுவிக்கப்பட்டதால் அவரின் மனப்பூர்வமான ஆசியுடனும் அங்கீகாரத்துடனும் இத்தொடரை வரைய எண்ணியுள்ளேன். இந்தத் தொடரில் கனடாவிலிருந்து நவபிருந்தாவனம் சென்று திரும்பியவர்களுக்கு ஏற்பட்ட ஆச்சரியமான அனுபவங்கள் சிலவற்றையும் அவர்களின் அனுமதியுடன் பெயர் குறிப்பிடாது வெளியிட எண்ணியுள்ளோம்.

இன்றைக்கு எம்மக்கள் மத்தியிலே பலப்பல பிரச்சினைகள், நோய்கள், கடன் தொல்லைகள், திருமணத் தடைகள், குழந்தைப் பேரின்மை என்று சொல்லிக்கொண்டே போகலாம். ஆனால் இவை எல்லாவற்றிற்கும் ஆன்மீக வழிகளில் பரிகாரங்கள் என்று சொல்லப்படும் ஒருவகைத் தீர்வு இருப்பதை பலரும் அறிந்திருக்க இடமில்லை. பரிகாரங்கள் என்றவுடன் தென்னிந்தியாவிலிருந்து மூட்டை முடிச்சுகளுடன் இங்கே வந்து சோதிடம் சொல்வதற்காக 'சுத்துமாத்து' 'பம்மாத்து' செய்துகொண்டிருக்கும் சோதிட புலூடாக்களின் பரிகாரம் எந்தவித செலவுமின்றி குறிப்பிட்ட ஆலயங்களுக்குச் சென்று வழிபடுவதன் மூலம் குறைகள் நீங்கப் பெற்று வளமாக வாழலாம்.

பலதடவைகள் குழுக்களாக பலரை இந்தியத் திருத்தல யாத்திரைகளுக்கு அழைத்துச் சென்றதன் பயனாக இவ்வரிய பொக்கிசத்தை அறியும் வாய்ப்பு கிடைத்தது. எத்தனையோ ஆயிரக்கணக்கானோர் பலனடைந்திருக்கிறார்கள்.

இதன் காரணத்தால் இனிவரும் காலங்களில் ஒவ்வொரு பிரச்சினைகளைத் தீர்க்கும் பரிகாரத் தலங்களையும் அவற்றின் இருப்பிடங்களையும் அதிசயங்களையும் உங்கள் முன் வைக்க இருக்கின்றேன்.

முதன் முதலில் இன்றைக்கும் பலருக்கு புரியாத புதிராக விளங்கிக்கொண்டிருக்கும் நவபிருந்தாவனம் புண்ணிய தலத்திலிருந்து ஆரம்பிப்போம்.

பலரும் நேரில் சொன்ன கதைகளைக் கேட்டு அங்குபோய் தரிசனம்செய்ய வேண்டுமென்ற ஆவலில் காத்திருந்தேன். மார்ச் மாதம் நவபிருந்தாவனம் சென்று அந்த ஒன்பது மனைகளையும் அவர்கள் பூஜித்து வரும் அனுமனையும் தரிசனம் செய்து விட்டு வந்தேன்.

இதில் மிகப்பெரிய உண்மை என்னவென்றால் நீங்கள் உண்மையிலேயே அதிட்டசாலியாக இருக்க வேண்டும். காரணம் எனக்கு நவபிருந்தாவனத்தைப் பற்றி சொல்லி உற்சாகம் ஊட்டி அங்கே செல்லவைத்த என் நண்பர் கடந்த ஐந்து வருடங்களாக நுங்கபத்மா நதிவரை சென்று நதியைக் கடந்து நவபிருந்தாவனம் செல்ல முடியாமல் இன்னமும் முயன்றுகொண்டிருக்கிறார். பலர் பரிசலில் ஏறிய பின் நதிவழியே இழுத்துச் செல்லப்பட்டு நவபிருந்தாவனம் காணாமல் கூட திரும்பியிருக்கிறார்கள்.

பவித்திரமான கர்நாடக மாநிலத்தில் நுங்கபத்திரா நதியின் மத்தியிலுள்ள சிறு தீவு நவபிருந்தாவனம். பெல்லாரி மாவட்டத்தில் ஹாஸ்பெட் (HOSPET) என்ற ஊரிலிருந்து ஹம்பி(HUMPI) வழியாகச் சென்றால் 12 கிலோ மீற்றர் தூரத்தில் உள்ளது ஆனேகுத்தி. கர்நாடகத்திலுள்ள கங்கா நதியென்றும் ஊரிலிருந்து 20 கிலோமீற்றர் தூரத்திலுள்ளது. ஆனேகுந்தியிருந்து பரிசல் மூலம் நவபிருந்தாவனம் செல்லலாம். மழை காலத்தில் நுங்கபத்திரா நிதியின் நீர்மட்டம் உயர்ந்துவிடுவதால் பரிசலில் சென்று நவபிருந்தாவனத்தை தரிசிக்க முடியாது. எனவே செல்வதற்கு முன்பாக தொடர்பு கொண்டு நிலைமையை அறிந்த பின் செல்வதே நல்லது.

நவபிருந்தாவனம் தமிழக மக்களின் இதயம் கவர்ந்த புண்ணிய பூமி. கரையற்ற கடலெனப் பொங்கிவிடும் கருணையுடன், கண்களைத் துடைத்து தவமது காத்தருளும் ஒன்பது மன்புருசர்கள் ஜீவபிருந்தா வனங்களில் எழுந்தருளிடமிருந்து அருள்பாலிக்கும் புனித ஷேத்திரம்.

ஸ்ரீராமபிரான், ஸ்ரீஅனுமானையும் ஸ்ரீசுக்கிரீவனையும் முதன் முதலில் சந்தித்த கிஷ்கிந்தையில் தான் ஆன்மீகம் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. நவபிருந்தாவனம் பரம பவித்திர பிரான் நுங்கபத்திரா நதியின் மத்தியில் நாட்புறமும் இயற்கை அழகுடன் மிளிர்கிறது அழகான இத்தெய்வீகத் தீவு.

இப்புனிதமான நுங்கபத்திரா நதியில் நீங்கள் அதிஷ்டசாலிகளாக இருந்தால் அல்லது பூர்வ புண்ணிய பலனால் இன்னும் அதிகளவு நேரத்தில் மகா சமாதியடைந்த சுவாமி ராகவேந்திரா போன்ற மகரிசிகள் பலர் ஸ்நானம் செல்வதை மங்கள ஒளியில் காணும் பாக்கியம் கிடைக்கலாம். நுங்கபத்திரா நதியில் இன்னமும் அதிசயங்கள் நிகழ்ந்துகொண்டுதான் இருக்கின்றன. மக்களுக்கு தர்மத்தையும், நேர்மையையும், ஒழுக்கத்தையும், பக்தியையும் பரஸ்பர நட்பையும் போதித்து நல்வழியில் நடத்திச் செல்வதற்காக அவ்வப்போது பல கால கட்டங்களில் பல மகான்கள் அவதரித்து வருகின்றனர்.

தங்கள் அவதார காரியம் முடிந்த பிறகு இத்தகைய மகாபுருஷர்கள் மீண்டும் இறைவனிடமே திரும்பிச் சென்றுவிட வேண்டும் என்பதே நியதி. இத்தகைய மகான்களும் மகாபுருஷர்களும் கருணையே உருவானவர்கள். இவர்கள் அவதார காலங்களில் மக்களில் ஏராளமானோர் தங்களது அறியாமையால் பல தவறுகளை செய்து அதன் விளைவாகத் துன்படுவோரைப் பார்த்தபின்பு இவர்களை விட்டுவிட்டு நாம் இறைவனிடம் சென்றுவிடுவதா என்று நம்மீது இரக்கம் கொண்டு நம் துன்பங்களை போக்கியருள வேண்டுமென்று திருவுள்ளம் கொண்டு பூவுலகிலேயே தங்கிவிடுகின்றனர்.

## - உல்லாசப் பயணக் கட்டுரை -

எத்தகைய மகான்களாக இருப்பினும் அவர்களது ஆயுட்காலத்திற்கு மேல் அவர்கள் தங்கள் சரீரத்தில் தங்கியிருத்தல் முடியாது. ஆதலால் ஆயுட்காலம் முடிந்த பின்பு அவர்களது திவ்ய சரீரம் பிருந்தாவனம் (சமாதி) ஆக்கப்பட்ட புனித இடத்திலேயே தீட்சும் சரீரங்களில் தங்கிவிடுகின்றனர். அத்தகைய சக்தி பெற்ற சமாதிகளைத்தான் நாம் பிருந்தா வனங்கள் என அழைக்கின்றோம்.

இத்தகைய பிருந்தாவனங்கள் மிகக் கடு-





மையான பாவங்களையும் அத்தகைய பாவங்களில் ஏற்படும் கிரக தோசங்கள், கொடிய நோய்கள், கடன் சுமைகள், மனநலக் கோளாறுகள், குடும்பத்தில் நிம்மதி இன்மை போன்ற கொடிய துன்பங்களை போக்கும் சக்தி பெற்றவை ஆகும்.

இந்தியாவில் பல பகுதிகளில் இத்தகைய பிருந்தாவனங்கள் இன்னும் விளங்கிவருவதுடன் மக்களின் துயர் தீர்க்கும் அருமருந்தாக இருப்பதையும் அனுபவத்தில் கண்டறிகின்றோம். மந்திராலயத்தில் பிரகாசிக்கும் மகான் இராகவேந்திர சுவாமிகளின் ஜீவபிருந்தாவனம் இதற்கொரு சாட்சியாகும்.

இவ்விதம் ஒரே இடத்தில் ஈடிணையற்ற சக்திகள் வாய்ந்த ஒன்பது ஜீவசாமதிகள் இருப்பது இன்று ஒருசிலருக்கே தெரியும் அத்தகைய பவித்திரமான புண்ணிய தலம்தான் நுங்கபத்திரா நதிக்கரையில் உள்ள நவபிருந்தாவனம். இந்நவபிருந்தாவனம் மகத்தான சக்திகளையும் மந்திர சக்திகளையும் பெற்ற ஒன்பது மகான்களின் ஜீவசமாதிகள் ஒரே இடத்தில் அமையப்பெற்றது ஆச்சரியமே.

தீராது என உறுதியாக நினைத்த துன்பங்கள் நீட்சி நன்மைகள் பெற்ற குடும்பங்கள் ஏராளம் ஏராளம்.

அவதார புருசர் ஸ்ரீவியாசராஜ தீர்த்தரின் பிருந்தாவனத்திற்கு எதிரில் அமர்ந்திருக்கிறார் பால்வடியும் குழந்தையின் திருமுகத்துடன் ஸ்ரீ ஆஞ்சநேயர். பார்க்கப் பார்க்கப் திகட்டாத பேராந்த தரிசனம் இது. அழகான மலைப்பிரதேசத்தில் ஒளிமயமான காட்சிகளாகக் கண்டேன்.

அந்த நேரத்தில் அந்த ஒன்பது மகான்களின் பிருந்தாவனத்தில் நின்று நான்கு திசைகளையும் நோக்கி கைகூப்பி சுற்றி தியானம் செய்தபோது என் மனதில் ஏற்பட்ட பக்தி பரவசத்திற்கு அளவேயில்லை.

தமிழ் மக்களுக்கு ஆளேகுந்தி தன்னிடம் வைத்து பாதுகாக்கும் இந்த ஆன்மீக பொக்கிசம் விவரிக்க இயலாதது.

கோடிப் பிறவிகள் எடுத்தாலும் எளிதில் கிடைக்காத பரம பவித்திரமான மனப் புண்ணிய திருத்தலங்களில் நவபிருந்தாவனமும் ஒன்று.





கங்கைக் கிளையான நுங்கபத்திரா நதியில் நீராடி நவபிருந்தாவனத்தை தரிசித்து தீபமேந்தி இந்த ஜீவ பிருந்தாவனங்களை வணங்கியதால் துயர் தீர்ந்து மனநிறைவை பெற்றவர்களின் அனுபவங்கள் மிக விரைவில் நூல் வடிவில் AMR அவர்களால் வெளிவர இருக்கிறது.

தங்கள் சரீர வாழ்வை முடித்த பிறகு தவ நிலையிலிருந்து மக்களுக்கு உறுதுணையாய் இருப்பதற்கு மகத்தான தூய்மை பெற்ற இத்தீவை இம்மகான்கள் தேர்ந்தெடுத்ததற்கு சூட்சுமமான பல காரணங்கள் உள்ளன. இவை அனைத்தும் தெய்வீகமானவை. ரகசியமானவை. ஆதலால் அவற்றை எழுதுவதற்கு எனக்கு அதிகாரமுமில்லை.

எனவே இம்மகா சக்திவாய்ந்த நவபிருந்தாவனத்தின் அதிசங்கள், ஆச்சரியங்கள் உங்களை இனி வரும் தொடர்களில் பிரமிக்கவைக்கப்போகின்றது.

■ ■ ■

# CTR தகவல் பலகை

## ROOMS / BASEMENT RENT

**WARDEN & SHEPPARD**
New Reno.
Basement – 2B/R
416 560 5739

**NEILSON & SHEPPARD**
3+2 B/R 416 724 5503

**MORNINGSIDE & SHEPPARD**
2 B/R 2 Bath.
416 283 5530

**KENNEDY & EGLINTON**
1 B/R Basement
416 209 6571

**MEDOVELE & SHEPPARD**
1 B/R
416 724 7877

**MC COWAN & ELLESMERE**
2 B/R Basement
416 917 3846

**MC COWAN / ELSON**
3 B/R Basement
416 298 9322

**MORNINGSIDE & SHEPPARD**
2 B/R Basement
416 283 5530

**MC COWAN & ELSON**
3 B/R Basement
416 298 9322
416 917 1500

**BLACK GREEK & LAWRENCE**
1 B/R Basement
647 828 1909

**MARKHAM & LAWRENCE**
1 B/R Basement
416 721 8301

**LAWRENCE & MORNINGSIDE**
3 B/R House for rent(main floor)
416 265 3513

**DANFORTH & EGLINTON**
2 B/R Basement
416 898 1469

**MARKHAM & HYGLEN**
1B/R Basement
416 754 8282, 416 821 2552

**MIDLAND & EGLINTON**
1+2 B/R Condo
416 389 0147

**PHARMACY & LAWRENCE**
3 B/R Basement
416 750 4077

**BIRCHMOUNT & ELLESMERE**
3 B/R House
416 285 1975

**DONMILLS & FINCH**
1 B/Room Basement for Rent
Call: 416 756 4365

**BRIMLEY & LAWRENCE**
2 B/Room, 11/2 W/R
416 265 3352 / 416 704 8534

## HOUSE / CONDO FOR SALE

**KENNEDY & EGLINTON**
Condo – New Reno.
3 B/R 2 Full bath.
647 209 4100

**MIDLAND & LAWRENCE**
CONDO FOR SALE
2 B/R 416 913 3830, 416 768 3830

**MARKHAM & ELLESMERE**
Bangalow house for sale
3+2 B/R
416 289 2370

**NEILSON & 401**
House for sale
416 879 9692

**DIXIE & BOUVIAD**
4 B/R HOUSE 2+4 park
905 494 0220, 416 908 5194

**KENNEDY & SPEPPARD**
3 B/R 2 W/R Condo for Sale
647 209 4100

**COLOMBO/WELLAWATTE SILVA MAWATHA**
416 412 7579

## AUTO FOR SALE

**NISSAN ALTIMA– 2000**
176 K. Look New $ 4250.00
416 451 6895, 647 345 1008

**92 TOYOTA COROLLA**
200 K $ 800
416 402 1124, 905 471 7373

**91 TOYOTA CAMRY**
275K
647 338 7316

**HONDA CIVIC AUTO**
147 K - $ 8250
416 274 5847

**TOYOTA CAMRY** 225 K
416 697 1580

**92 TOYOTA CAMRY**
416 878 4453

**95 HONDA ACC. EX**
$ 3350
416 274 5847

**95 TOYOTA COROLLA**
905 471 7373, 416 402 1124

**2007 TOYOTA JARVIS 50K**
416 451 5211

**2004 HONDA ODESY 150K**
416 820 9325

**99 TOYOTA COROLLA**
905 471 7373, 416 402 1124

## OTHERS

**6 DOOR WALK IN COOLER**
416 568 1221

**WEIGHT LOSE**
647 261 0281/ 416 577 9737

**TV REPAIR**
905 472 2534

**SEWING BLOUSES AND OTHER**
416 491 8219

**2 SEWING MACHINES**
416 286 4928

**TUITION & TRANSLATION**
416 282 0951, 416 570 6920

**PAINTING**
60' 34' Basement
Person wanted for Wiring work
416 828 5745

**HARDWOOD/LAMINATING**
416726 5364

**YOGA CLASS**
416 292 8576, 905 388 1463



**YOGA**
Birch mount & Eglin ton)
Yoga (Thiyanam) Class (Free)
Call: 416 642 4883

**THINGS FOR SALE**
Wheel chair/Walker/Dryer
416 724 6311

**SEEKING FOR BABY SITTER**
416 289 3340

**WANTED TUITION FOR**
GR.11
416 854 7307

**WANTED TUITION**
FOR(GR.12)
416 849 9289

**TRED MILL FOR SALE**
416 319 0133

**MIDDLEFIELD & FINCH**
Works available in Textiles Store
416 786 5145

**DAY CARE**
416 7548947

**FREE MARRIAGE SERVICE**
416 269 8264

**FLOORING FREE ESTIMATE**
647 298 2560

**TV REPAIR AT HOME**
905 472 2534

**SEEKING JOB**
416 757 2959

**KENNEDY & EGLINTON**
COSMETIC/GIFT ITEMS
Closing sale
416 759 0777

## OTHERS

**DAY CARE FOR KIDS SWING WORK AVAILABLE**
416 431 8655

**TUITION CLASS**
Middlefield & Finch
Tuition Class for Student
Call: 416 830 7078 / 416 609 9043

தாய்வீடு பத்திரிகை பற்றிய விமர்சனங்களை எதிர்பார்க்கின்றோம். விமர்சனங்கள் எம்மை ஓர் ஆரோக்கியமான பாதையில் இட்டுச்செல்லும்.

*E-mail:thaiveedu@gmail.com*
*Fax: 416-849-0594*
*Tel: 416-646-3422*

# "தொப்பை" வண்டி குறைய வழி ஒன்று வேண்டும்

இராஜசேகர் ஆத்தியப்பன்



**எனக்கு வயது 56. நான் சுமார் 20 வருடங்களுக்கு மேல் மது அருந்தி வருகின்றேன். இப்பொழுது எனது உடம்பும், மனதும் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது. மனைவி பிள்ளைகள் மிகவும் வருத்தப்படுகின்றார்கள். இந்தப் போதை பழக்கத்திலிருந்து விடுபட ஏதாவது ஆலோசனை தர இயலுமா?**

நீங்கள் இந்தப்பழக்கத்தை விட வேண்டும் என்று உண்மையாகவே ஆசைப்பட்டால், அதற்கு நிறைய வழிமுறைகள் உண்டு. இந்தியாவிற்கு சென்று 'மது அடிமைகள் மறுவாழ்வு மையத்தில்" 21 நாட்கள் சிகிச்சை பெற்றால் முழுமையாக விடுதலை பெற முடியும். 'ஆல்காகோ" என்ற சித்த மருத்துவக்கூட்டுக் குளிசைகளை தினமும் எடுப்பதன் மூலமும் இப்போதைப் பழக்கத்தை விட முடியும். அக்யூபஞ்சர் முறையிலும் நல்ல பலனை பெறமுடியும். நீங்கள் ஓர் வைத்தியரிடம் நேரில் ஆலோசனை பெறுவது மிகச் சிறந்தது.

**டாக்டர், எங்களுக்கு இரண்டு ஆண் குழந்தைகள் மூன்றாவதாக ஒரு பெண் குழந்தை பெற்றுக்கொள்ள ஆசைப்படுகின்றோம். இதற்கு ஆயுர்வேத மருத்துவத்தில் வழி முறை ஏதேனும் உண்டா?**

நிச்சயமாக உண்டு. கணவன் - மனைவி தமது இடது நாசியில் சுவாசத்தைப் பழகி ஒன்றாகக் கூடினால் அது நிச்சயமாகப் பெண் குழந்தையாகத்தான் இருக்கும். வைத்தியரின் ஆலோசனையைப் பெறுங்கள்.

**டாக்டர், எனக்கு திருமணம் நிச்சயத்திருக்கிறார்கள், ஆனால், பெண் என்னைவிட சற்று உயரம். இதனால் மணவாழ்க்கையில் ஏதாவது பிரச்சினை வருமா?**

ஆணைவிட பெண் உயரமாக இருந்தால் ஒரு பிரச்சினையும் இல்லை. உலகில் இப்படிப்பட்ட தம்பதியினரில் 96 சதவீதம் பேர் மிகவும் மகிழ்ச்சியாக இருப்பதாகப் புள்ளிவிபரங்கள் கூறுகின்றன. நண்பரே.... உங்களுக்கு ஒரு பழமொழி தெரியாதா? 'சாண் பிள்ளையானாலும் ஆண்பிள்ளை". உங்கள் மணவாழ்க்கை மிகவும் மகிழ்ச்சியுள்ளதாக இருக்கும். வாழ்த்துக்கள்.

**கண்பார்வையை தெளிவாக்க என்ன செய்யலாம்.**

தொடர்ந்து டி.வி.பார்ப்பது, கம்யூட்டர் முன்னால் இருப்பது போன்றவற்றைத் தவிர்த்திடுங்கள். தூரத்திலும் அருகிலும், பக்கவாட்டிலுள்ள பொருட்களை மாற்றி மற்றி பார்க்கும் பயிற்சியை செய்ய வேண்டும். 'Eye support" என்ற மூலிகை மாத்திரைகள் கனடாவில் கிடைக்கின்றன. ஒரு கப் கோட் சாறு, அரை தேக்கரண்டி கருஞ்சீரக எண்ணெய் இரண்டையும் கலந்து காலை, மாலை இருவேளை என தொடர்ந்து 60 நாட்கள் எடுத்துவர நல்ல கண்பார்வையைப் பெறலாம்.

**அதி இரத்த அழுத்தத்திற்கு நல்ல மருந்து என்ன?**

'Med marijuana" என்ற குளிசைகளை வாங்கி காலை மாலை இருவேளை எடுக்கவும். Calade என்ற மூலிகை மருந்தும் கிடைக்கின்றது. சீரகம் நல்ல மருந்து தினமும் வெறும் வயிற்றில் கொத்தமல்லி எடுப்பது சுகம் தரும்.

**இரத்தத்தை சுத்தம் செய்ய எந்த மூலிகை நல்லது?**

அருகம்புல் நமது நாட்டில் சாதாரணமாக விளையக் கூடியது. மிகப் பெரிய பலனைத் தரவல்லது.

**சளித்தொல்லை நீங்க ஏற்ற மருந்தொன்று சொல்ல முடியுமா?**

ஆடாதொடை என்ற மூலிகை சிறந்தது. சளி, இருமல், ஆஸ்துமா எல்லாமே குணமாகும். கண்டன் கத்திரி, தூதுவளை, மிளகு, மஞ்சள், துளசி எல்லாமே நல்லதுதான்.

**எந்தவகை மருத்துவம் நல்லதென்று நினைக்கிறீர்கள்?**

சந்தேகம் என்ன? மூலிகை மருத்துவம்தான். குறிப்பாக திபெத்திய மூலிகை மருத்துவம் உலகிலேயே மிகச் சிறந்தது என்று சொல்வேன். எலக்ட்ரோபதி என்று ஒரு மூலிகை மருத்துவமும் சிறந்த ஒன்று ஆனால், எந்த நோய்க்கும் மருந்து சொன்ன தமிழனின் சித்த வைத்தியம் இரகசியமாகப் பாதுகாக்கப்பட்டு வருகின்றது.

**உலகின் மிகச்சிறந்த வைத்திய நூல்களை எங்கு காணலாம்?**

ஜெர்மனியின் தலைநகர் பெர்லினில். தஞ்சை சரஸ்வதி மஹால் நூலகத்திலிருந்து கொள்ளையடித்துச் செல்லப்பட்ட நூல்கள் அனைத்தும் இங்குதான் பாதுகாப்பாக இருக்கின்றது.

**மூக்கில் எந்த வாசனையையும் உணர முடியவில்லை. உதவ முடியுமா?**

முள்முருங்கை இலையை தோசை மாவில் கலந்து தினமும் தோசையாக சாப்பிடுங்கள்.

**தொப்பை குறைய வழி ஒன்று வேண்டும்?**

நாயுருவியும், தர்ப்பைப்புல்லும் சேர்த்து தலையணைபோல் செய்து அதன் மேல் அமர்ந்து உட்கார வேண்டும். (தினந்தோறும்) அப்புறம் உங்கள் தொப்பை காணாமல் போய்விடும்.

**நீரழிவைக் கட்டுப்படுத்தாவிட்டால் தாம்பத்தியம் பாதிக்கப்படுமா?**

நிச்சயமாக. நான் முன்னமே எழுதிய கட்டுரையில் தெளிவுபடக் கூறியுள்ளேன். சலரோகம் ஒரு உணர்வுக்கொல்லி நோய் என்பதுதான் உண்மை. அதனால் பாலுணர்வு நிச்சயமாக பாதிக்கப்படும். நேரடி ஆலோசனை அவசியம்.

**புற்றுநோய் உள்ளவர்கள் மசாஜ் செய்து கொள்ளலாமா?**

கூடவே கூடாது. மசாஜ் செய்யும் பொழுது உடலில் இரத்த ஓட்டம் தூண்டப்படும். இதனால் புற்றுநோய் பரவும் அபாயம் அதிகம்.

**எனது மகள் பருவம் அடைந்த பின்பும் உடல் வளர்ச்சி சரியாக இல்லை. எனது உறவினர் சந்தன எண்ணெயைப் பூசி வரச் சொல்கிறார். உங்கள் லோசனை என்ன?**

சந்தன எண்ணெய் நல்லதுதான். ஆனால் நீங்கள் சொல்வதை வைத்துப் பார்க்கும் பொழுது லேவண்டர் மிகச் சிறந்தது. ஏனெனில் லேவண்டருக்கு சில அவயங்களைப் பெரிதாக்கும் தன்மை உண்டு. பருவம் அடைந்த பெண்களுக்கு மிகவும் ஏற்றது.

■ ■ ■

# Bollywoodக்கு வந்த புதிய வசன கர்த்தா



மாறன் செல்லையா
- நிதி திட்டமிடல் ஆலோசகர் -

இந்தியாவின் சினிமாத் துறை உலகிலேயே பெரிய ஒன்றாகும். ஒரு படத்தைத் திரைக்கு கொண்டு வர இரு வருடங்களாகும். சில நேரங்களில் ஒரு படத்தின் வரவு செலவு திட்டத்தை ஆனந்தபவானில் இருந்து கலந்துரையாடும் போது அங்கிருந்தும் Napkin இலேயே எழுதிவிடுவார்கள். நமது வசன கர்த்தாக்களில் பலர் ஆசுகவிகள், படத்தின் வசனத்தை படப்பிடிப்பின்போது set இலேயே வடித்துத் தள்ளிவிடுவார்கள்.

Bolly wood ஒரு ஆண்டுக்குள் 200 படங் களைத் தருகின்றது. இந்தப் படங்கள் ஒரு குடிசைக் கைத்தொழில் போல பாதாள உலகத்தினரின் பணத்தில் மிகவும் குறை பாடுகள் நிறைந்த நிர்வாகத்தில் பலவீனமான சந்தைப்படுத்தலுடன் ஆவலுடன் காத்திருக்கும் இந்திய மக்களுக்கு வழங்கப்படுகிறது.

தற்போது இந்திய படத்துறையை சீர்திருத்த 50 வயதான Ronie Screwvala என்பார் வளர்ந்து வரும் UT software communication என்ற நிறுவனத்தினூடாக Bolly wood கனவுத் தொழிற்சாலையை ஒரு பூகோள வர்த்தக சக்தியாக மாற்ற முயற்சித்து வருகிறார்.

2007இல் இந்த நிறுவனத்தினூடாக தயாரித்து வழங்கிய Name sake என்ற படத்தின் மூலம் Holly Wood இந்த சக்தி வாய்ந்த Walf Disney நிறுவனத்தை பங்காளராக கவர்ந்துள்ளார். இதைத் தொடர்ந்து இவரது கற்பனையுடன் கூடிய படைப்புத் திறனை, பாவித்து இந்திய சினிமாவை சர்வதேச தரத்திற்கு கொண்டு வர இருக்கிறார். பல ஆண்டுகளாக 9%இல் வளர்ந்த இந்திய பொருளாதாரத்தினால் கிடைத்த புதிய செல்வத்தை பொழுதுபோக்கிற்காக செலவழிக்க நிறையப்பேர் இருப்பதால் சினிமா போன்ற பொழுதுபோக்கு சாதனங்களுக்கு நிறைய வளர இடம் இருக்கிறது. 2005 வரையில் $1 Billion வரையில் இருந்த வசூல் 2006ல் ஆண்டுக்கு $2 Billion வசூலுக்கு வளர்ந்துள்ளது. இந்த இடத்தில் Holly woodஇல் புகழ்பெற்ற Titanic படத்தின் வசூல் 1 Billion ஆகும்.




இன்னும் ஐந்து ஆண்டுகளில் இந்திய சினிமாத்துறை 4 billion வசூலைத்தரும் என்று ஆய்வாளர்கள் தெரிவிக்கிறார்கள். நாடளாவிய ரீதியில் 250 பல்திரை அரங்குகள் (multiplex) புதிதாக குளிரூட்டப்பட்டு அமைக்கப்பட்டு ரசிகர்களுக்கு மிக வசதியாக அமைக்கப்பட்டுள்ளது. சாக்கு தட்டியினால் போட்ட கொட்டகையில் இருந்து வியர்த் தவாறு விறுவிறுக்க இருந்து படம் பார்த்த இரசிகர்களுக்கு இது ஒரு சுகானுபவம் தான்.

ஆனால் திரு Screwvala கருத்துத் தெரிவிக்கையில் சர்வதேச ரீதியாக வெற்றியையும் வசூலையும் குவிக்கும் போதுதான் இது ஒரு சாதனையாகும். அது ஒரு இலகுவான காரியமல்ல என்றார்.

UTV விரைவாக வளர்ந்து வருகிறது. 20 படங்களை இந்த ஆண்டு திரையிட தீர்மானித்திருக்கும் அதேவேளையில் ஐந்து புதிய தொலைக்காட்சி வழிகளையும் (Channel) ஆரம்பிக்க இருக்கிறார்கள். $43 Million வரவில் $13 Millionஐ இலாபமாக கடந்த ஆண்டு பெற்ற இந்த நிறுவனத்தின் வருவாய் இந்த ஆண்டு 2 மடங்காக அதிகரிக்கும் என ஆய்வாளர்கள் தெரிவித்துள்ளார்கள்.

ஆக இந்த நிறுவனத்தின் வளர்ச்சியுடன் திரு Screwvala Bolly Woodஇல் சினிமா தயாரிக்கும் விதத்தில் பாரிய மாற்றங்களை கொண்டுவர இருப்பது தெரிகிறது.

வழமையாக மூன்று மணித்தியாலங்களுக்கு நடக்கும் பெரும் கதையாக இருக்கும் சினிமாவை 90நிமிடங்களுக்கு குறுக்கி வழமை யாக இருக்கும் அளவுக்கு மேலான சண்டைகள் இரு வசனத்தில் சொல்லுவதை சொல்லுவதற்கு ஐந்து நிமிடங்களுக்கு வரக்கூடிய பல பாட்டுக்களையும் தவிர்த்து அகலமாக ஆழமாக இருக்கக்கூடிய கருக் களை வைத்து படங்களை தர இருக்கிறார் அவர்.

67ம் பக்கம் பார்க்க...







66ம் பக்கத் தொடர்ச்சி...

UTVயின் 2006இல் வெளிவந்த Rang de Basant. என்ற படத்தில் 5 இளைஞர்கள் இந்தியாவின் சுதந்திர போராட்டத்தைப் பற்றி அது பற்றிய படத்தில் நடித்து அறிவது போல கதை அமைந்திருந்தது. இந்த படம் இளைய சமுதாயத்தினரிடையே ஒரு வெற்றி யாக அமைந்திருந்தது. புதிய நடுத்தர வர்த்தக சமுதாயத்தின் புதிய இரசனைக-ளுக்கு இந்தப் படம் ஒரு சவாலாக கிடைத்-திருந்தது. இதன் மூலம் புதிய வித்தியாச-மான கருத்துக்களை வைத்து கதையை தரக்கூடிய கதாசிரியர்கள் பக்கம் Bolly Woodஇன் கவனம் திரும்பியுள்ளது. சில கதாசிரியர் 6அலலது 7வருடங்களாக சந்தர்ப்- பம் தேடி அலைந்தவர்களுக்கு இப்போது சந்தர்ப்பம் கிடைப்பதாக Bombay பத்திரி-கையாளர் Misra தெரிவ-ித்தார்.

இந்திய சினிமாவை சில ஆற்றல் வாய்ந்-தவர்கள் முழுமையாக கட்டுப்படுத்தி வரும் நிலையில் அந்தக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிந்து ஒரு புதிய கலாசாரத்தை புகுத்திய பெருமையும் திரு Screwvala வைச் சாரும் என்றார் திரு Misra.

கடந்த காலங்களுடன் ஒப்பிடும் போது மிகக் குறைந்த காலத்துள் அதாவது மூன்று மாதங்களுள் படத்தை எடுத்து முடிக்க திட்டமிட்டுள்ள திரு Screwvala படத்தை தொடங்க முன்னமே முழுமையான கதை வசனத்தை ஆயத்தமாக வைத்துக் கொள் கிறார். அத்துடன் சந்தைப்படுத்துதலில் தானே முழுமையாக ஈடுபடுகிறார்.

அண்மையில் வெளிவந்த இவருடைய படம் Jodhaa Akbar. இதில் ஐஸ்வர்யா ராயும் நடித்துள்ளார். இந்தப் படம் வெளியிட்ட முதலாவது வார இறுதியிலேயே $10 மில்லி யன் சேகரித்து படத்தின் செலவை ஈட்டித் தந்து விட்டது.

அதிகம் அலட்டிக்கொள்ள ஒரு செயல் திறமையுடன் Management Band with, agregating content, value added போன்ற வார்த்தைப் பதங்களுடன் இவர் Bolly Woodஐ வலம்வருகிறார். சினிமாத்துறை ஆய்வாளர் Ritesh Poladia என்பவர் ஒரு முழுமையான திட்டமிடப்பட்ட நிர்வாக கலாச்சாரத்தை இவர் Bolly Woodஇல் ஆரம்பித்து வைத்துள்ளார் என்றார். சினி-மாத்துறையின் பலவீனங்களையும் தவறு-களையும் ஒரு வெளியாளாக இருந்தத-னால் இவரால் உணர முடிகிறது என்று Ritesh மேலும் தெரிவித்தார்.

ஒரு cable நிறுவனத்தை ஆரம்பித்து வீடு வீடாகச் சென்று அதை விற்று வர்த்தக நுணுக்கங்களை பயின்றவர். பல வாடிக்கை யாளர்களுக்கு Remote கருவியைப் பாவிக்-கும் முறையை பயின்று கொடுத்ததை நினைவுகூர்ந்தார்.

இவரது அணுகுமுறை சினிமாத்துறைக்கு மாற்றத்தைக் கொண்டு வருகிறது. இரு ஆண்டுகளுக்கு முன் 300 பேராக இருந்த உழியர்களின் எண்ணிக்கை இப்போது 1000 ஆக உயர்ந்துள்ளது. இந்த நிறுவனத்தின் பங்கில் விலை ஏழு மடங்காக உயர்ந்துள்-ளது. சினிமா நிறுவனங்களில் முதலில் Bombay பங்குச்சந்தையில் அங்கத்துவம் பெற்ற நிறுவனங்களில் இதுவும் ஒன்றாகும்.

Holly Woodஐ பெருத்தமட்டில் அங்கும் பல படங்கள் இவரது தயாரிப்பில் இருக்கின்றது. அதில் நைற் சியாமளன் நெறியாள்கையில் The Happening என்ற படம் குறிப்பிடத்தக்-கது. இப்படி பல சந்தர்ப்பங்கள் இந்த நிறு-வனத்தில் இருப்பதை உணர்ந்த பெருமைக் குரிய Walt Disney நிறுவனம் கடந்த மாதம் $204 millionஐ முதலிட்டுள்ளது.

இது இப்படியிருக்க இந்திய வர்த்தகத்தை தூய்மைப்படுத்தும் பணியில் வெளிநாடுக-ளில் படித்தவர்கள் ஈடுபடுவது போல அரசியலையும் யாராவது தூய்மைப்படுத்தி-னால் சில நாகரீகங்களைப் பயிற்றுவித்தால் அயல் நாட்டுக்காரராகிய எங்களுக்கும் ஆதாயம் பாருங்கோ.

■ ■ ■

# வீட்டுக் கடன்...

77ம் பக்கத் தொடர்ச்சி...

டும். எனவே இப்படிப்பட்ட சிறிய தவறுகள் விண்ணப்பப்பத்திரத்தில் ஏற்பட்டால உங்கள் காப்புறுதி நிராகரிக்கப்படும். எனவே காப்பு றுதி பெறுவதற்கு முன்பு அங்கீகரிக்கப்பட்ட காப்புறுதி முகவரிடம் இருந்து காப்புறுதி பெற்றுக்கொள்வது பாதுகாப்பானது. காப்பு-றுதித் திட்டமொன்றை பெற்றுக்கொள்ளும் போது எப்படி நீங்கள் உங்களை பாது-காக்க முடியும்.

ஒவ்வொரு காப்புறுதித் திட்டத்திலும் பால விதிமுறைகளும் கட்டுப்பாடுகளும் காணப்-படும். இவை எப்படி உங்களுக்கு உகந்-தன என்பதை கவனிக்க வேண்டும்.

வீட்டுக் கடன்களுக்கான காப்புறுதியை வங்கியில் பெற்றிருந்தால் நீங்கள் அந்த வங்கிக்கு காப்புறுதித் திட்டம் வழங்கிய காப்புறுதி நிறுவனத்தை நேரடியாகத் தொடர்பு கொள்வதன் மூலம் உங்கள் திட்டம் பற்றிய தகவல்களைப் பெற முடி யும். காரணம் வங்கியில் வழங்கப்படும் காப்புறுதித் திட்டம் வேறு காப்புறுதி நிறுவ-னத்தில் இருந்துதான் உங்களுக்கு வழங்-கப்படுகின்றது. உதாரணமாக நீங்கள் TD Canada Trustஇல் வீட்டுக் கடன் பெற்றி-ருந்தால் அதற்கான காப்புறுதித் திட்டம் Canada Life நிறுவனத்திலிருந்து வழங்கப்-பட்டிருக்கும்.

காப்புறுதிக்கான விண்ணப்பப்பத்திரத்தில் மருத்துவ சம்பந்தமான கேள்விகளுக்கு பதிலளிக்கும்போது உங்களுக்க சரியான தகவல்கள் தெரியாவிட்டால் உங்கள் குடும்ப வைத்தியரிடம் அதுபற்றிய விளக்-கத்தை அறிந்து சரியான பதில கொடுப்பது முக்கியம்.

உங்களுக்கான காப்புறுதித் திட்டம் கிடைத் தவுடன் 10 நாட்களுக்குள் அதைப் படித்து உங்களுக்கு உகந்த திட்டம் இல்லையென் றால் திரும்பக் கொடுத்து கட்டிய பணம் திரும்பப் பெறலாம். அல்லது மாற்றங்கள் செய்யலாம்.

ஒரு காப்புறுதித் திட்டத்தை எந்த நேரமும் நீங்கள் இருந்து செய்யலாம். ஆனால், நீங் கள் கட்டிய பணத்தை திரும்பக் கொடுக்க மாட்டார்கள்.

வீட்டுக் கடன் காப்புறுதி பெறுவதற்கு முன்பு கவனிக்கப்பட வேண்டிய முக்கிய விடயம் உங்களுக்கு ஏற்கனவே உள்ள காப்புறுதித் திட்டம் போதுமானதா என்பது காரணம் பற்-றிய ஆயுட்காப்புறுதி திட்டத்துடன் தேவை யான தொகையை அதிகரிக்க முடியும். அப்படிச் செய்வதால் உங்கள் மாதாந்தக் கட்டணத்தில் சிறிது சேமிக்க முடியும்.

மிக மிக முக்கியமான விடயம் உங்க-ளுக்கு வீட்டுக்கடன் காப்புறுதி தேவையா என்பது. வீட்டுக் கடனுக்கு காப்புறுதி பெறுவதற்கு காரணம் உங்களுக்கு மரணம் ஏற்பட்டால் உங்களில் தங்கியிருப்பவர்கள் பொருளாதார ரீதியாக பாதிக்கப்படாமல் பாதுகாப்பதற்கு, உங்களுக்குப் பின்னால் உங்களில் ஒருவரும் தங்கி அல்லது நம்பி இருக்காவிடில் உங்களுக்கு இந்த வீட்டுக்-கடன் காப்புறுதி அவசியமில்லை.

இக் கட்டுரையின் தொகுப்பினை ஒளி வடிவில் காண்பதற்கு
**www.cbc.ca/marketplace/in_denial**

■ ■ ■

# பிரதான பராமரிப்பாளர்

குமார் புனிதவேல் பக்கம்

## தொடர் - 2

### அவர் அறிவுறுத்தலால் அவருக்கு உதவுங்கள்:

ஒருவருக்கு குறிப்பிட்ட காலம் தான் வாழ்வு உண்டு என அறிவிக்கும் வேளையில் ஒவ்வொருவரும் வித்தியாசமான விதத்தில் தான் செயல்படுவார்கள். சிலர் உடனே அழுதுகுழறுவார்கள். இன்னும் சிலர் அமைதியாக நிலைத்துநிற்பார்கள். வேறு சிலர் ஒன்றுமே நடவாது போல் இது தெரிந்த விடயம்தானே என்று நடந்துகொள்வார்கள். சிலர் தம்மை சுற்றியுள்ளவர்களிடம் ஆதாரம் தேடுவார்கள். இன்னும் சிலர் தமக்குள்ளேயே ஒடுங்கிவிடுவார்கள். எனவே இந்த அதிர்ச்சியான செய்திக்கு எப்படி நடந்து கொள்வார்கள் என்பதற்கு ஒருவிதமான முன் அனுபவம் கிடையாது.

### 1. பொதுவாக அவர்கள் முன்பு எப்படி இருந்தார்களோ அப்படியே தான் இருப்பார்கள்.

ஒருவர் மரணிக்கிறார் என்பதற்காக அவர் குணங்களில் மாற்றம் ஏற்படுவதில்லை. அவர்கள் திடீர் என இரக்கசுபாவமுடையவராக அல்லது துணிச்சல் காரராக மாறப்போவதில்லை. அவர்கள் முன்னர் போலவே இருப்பார்கள். கருணையுள்ளவர் கருணையுள்ளவராயும் கடின சுபாவமுடையவர் கடின சுபாவமுடையவராயுமிருப்பர். முன்பு அவர் நகைச்சுவையுடன் உற்சாகமாக இருப்பாரானால் அவர் தொடர்ந்தும் நகைச்சுவையுடன் உற்சாகமாகவிருப்பார்.

ஆனால் இறந்துகொண்டிருக்கும் ஒருவர் சில குறிப்பிட்ட தன்மைகளை கூடியளவு காட்டுவர்கள். தனக்குள்ள காலம் சொற்பமாகையால் அக்காலத்தில் கூடியவளவு பயனுடையதாக பாவிக்க தமது குணங்களை பரிணமிக்கச் செய்வார்கள். உங்களுக்கு அவர்களுடைய உண்மையான சுயரூபம் தெளிவாகத்துலங்கும்.

### 2. மரணத்தின் வாசலில் உள்ளவர்கள் இயன்றளவு தமது இயல்பு வாழ்க்கையை தொடர்ந்து வாழ முற்படுவார்கள்.

பொதுவாக நாம் இறந்துகொண்டிருப்பவரை வித்தியாசமாக பாவிக்க முற்படுவோம். அவருக்குப் பக்கத்தில் அமைதியான குரலில் பேசுவது, முகத்தை தொங்கப்போட்டுக் கொண்டிருப்பது அல்லது பொய்யான உற்சாகத்துடன் காட்டுவது, சம்பாசனைகள் கூட ஒருசில விடயங்களுடன் நிறுத்திவிடுவதுடன் சில விடயங்களை பிரஸ்தாபிப்பதில்லை. இப்படிச் செய்வதால் இறந்து கொண்டிருப்பவர் தன்னை ஒதுக்குவதாக உணரக்கூடும். அல்லது தன்னை இரக்கத்துடன் நோக்குவதாக எண்ணக்கூடும். அவர்களை சிறு குழந்தைகளாக பாவிப்பதாக எண்ணக்கூடும்.

இறக்கும் தறுவாயில் இருப்பவர் முன்பு வாழ்ந்துகொன்டு இருந்தவரே. அவர் ஒரு விதத்திலும் மாறுபடவில்லை என்பதை மறக்கலாகாது. அவர்கள் எல்லா விதத்திலும் உங்களுக்கு சமமானவர். அவருக்கும் உடம்பில் முழு உயிரும் இருக்கிறது. ஒரு போதும் பாதி உயிர் இருக்க மீதி உயிர் செல்வதில்லை! அவர்கள் முழு மனிதர்கள் என்பதுமல்லாமல் அதற்கான கௌரவத்தை எதிர்பார்ப்பார்கள். அதனை கொடுப்பது உங்கள் கடன். அவர்கள் உங்கள் இரக்கத்தை எதிர்பார்க்கவில்லை. அன்பை எதிர் பார்க்கிறார்கள். தங்களை தலையில் தூக்கிவைக்கக் கேட்பதில்லை. தோளோடு தோள் கொடுத்து அணைத்துச் செல்ல கேட்கிறார்கள் என்பதை மறத்தலாகாது.

### 3. இங்கு பிரமாணம், பிரமாணம் இல்லை என்பதே!

அனேகமானவர்களில் குணங்களில் மாற்றமிருக்காது என்று முன்பு குறிப்பிட்டேன். ஆனால், சிலரில் மாற்றம் இறுதி நேரம் வரும் வேளை அவதானிக்கக்கூடியதாயுள்ளது. எஞ்சியுள்ள காலப்பகுதியை தாம் விரும்பியபடி வாழவிரும்புவதில் ஆச்சரியம் இல்லையல்லவா! தாம் கட்டிகாத்து வந்த முறைகளில் மாறி கூடிய சுதந்திரத்துடனும் மகிழ்ச்சியுடனும் காலத்தை செலவிட விரும்புவர். சிறு காலப்பொழுதிலேயே இவர்களில் பெரும் மாற்றம் காணக்கூடியதாயிருக்கலாம்.

எனவே மரணிப்பவர் இப்படித்தான் செய்வார் என்ற மனநிலையுடன் அணுகாமல் வருவதை முகம்கொடுத்து அனுசரனையாக இருப்பதில்தான் உங்கள் பங்களிப்பு சிறக்க வழியுண்டு. அவர்கள் மகிழ்ச்சியையும், வேதனையையும் அறிய முடியும். அவர்களுக்கு அழுவதற்கும் சிரிப்பதற்கும் முடியும். அழும்போது அணையுங்கள். சிரிக்கும் போது சேர்ந்து சிரியுங்கள். நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதை அவர்கள் மூலம் தெரிந்து கொள்ளுங்கள். அவர்கள் இறக்கும் வரை வாழவைப்பதில் தான் உங்கள் வெற்றி. அவர்களுக்கு வேதனையாயிருக்கிறது, பயமாயிருக்கிறது என்றால் நீங்கள் எனக்கு தெரியும் என்று சொல்வதில் அர்த்தமில்லை. ஏனென்றால், உங்களுக்கு தெரியாது. அத்துடன் உங்களுக்கு தெரியாது என்று அவருக்கும் தெரியும். எனவேதான் அவர்கள் எதனை எதிர்பார்க்கிறார்கள் என்பதை அவர்களின் மூலம் அறிந்து கொள்ளுங்கள்.

## தனிமரம் தோப்பாகாது

மரணப் படுக்கையில் இருக்கும் ஒருவருக்கு நீங்கள் தாம் பிரதான அனுசரனையாளராக இருப்பீர்களாயின் அது மிக மிக கடினமான ஒரு வேலை. உங்களுக்குள்ள வேலைப்பளு பாரியது. உங்கள் மேல் மிகுந்த அழுத்தம் கொடுக்கப்படும். இதன் காரணமாக உங்கள் தேவைகளும் பெருகிவிடும். நீங்கள் எவ்வளவு வல்லவராக இருப்பினும் அனுபவம் உள்ளவராக இருப்பினும் தனி ஒருவராக எல்லாத் தேவைகளையும் பூர்த்திசெய்வது கடினம். சில விடயங்கள் உங்கள் வல்லமைக்கு அப்பாற்பட்டவையாயிருக்கும். அல்லாவிட்டால் அவற்றை செய்யவேண்டிய பலம் உங்களுக்கு இல்லாமலிருக்கலாம். சில விடயங்கள் மனதை பெரிதும் பாதிப்பதினால் செய்ய முடியாது இருக்கலாம்.

இவ்வேளைகளில் மற்றவர்களுடைய உதவியை நாடுவது அவசியம்.

### 1. உங்களுக்காக மற்றவர்களுடன் சுமையைப் பகிர்ந்து கொள்ளுங்கள்.

எல்லோருடைய வல்லமைக்கு ஒரு எல்லை உண்டு. இதை ஏற்றுக்கொள்வது உங்களுக்கு இயலாது என்று கொள்வதிலும் பார்க்க நீங்கள் யதார்த்தத்தை ஏற்றுக்கொள்வது உங்கள் அறிவின் முதிர்ச்சி என்று உணர வேண்டும். நீங்கள் செய்யும் வேலையின் பரிணாமத்தை புரிந்துகொண்டுள்ளீர்கள் என்பதை இது காட்டும். யாராவது உதவிக்கு வந்தால் மறுக்காமல் ஏற்றுக்கொள்ளுங்கள். யாராவது வந்து உங்களிடம் நான் ஏதும்உதவி தரமுடியுமா? என்று கேட்டால் அவர்கள் எவ்விதம் உதவக்கூடும் என்று சங்கோஷப்படாமல் சொல்லுங்கள். என்ன செய்யலாம் என்பதில் குறிப்பாக தெளிவாக இருங்கள். உங்களுக்கு சமையலுக்கு அனுசரணையாயிருக்கலாம், வீட்டு வேலைகள் செய்ய உதவலாம். கடைக்கு, மருந்தகத்திற்கு செல்வதற்கு உதவியாயிருக்கலாம். அல்லாவிடில் நோயாளியுடன் அவர்கள் நிற்க நீங்கள் வெளிவேலைகளைச் செய்ய உதவியாயிருக்கும். சில சமயங்களில் வைத்தியரிடம் அழைத்துச்செல்ல உதவியாயிருக்கும். பலவேளைகளில் உங்கள் பண விடயமாக, வரி விடயமாக, செலவினம் விடயமாக அவர்களில் சிலர் அறிவுரைகூற வல்லவராயிருப்பர். அதே மாதிரி சட்ட விடயங்களில் சிலர் ஆலோசனை வழங்கலாம்.

அவர்களாக வந்து உதவாவிட்டால் நீங்களாக கேட்டுப்பெறுவதில் தவறு ஏதுமில்லை. உங்கள் உறவினர், சினேகிதர்களிடம் உங்கள் வேதனைகளைச் சொன்னால் தான் அவர்களுக்குத் தெரியவரும். முக்கியமாக ஒரு குறிப்பிட்ட விடயத்தில் நிறைய அறிவும் தெளிவும் உடையவரானால் அவரிடம் சென்று கேட்பதில் தவறு ஒன்றுமில்லை. மேலும் அனுசரணை வழங்கும் அமைப்புகளை அணுகி உதவியைப் பெறுங்கள். அவர்கள் உதவி செய்வதுடன் முன்னனுபவம் நிறையவே உடையவராய் இருப்பதால் உங்கள் சுமையைக் குறைக்க பெரிதும் உதவுவார்கள்.

### 2. உதவி வழங்குவதால் உதவுபவரும் பயனடைவார்.

கேட்க வியப்பாய்இருக்கிறதா? பல வேளைகளில் தாம் ஏதாவது செய்யவேண்டும் என்று துடித்துக்கொண்டிருப்பவர்கள் அதுவும் தமது கரிசனையையும் அன்பையும் காட்ட வழி தெரியாமல் ஏங்கிக்கொண்டிருப்பவர்கள் தாம் செய்யவேண்டியதை நீங்கள் தடுப்பதாக எண்ணக்கூடும். தாங்களும் ஒரு விதத்தில் உதவலாம் என்று அறியும்போது மகிழ்ச்சியும் ஆன்ம திருப்தியும் அடைவார்கள். ஒவ்வொரு முறையும் வீட்டிற்கு கரிசனையுடன் வரும்போது கண்காட்சிக்கு வருவதுபோல் இல்லாமல் இயல்பாக உதவ வருவது போல் இருக்கும். இது நோயுடன் போராடுபவருக்கும் உற்சாகத்தைக் கொடுக்கும். அவர்களுக்கு எதைப்பற்றிக் கதைப்பது என்று மௌனவிரதம் பிடிக்காமல் தாம் செய்யும் விடயம் பற்றிக் கதைக்கக்கூடியதாக இருக்கும். இவ்வேளையில் உங்களைப்போலவே செய்வதறியாது மலைத்து நிற்கும் அவர்களுக்கு ஒருவிதத்தில் நீங்கள் உதவுபவராவீர்கள். எனவே உதவியைக் கேட்டுப் பெற்றுக்கொள்ளுங்கள்.

### 3. மரணத்துடன் போராடுபவர் நன்மைக்காக உதவியை பெற்றுக் கொள்ளுங்கள்.

மரணத்துடன் போராடிக் கொண்டிருப்பவருக்கு எல்லாரும் சுற்றிவந்து தமக்கு உதவ வருவதைப் பார்க்கும்போது கட்டாயம் உற்சாகமாய் இருக்கும். அத்துடன் அவர் விட்டுச் செல்லும் அன்புக்குரியவர் (நீங்கள்) ஆதரவற்று தவிக்க மாட்டீர்கள் என மனநிறைவை ஏற்படுத்தும். ஒருவர் தனியாக தனக்காக முறிவதாக எண்ணும் குற்ற உணர்வு அவருக்கு குறையும். இப்படி பலர் பங்கெடுப்பது அவர் வாழ்க்கையை கூடிய சுவாரசியமாக்கும். எல்லாவற்றிற்கும் மேலாக மரணத்துடன் போராடுபவர்க்கு சிறந்த பராமரிப்பை நீங்கள் வழங்கக்கூடியதாயிருப்பதுடன் அப்படி வழங்கிய திருப்தி உங்களுக்கு ஏற்படும்.

### 4. பொது நன்மைக்காக பொறுப்புகளை பகிர்ந்து கொள்ளுங்கள்

'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு' என்று கூறுவார்கள். ஒரு கஷ்டம் வரும்வேளை அனைவரும் ஒன்றுபட்டு ஒருமுகமாக உதவ முன்வரவேண்டும். மனம் உள்ளதால் மனிதன் என்று சொன்னோம். மனம் இருப்பது மற்றவருக்கு இரங்குவதற்கே. எனவே எல்லோரும் சேர்வதால் பொது நன்மை விளையும். மேலும் நீங்கள் எதிர்கொள்வது ஒரு பகீரத பிரயத்தனம். 'அடம்பன் கொடியும் திரண்டால் மிடுக்கு' என்ற வாக்கிற்கு ஒப்ப எல்லோரும் சேர்ந்தால் எந்த ஒரு சோதனைக்கும் முகம் கொடுக்கலாம்.

எல்லாவற்றிற்கும் மேலாக மரணிப்பவர் முக்கியம். அவருக்கு ஆகச் சிறந்த அனுசரணையை வழங்குவதற்காக உங்கள் சுமையை பகிர்ந்து சிறப்பாக அவரை கவனியுங்கள்.

தொடரும்...

# MICHAEL MOOREன் அமெரிக்கா...

78ம் பக்கத் தொடர்ச்சி...

தைப் பெறும் நோக்குடன் செயற்பட்டார். கனடா, மெக்சிக்கோ போன்ற அயல் நாடுகளில் தொழிற்சாலைகளை லாபநோக்குடன் ஸ்தாபித்தார். இத் தொழிற்சாலைகள் காலப் போக்கில் இப்போது சீனாவிற்கு மாற்றலாகி விட்டன. மெக்சிக்கோவில் தொழிலாளர் சட்டங்கள் உறுதியற்றவையாக உள்ளன. சீனாவின் தொழிலாளர்களுக்கான ஊதியம் மிகமிகக் குறைவு.

Flint - அமெரிக்காவில் மிச்சிக்கன் மாநிலத்தில் உள்ள தொழிற்சாலைகள் அதிகம் நிறைந்த நகரம். General Motors நிறுவனம் 1908ம் ஆண்டு இந்த நகரத்தில்தான் ஆரம்பிக்கப்பட்டது. மைக்கல் மூர் இந்த நகரத்திலேயே பிறந்தவர். இவரது பெற்றோர்கள் General Motorsஇன் Flint தொழிற்சாலைகளில் பணிபுரிந்தார்கள். இவரது தாத்தாவும் GMஇல்தான் வேலை பார்த்தவர்.

வருகின்றார். இந்தத் தொழிற்சாலை பல வருடங்களுக்கு முன்பு மூடப்பட்டது. இவரது வருகையின்போது இவரது ஆலோசகர்கள் பலர் போர் ஒன்றின் தேவையை வலியுறுத்துகின்றனர். எந்த நாட்டுடன்? இதுவே கேள்வி. சோவியத் யூனியன் ஏற்கனவே தெளிவாகக் கூறிவிட்டது. நாங்கள் உங்களிடம் தோல்வியடைந்து விட்டோம். இப்போது எங்கள் உள்நாட்டுப் பிரச்சினைகளைத் தீர்ப்பதே எமது தேவை. எந்த நாடு என்ற கேள்விக்கு ஏற்கனவே கனடாவிற்கு அணுஆயுத உற்பத்தி இரகசியங்களை விற்பனை செய்த தொழில்நுட்பவியலாளர் உட்பட பலர் கனடாவைப் பரிந்துரைக்கின்றனர்.

சிலகாலம் போரின்றி காலம் கழித்த அதிபர் கனடாவுடன் போர் தொடுக்கின்றார். கனடாவில் NDP என்ற தேசிய ஜனநாயகக் கட்சி என்ற இடதுசாரிக் கட்சி உண்டு என்பது போன்ற உப்புச் சப்பற்ற காரணங்களுடன்



## Roger Smithஉம் மைக்கல் மூரும்

1988இல் Flintஇல் உள்ள GM தொழிற்சாலையை Roger Smith மூடினார். இதனால் சுமார் 33000 பேர் வேலை இழந்தனர். இதே ஆண்டு புதிய தொழிற்சாலைகள் கனடாவில் ரொறன்ரோவிற்கு அருகில் உள்ள ஒஷாவா நகரிலும் மெக்சிக்கோவிலும் ஆரம்பிக்கப்பட்டன. இவற்றிற்கு இந் நாடுகளின் பணவீக்கம், ஸ்திரமற்ற தொழிலாளர் சட்டங்கள், குறைந்த வேதனம் போன்றவற்றுடன் இவை அண்டை நாடுகள். GM வேலைநீக்கத்துக்கான காரணமாக யப்பானிய, கொரிய, ஐரோப்பிய கார்களின் இறக்குமதி போன்ற பல காரணங்களை முன் வைத்தது. ஆனால் இதே ஆண்டு GM நிகர லாபமாக 4.87 பில்லியன் அமெரிக்க டொலர்களைப் பெற்றது.

Roger & Me இந்தத் துயரமான வேலை இழப்புச் சம்பவத்தை எள்ளலுடன் விவரணப் படமாக்கியுள்ளது. GM அதிபர் Roger Smith மைக்கல் மூரைச் சந்திக்க மறுத்துவிட்டார். இதே ஆண்டு பின்னர் தொடர்ச்சியாக ஏற்பட்ட வேலை நிறுத்தங்கள் GMஇன் உற்பத்தியை சில காலம் பாதித்தது. சுமார் 29 தொழிற்சாலைகளில் உற்பத்தி அறவே நின்று போய்விட்டது. ஆனால் பின்னர் United Auto Workers தொழிற் சங்கத்துடன் GM பேச்சுவார்த்தைகளில் ஈடுபட்டு வேலை நிறுத்தத்தை முடிவுக்குக் கொண்டு வந்தது. இன்று இவ்வாறான வேலைநிறுத்தங்கள் உற்பத்தியைப் பாதிக்காத வண்ணம் தொழிற்சாலைகளில் பலவற்றை ஆசிய நாடுகளில் அமைத்துள்ளது.

## Corporate Worldஐப்பற்றி மிக ஆழமாக விமர்சித்த படம்

Canadian Bacon (1995) இவரது அரசியல் நகைச்சுவைப் படம். அமெரிக்க அதிபர் கனடிய அமெரிக்க எல்லை நகரான நயகரா நீர்வீழ்ச்சிப் பகுதியில் அமைந்துள்ள ஆயுதத் தொழிற்சாலையைப் பார்வையிட

கனடாவைப் பயங்கரவாதமான நாடு என்று காட்டுவதற்காக அனைத்துக் காரணங்களையும் தொடர்பு சாதனங்கள் முன்வைக்கின்றன.

இப்படத்தில் மறைந்த Alan Alda அமெரிக்க அதிபராக சிறப்பாக நடித்திருந்தார். இவருடன் John Cardy, Rhea Perleman போன்றோரும் சிறப்புற நடித்திருந்தனர். இப்படம் அமெரிக்க அரசியலின் அவலங்களையும் புலனாய்வு நிறுவனங்களையும் வெகுசன தொடர்புச் சாதனங்களின் செய்தி திரிபுகளையும் நகைச்சுவையுடன் கேலி செய்கின்றது. மறுபுறம் கனடிய புலனாய்வு நிறுவனங்களையும் விட்டு வைக்கவில்லை.

## Bowling of Columbine

Columbine உயர்பாடசாலையில் Bowling (மாணவர்கள் விரும்பினால் இந்த விளையாட்டை ஓர் பாடமா படிக்கலாம் - elective course) வகுப்பின்போது நடைபெற்ற துப்பாக்கிச் சூட்டுச் சம்பவத்துடன் ஆரம்பமாகி அமெரிக்க வன்முறைக் கலாச்சாரத்தை அதன் கூறுகளை ஆராய்கின்றது இந்த விவரணத் திரைப்படம். இதற்கு கனடியர்கள் பண உதவி செய்து தயாரித்துள்ளனர். இப்படம் 55வது கான் திரைப்பட விழாவில் சிறந்த விவரணத் திரைப்பட விருது பெற்றது. ரொறன்ரோ திரைப்பட விழாவில் மிகச் சிறந்த படத்திற்கான விருதைப் பெற்றது.

## ஃபரனைற் 9ஃ11இல் மூர் முன் வைக்கும் ஆதாரங்கள்

ஃப்ளோரிடா மாநிலத்தில் புஷ் இன் வெற்றியை FOX தொலைக்காட்சி நிறுவனம்தான் கூறியது. அதற்கு முன்பாக வேறு பல நிறுவனங்கள் கோர் வெற்றி பெற்றதாகவே அறிவித்தன.

FOXஇல் தேர்தல் முடிவுகளை அறிவிக்கும் அதிகாரியாக இருந்தவர் புஷ்ஷின் ஒன்று விட்ட சகோதரர்.

06.08.2001இல் - அதாவது தாக்குதல் நடை பெறுவதற்கு சில நாட்களுக.க முன்பாகவே - இதனை புஷ் அறிந்திருந்தார்.

11 செப்டெம்பர் 2001 நிகழ்வின் பின் அனைத்து விமான சேவைகளும் ரத்துச் செய்யப்பட்ட பின்னர் விஷேட விமானத்தின் மூலம் பின் லாடன் குடும்பம் சவூதிக்கு சென்றனர்.

13.09.2001இல் சுமார் 12 விமானங்களில் 142 சவூதிப் பிரஜைகள் சவூதி சென்றனர். இவர்களில் 24 பேர் பின்லாடனின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.

2001ம் ஆண்டில் பின்லாடனின் மகனின் திருமணத்துக்கு புஷ்ஷின் குடும்ப உறவனர்களும் சென்றனர்.

The Carlyle Group போன்ற எண்ணெய் நிறுவனங்களில் புஷ் அதிகாரப் பொறுப்பில் இருக்கிறார். இந்த நிறுவனத்திற்கும் பின்லாடனுக்கும் நெருக்கமான தொடர்புகள் இருந்தன.

செப்டெம்பர் 11ம் திகதி காலை Carlyle Group நிறுவனத்தின் பங்குதாரர்களின் கூட்டத்தில் பின்லாடனின் சகோதரர் ஷாஃபிக் பின்லாடன் கலந்து கொண்டார். ஜேம்ஸ் பேக்கரும் இவரும் செப்டெம்பர் 11 சம்பவத்தை ஒன்றாக இருந்து பார்த்தனர்.

இவை படத்தில் வைக்கப்பட்டுள்ள ஆதாரங்களில் சில. இவரது ஆதாரங்களை நிரூபிக்கும் வண்ணம் கனடிய Vision TV, CBC போன்றனவும் பல ஆதாரங்களை வெளிப்படுத்தின.

## மைக்கல் மூரின் கருத்தியல் பயங்கரவாதம்

மைக்கல் மூர் பிளே போய் பத்திரிகைக்கு அளித்த பேட்டியில் (ஆடி 2004) பின்வருமாறு தெரிவிக்கிறார்

"அமெரிக்காவில் பயங்கரவாதம் இல்லை என்று கூறவில்லை. ஆனால், அதன் பின் நடைபெறுபவையை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. 87 வயது பெண்மனியின் சப்பாத்தை கழற்றச் சொல்லி சோதனை செய்கிறார்கள். எங்களது மக்களையே, நாங்கள் உளவு பார்க்கின்றோம். அமெரிக்காவை, முன்னரைவிட இப்பொழுது அதிக உலக மக்கள் வெறுக்கிறார்கள்" "அமெரிக்காவின் அதிபர்கள் பொய் கூறுகின்றார்கள். கிளின்டன் - அந்த பெண்ணுடன் உறவு கொள்ள வில்லை என்றார். புஷ் - ஈராக்கில் அணு ஆயதம் உண்டு என்றார்". "பயங்கரவாதத்தை நிறுத்த பின் லாடனை கொல்ல இஸ்ரேலை அழையுங்கள். அவர்கள கமாஸ் தலைவரை Sheik Ahmed Yassin கொன்றார்கள். FBIன் கருத்துப்படி மொத்தம் 190 அல் கைய்டா உறுப்பினர்களே உள்ளார்கள். இதனை செய்ய இஸ்ரேலே தகுதியானது".

அதே சமயம் 911ன் பின்னணியில் இஸ்ரேலின் பங்கு பற்றியும் முன்னர் குறிப்பிட்டுள்ளார்.

இஸ்ரேலின் பயங்கரவாதத்தை ஆதரிக்கும் மூர், லத்தீன் அமெரிக்க சர்வாதிகாரரை கொல்லும் பொழுது பாதிரிமாரையும், கிறிஸ்தவ சகோதரிகளையும் கொல்ல வேண்டாம் என கேட்டுக் கொல்கிறார். ஏன் மக்களை கொல்ல வேண்டாம் எனக் கேட்க வில்லை?

இவரது இரண்டு நூல்களில் ஒன்றான Dude, Where's my Country என்ற புத்தகத்தில் கியுபாவிற்கு எதிரான ஆக்கிரப்பையும் ஆதரித்து கருத்து வெளியிட்டுள்ளார்.

பாலஸ்தீனிய மக்கள் உரிமைகளை நிராகரித்து, பாலஸ்தீனமும் இஸ்ரேலும் அமெரிக்காவை நரகத்துக்கு அனுப்பிவிட்டன என தனது நூலில் குறிப்பிடுகிறார்.

## அமெரிக்க தேர்தல்

கடந்த தேர்தலில் மைக்கல் மூர், ஜோர்ஜ் புஸ்ஸை தோற்கடிப்பதிலேயே குறியாக இருந்தார். இதனால் இவர் கெரியை ஆதரித்துப் பேசினார். குடியரசுக் கட்சி வேட்பாளர் ஜோன் கெரி திட்டவட்டமாக எந்த கருத்தையும் தெரிவிக்கவில்லை. ஈராக்கிலிருந்து அமெரிக்க துருப்புக்களை வெளியேற்றுவது நல்லதல்ல என்ற கருத்தையும் ஜோன் கெரி முன்வைத்துள்ளார். ஜோர்ஜ் புஸ்ஸின் Republicanக் கட்சிக்கும், குடியரசுக் கட்சிக்கும் கொள்கையளவில் கடந்த தேர்தலளவில் பெருத்த வேறுபாடுகள் காணப்படவில்லை. இதைத் தவிர தேர்தலில் போட்டியிட்ட 12 கட்சிகள் முன்வைத்த நல்ல கருத்துக்கள் பற்றி கூட இவர் கருத்து தெரிக்கவில்லை. இது இவரது அரசியல் தெளிவின்மையைக் காட்டுகிறது. ( http://www.politics1.com/p2004.htm)

## உலகமயமாதல்

இன்று இரண்டு பொருளாதார ஆக்கிரமிப்புக்கள் நடைபெறுகின்றன. 1. அமெரிக்கமயமாதல் 2. உலகமயமாதல்

அமெரிக்க மக்களின் தொழில் வாய்ப்புக்கள் மூன்றாம் உலக நாடுகளை நோக்கிச் செல்கின்றன என்ற கவலையை மைக்கல் மூர் தனது இரு நூல்களிலும் வெளிப்படுத்தியுள்ளார். உலகமயமாதல், அமெரிக்கமயமாதல் ஆகியவற்றால் மூன்றாம் உலக நாடுகள் பாதிக்கப்பட்டுள்ளன என்ற கவலையை இவர் இது வரை வெளிப்படுத்தவில்லை.

இவர் அமெரிக்கமயமாதலை விரும்புகின்றார்.

## கனடாவியல்

கனடா ஈராக்குக்கு தனது படைகளை அனுப்பவில்லை. அப்போதைய பிரதமர் ஈராக்கில் அணுவாயுதம் இருப்பது நிரூபிக்கப்படவில்லை, எனவே படையை அனுப்பமாட்டோம் எனக் கூறினார். இவர் கியுபெக் என்ற பிரென்சு மாநிலத்தை சேர்ந்தவர். பெரும்பாலான கனடிய பிரதமர்கள் பிரென்சு மொழி பேசுபவர்களே. பொதுவாக இவர்கள் அமெரிக்க எதிர்ப்பாளர்களே. இதே பிதமரின் காலத்தில்தான் ஆப்கானிஸ்தானுக்கு படைகள் அனுப்பப்பட்டன. மைக்கலுக்கு கனடாமேல் ஓர் காதல். இவர் பிறந்த மிச்சிக்கன் மாநிலத்துக்கு அருகில்தான் கனடாவின் ஒன்ராரியோ உள்ளது. இவர் பல தடவைகள் கனடா பற்றி தனது சந்தோஷத்தை வெளிப்படுத்தியுள்ளார். கனடாவும் ஓர் முதாளித்துவ நாடு. அதுவும் நிறத்துவேஷம் கொண்ட பழைமைவாதக் கட்சி ஆட்சி நடத்துகிறது. கனடா பற்றி இவர் பல தவறான கணிப்பீடுகளை கொண்டுள்ளார்.

## தரகு முதாளித்துவம்

பெரும் வணிக நிறுவனங்களின் குளறுபடிகளை துணிச்சலுடன் வெளிப்படுத்தியுள்ளார். GMன் Flint தொழிற்சாலை வேலை நீக்கத்தை தனது முதலாவது விவரணச்சித்திரத்தில் வெளிப்படுத்தியுள்ளார். இவரது தொலைக்காட்சி தொடரிலும் (The Awful Truth) இந்த குளறுபடிகளை வெளிப்படுத்தியுள்ளார். தனது நூல்களிலும் பெரும் நிறுவனங்கள் குளறுபடிகளை வெளிப்படுத்தியுள்ளார். CEOக்கள் கூடுதலான போனஸ் பெறுவதற்காகவும், லாபத்தை அதிகம் காட்டுவதற்காகவும், சுலபமான வழியான வேலை நீக்கத்தை செய்கிறார்கள். இதனை தரவுகளுடன் வெளிப்படுத்தியுள்ளார். இவரது இந்தப்பார்வையே இவரை ஓர் இடது சாரியாக காட்டுகிறது.

இவரை ஓர் இடதுசாரியாக கருத முடியாது. இவர் ஓர் புரட்சியாளர் கூட இல்லை. வியட்நாம் போரின் மறுபக்கத்தை காட்டவில்லை. 911ல் அரசுக்கும் பங்கு உண்டு என்றே கூறினார். புஷ்ன் ஆட்சியை தோற்கடிப்பதே முக்கியம் என்று தெரிவித்தார். அடுத்து என்ன? அமெரிக்க சாம்ராஜ்ஜியம் என்பது நீண்ட கால திட்டமிடப்பட்ட தயாரிப்பு. இதனை ஓர் ஆட்சி மாற்றத்துடன் மாற்றலாம் என்பது ஓர் அரசியல் தெளிவின்மையயே காட்டுகிறது.

இவர் ஓர் மனித உரிமைவாதியே. அதுவும் அமெரிக்க மனித உரிமைவாதி.

■ ■ ■

# வளமான வாழ்விற்கு வதிவிடம் வாங்கிட......



**Warden/Finch**

3 Bedrooms, 2 Washrooms
Excellent Location.
Steps To 24Hr Ttc .
Walk To Schools, Parks, Malls,
Close To Hwy 401 & 404.

**$179,000**



**Finch/Pharmacy**

4+2 Bedrooms, 4 Washrooms
Immaculate Condition
Well Kept
House! Lower Maintenance,
Custom Painting

**$239,900**



**Finch/Middlefield**

2+1 Bedrooms, 1 Washroom
Low Rise Condo Facing
Courtyard. Excellent Location.
A Few Upgrades
From The Builder.tc

**$199,500**



**Midland/Sheppard**

Prime Agincourt Location!
Lot Size 80 X 150 Fits
To Build A Custom
Home Up To 4800 Sq.Ft.
Walk To Go Station & 401.

**$349,900**



**9th Line/14th Ave**

4 Bedrooms, 3 Washrooms
Excellent Box Grove
Neighbourhood!
2712 Sq Ft! Less Than 1 Year
New Arista Home! Dble Dr Entry

**$549,900**



**Mccowan/Denison**

5+2 Bedrooms, 6 Washrooms
Stunning House - Monarch
Built, Basement Finished,
Interlocking Driveway,
Double Enclosed Porch

**$599,900**



**Markham/Bur Oak**

4 Bedrooms, 4 Washrooms
Less Than 1 Year New, Well
Maintained Approx. 2850 Sq. Ft.
Home With 9Ft Ceiling.
Double Door Entrance

**$494,900**



**Kipling/Steeles**

2+1 Bedrooms, 2 Washrooms
Luxury 2 Bedroom Condo.
Overlooking Beautiful
Ravine And Parklands.
Balcony With Eastern Exposure

**$149,900**



**Mississauga Rd/Erin Mills Rd**

4 Bedrooms, 3 Washrooms
As Opportunity Knocks It's Well
Established Money Making
Store At Prime Location
Mississauga Rd/Erin Mills Rd

**$119,900**



**Steeles/Chinguacousy**

3 Bedrooms, 2 Washrooms
Budget! Why Rent When You
Can Own This Beauty?
Extra Deep Lot Gives You A
Large Backyard.

**$249,900**



**Victoria/Pinnacle**

Excellent Location. Detached
Commercial Bldg W/Main Floor
3156 Sq Ft And 2nd Floor
2330 Sq Ft. Price Includes
Restaurant And Bldg

**$400,000**



**Victoriapk/Ellesmere**

Restaurant Located In
Great Area.
Excellent Street Exposure.
Few Blocks South Of Hwy 401.

**$120,000**

ROYAL LEPAGE
Connect Realty, Brokerage
INDEPENDENTLY OWNED AND OPERATED



**RANJAN FRANCIS XAVIER**
Sales Representative
**DIR: 416-816-1220**

# நலம் நாடுவதும் அதுவே

## உங்கள் மாற்றத்தின் மாற்றத்திற்கு என்னை அழையுங்கள்



*Good for Students or Staffs or Investors*

*RICHMOND & WINDERMERE - London Ontario*
*Walking dist. to western university*

*$ 178,900*



*Midland/ Eglinton*
*$109,900*



*Kennedy/ sheppard*
*$ 149,800*



*Markham/ Finch*
*$ 209,900*



*Mclevin/ Sewells*
*$ 218,000*



*Markham/ Passmore*
*$ 314,900*



*Staines/ Finch*
*$ 369,900*



*Markham Rd/ Bur oak*
*$ 513,000*



*Woodbine/ Maj Mac*
*$ 549,900*

*Also Commercial & Investment Properties*



*Sheppard/ Meadowale*
*$ 419,900*



Kathir S Kathirgamanathan P. Eng.

***www. kathirsubramaniam.com***

Email: kathirs@rogers.com

*Call me for a change*

Sales Representative

**24 Hrs 416 856 6900**

**HomeLife / GTA Realty Inc., Brokerage***

1711 McCowan Road, #206,Toronto, ON, M1S 3Y3

Tel: 416-321 6969 Fax: 416 321 6963

Independently owned and operated

# கருவுற்ற தாய்மாரின் கவனத்திற்கு

சிவவதனி பிரபாகரன்



தாய்மை என்பது கிடைத்தற்கரிய பேறு. எந்தவொரு தாய்கும் தான் கருவுற்றிருப்பதைப் போன்ற உன்னத உணர்வு வேறு எதிலும் கிடைப்பதில்லை. கருவுருதல் என்பது இயற்கையின் அற்புதம். எனினும் கர்ப்பகாலம் என்பது எல்லோருக்கும் எளிதானதாக அமைவதில்லை.

பல சமயங்களில் பத்து மாதமும் பத்து நாளிகை போல் பறந்து போகும் எளிமை கொண்டதல்ல. சில கர்ப்பங்கள் பலதரப்பட்ட சிக்கல்களைக் கொண்டவை. சிரமமானவையாக, பயங்கரமானவையாக துன்ப கரமானதாக அமையும் கர்ப்பங்கள் பல மனதை வருத்தும் நிஜங்களாக உள்ளன.

கர்ப்பகால சிக்கல்கள் சிறியதிலிருந்து பெரியதுவரை வேறுபடுகின்றன. மிகச்சிக்கலான கர்ப்ப பிரச்சினைகளாக கருச்சிதைவுகள், சுகயீனங்கள், முற்கூட்டிய பிரசவம் மற்றும் மனவுழைச்சல் போன்றவற்றை குறிப்பிடலாம். தீர்வுகளில்லாத சிக்கலென இன்றைய மருத்துவ வளர்ச்சி பெற்ற உலகில் எவையுமே இல்லை எனலாம். பிரச்சினைகளுக்கேற்ப உணவு முறையில் மாறுதல்களிலிருந்து படுக்கையில் ஓய்வு எடுத்தல், மருந்துகள் எடுத்தல் என்பன போன்ற அவசரகால சத்திர சிகிச்சைகள் வரை பிரச்சினைகளுக்கேற்ற தீர்வுகள் வேறுபடுகின்றன.

கருவுரும் தாய் தன் கர்ப்ப காலத்தில் எத்தகைய சவால்களையும் சிக்கல்களையும் எதிர்கொண்டாலும் அவை அனைத்தையும் எதிர்கொள்ள வல்லவளாகவும் எதையும் நம்பிக்கை நோக்கோடு உறுதியாக மனமகிழ்ச்சியோடு அணுகுபவளாகவும் யதார்த்த வாதியாகவும் தன்னை மாற்றிக்கொள்வது ஆரோக்கியமான கர்ப்பவளர்ச்சிக்கு அவசியமானவையாகும். மனமே பலதரப்பட்ட நோய்களுக்கும் மருந்தாகும் என்பதை கருவுற்ற தாய் உணர்வாளேயானால் தாய்-சேய் உடல் உள நலம் ஆரோக்கியம் பெறும். கருவுற்றிருக்கும் பெண்ணானவள் கர்ப்பகாலத்தில் எதிர்கொள்ளக்கூடிய சிக்கல்களை அறிந்து வைத்திருப்பதன் மூலம் தனக்கு நிகழும் சில ஆபத்துக்களை ஆரம்ப கட்ட மருத்துவ உதவியை நாடுவதன் மூலம் தவிர்த்துக்கொள்ள முடியும். எனினும் தீர்வு இல்லாத சில சிக்கல்களும் கர்ப்பகாலத்தில் உள்ளன என்பதையும் நாம் மறக்கலாகாது. (உதாரணம் : கருச்சிதைவு)

## கருச்சிதைவு

கருவுற்ற ஆரம்ப மாதங்களில் இரத்தப் பெருக்கிருத்தல் கருச்சிதைவுக்கு சில சமயங்களில் ஆரம்ப அறிகுறியாக இருப்பதுண்டு. மருத்துவ தகவல்படி கருவுற்ற கருக்களில் 25வீதமானவை கருச்சிதைவடைவது இயற்கையானது என்று கூறப் படுகிறது. இவற்றில் பல கருச்சிதைவுகள் பெரும்பாலும் சீரற்றுவரும் மாத விலக்குக்குரிய காலத்திற்கு முன்பாகவே கருச்சிதைவுருவதனால் இதனையும் பெரும்பாலும் உணர்வதில்லை. அதாவது நாம் கருவுற்றிருக்கிறோம் என அறியும் முன்பாகவே அதீதமான கருச்சிதைவுகள் நடக்கின்றன. சில சமயங்களில் கருவுற்ற அறிகுறிகள் தாயின் உடலில் தென்பட்டாலும் ULTRA SOUNDல் EMBRYO (கரு) காணப்படுவதில்லை. இச்சந்தர்ப்பத்தில் எமது உடல் EMBRYOவை மீளப் பெற்றுவிடுகின்றது. இதனை Blighted ovum என்பர். ஒருவேளை Embryo இறந்து கர்ப்பப்பையிலேயே இருப்பதனை Ultra Soundல் காணமுடியுமாயின் அதனை missed Abortion என்பர். First Trimester எனும் முதல் நான்கு மாத காலங்களில் நடைபெறும் கருச்சிதைவுக்கு பெரும்பாலும் (Chromosomal defects) நிறமூர்த்தங்களில் ஏற்படும் கோளாறுகள் அல்லது ஹோமோன்களில் ஏற்படும் கோளாறுகள் காரணமாகின்றன. இவற்றிற்கு குருதிப்போக்கு, குருதி கட்டிப்படுதல், வயிற்றுவலி என்பன பொதுவான அறிகுறிகளாகும். இத்தகைய குறைபாடுகள் கொண்ட கருவை எமது உடலில் தானாகவே



“ உயர் இரத்த அழுத்தம் சிக்கலானது. தாய்மாருக்கு கர்ப்பகாலத்திற்கு முன்பாக, கர்ப்பகாலத்திலோ உருவாகலாம். இதனால் குறைமாத பிரசவத்திற்கு அறுவைச் சிகிச்சை மூலம் உள்ளாக நேரிடலாம்.
குறைந்த நிறையுடைய குழந்தைகளும் பிறக்கும் அபாயம் இதனால் உண்டு. உயர் இரத்த அழுத்தத்தின் அளவு நிலைக்கேற்ப தாய் சேய்க்கான பாதிப்புக்கள் பலவகையில் ஏற்படும் அபாயம் உண்டு. ”

வெளியேற்ற முயலும் அல்லது D & C (Dilation and Curettage) எனும் சத்திர சிகிச்சை மூலம் சுத்திகரிக்கப்படும். D & C என்பது கர்ப்பப்பை வாசலை (Cervix ஐ) அகலமாக்கி, இழக்கி கர்ப்பப்பை சுவரை மென்மையாக சுரண்டியும் சுத்திகரிக்கும் செயன்முறையாகும். இயற்கையான கருச்சிதைவின் பின்பும் கருப்பை சுவரில் வெளியேற்றப்படாத மிகுதிகள் இருக்குமாயின் D & C மூலம் மருத்துவர்கள் அவற்றை அகற்றுவர்.

முதலாவது Trimester முடிவடைந்த பின் கருச்சிதைவானது பொதுவில் இருப்பதில்லை. சிசுவின் இதயத்துடிப்பு குறைதல் அசைவுகள் குறைதல் போன்ற அபாயக் குறிகளில் கவனம் செலுத்துதல் அவசியம். சிசுவானது காரணமறியாத மரணத்திற்குள்ளாகும் அபாயமானது Ultrasound Scan மூலம் உன்னிப்பான அவதானிப்பின் மூலம் அவதானிக்கப்படுவது வழமை.

இப்பருவ கருச்சிதைவுகளுக்கு பொதுவாக காரணம் அறியப்படுவதில்லை. எனினும் விபத்துக்கள், மருத்துவச் சிக்கல்கள், ஆபத்தான மருந்துகள் போன்ற பல காரணங்கள் ஓரளவுக்கு ஊகிக்கப்படக்கூடியவையாகும்.

பொதுவாக 2வது Trimester அல்லது 3வது trimester காலக் கருச்சிதைவுகளின் பின் கருவை வெளியேற்ற chemical induction அல்லது D & E (Dilation and Evacuation) முறைமையை மருத்துவர்கள் கையாளுவர். அதாவது மருந்து மூலம் வயிற்று வலியோடு வெளியேற்றும் முறை அல்லது மயக்கி கர்ப்பப்பை வாயை இளக்கி குழந்தையை வெளியேற்றும் முறையைக் கையாளுவர்.

## Entopic Pregnancy பலோப்பியன் குழாயில் கருத்தரித்தல்.

சூலகத்தில இருந்து வெளியேற்றப்பட்ட சூலானது கருப்பையை வந்தடையாமல் விந்துடன் இணைந்து பலோப்பியன் குழாய்க்குள்ளேயே கருவுற்றிருக்குமானால் அந்த கருவினையும் எம் உடலின் கர்ப்பகால அறிகுறிகள் கருவுற்றிருப்பதாகவே காட்டும். எனினும் கர்ப்பப்பையில் கருவுறாத அக்கருவானது உண்மையில் கருவுற்றதாக கருதப்படவல்லதன்று. இதனை ‘no-win’ Pregnancy என்கிறது மருத்துவம். கருவுற்ற கருவானது பலோப்பியன் குழாயில் பதிந்து வளர ஆரம்பிக்கின்றது. இதனால் பலோப்பியன் குழாயின் சுவர் இயற்கைக்கு மாறாக இழுபட்டு கிழிபட நேரிடும். உட்சுவரின் கிழிதலினால் குருதி மயிற்த்துளைக் குழாய் கள் வெடித்து குருதிப் பெருக்கு உருவாகும். இத்தகைய கருவுறுதலின் அறிகுறிகளாவன குருதிப்போக்கு கீழ் முதுகு வலி, மயக்கம், தலைச்சுற்று, வாந்தி, கீழ்வயிற்று வலி மற்றும் சாதாரண கர்ப்பகால அறிகுறிகளுமாகும்.

இத்தகைய பிரச்சினை அறியப்பட்டவுடன் மருத்துவர்கள் அவசர அவசரமாக இந்த embryoஜ அகற்றுவார்கள் இதனை malpositioned nonviable embryo removal என்பர். இச்செயன்முறையில் பலோப்பியன் குழாயின் ஒரு பகுதியை அல்லது முழுமையாக கருவோடு சேர்ந்து அகற்றும் நிலை உருவாகலாம். இதன்போது சூலகமும் அகற்ற வேண்டிய நிலையும் உருவாகும். இவ்வண்ணம் ஒருபக்க சூலகம் அகற்றவேண்டிய சூழ்நிலை உருவாகுமாயின் அதை எண்ணி கலங்க வேண்டியதில்லை. ஏனெனில் மற்றைய சூலகம் மூலம் கருவுறும் வாய்ப்பு இன்னமும் தாய்க்கு உள்ளது. எஞ்சியுள்ள சூலகம் தனது சோடிச் சூலகம் இல்லாது போயின் அதன் தொழிலையும் ஏற்று மாதாந்தம் ஒரு சினையை (சூலை) வெளியேற்ற தொடங்குவதனால் இது குறித்து வருந்தத் தேவையில்லை. இத்தகைய பிரச்சினையை ஏற்று சில கால ஓய்வின் பின் கர்ப்பம் எய்த முயற்சிக்கலாம்.

பொதுவாக கர்ப்பக்காலத்தில் எதிர்பார்க்க வல்ல சில சிக்கல்கள் வரிசையில் நிறை அதிகரிப்பு, வாந்தி, தலைசுற்று, களைப்பு, நெஞ்செரிவு போன்ற சாதாரண சிக்கல்கள் பல உள்ளன. இவை போன்ற சாதாரண விடயங்களை பெரிதுபடுத்தாதிருக்கும் அதேவேளை அசாதாரண சிக்கல்களுக்கான அறிகுறிகளை உடன் மருத்துவர் கவனத்திற்கு கொண்டு வருவது அவசியமாகும்.

தொடரும்...

## வீடும் இல்லமும்

# கோடைகால அழகு



பாலா
இராஜேந்திரன்

"மனிதர்கள் வசிப்பதற்காகக் கட்டப்படுவது வீடு, அன்புள்ளம் கொண்ட உறவினரைக் கொண்டது இல்லம்". ஒருவருக்குப் பல வீடுகள் இருந்தாலும் ஒரு இல்லம் கூட இல்லாதுமிருக்கலாம்.

உங்கள் இல்லம் எப்போதும் இன்பமயமாக இருக்கும். அங்கு உங்கள்மீது அன்பு செலுத்த யாராவது இருப்பார்கள். வீடு என்பது கல், மண், சீமெந்து, பலகை முதலியவற்றால் கட்டப்பட்ட கட்டிடமே. ஒருவர் எத்தனை வீடு வேண்டுமானாலும் வாங்கலாம். ஆனால் அவர்மீது அன்பு செலுத்தும் பெற்றோரோ சகோதரங்களோ மனைவியோ பிள்ளைகளோ அந்தக் கட்டடத்தில் வசித்தால்தான் அதை ஒரு இல்லம் என்று அழைக்கலாம்.

இந்த இனிய இல்லத்தை நாம் நல்லமுறையில் பேணிப் பாதுகாப்பாகவும் அழகாகவும் சுகாதாரமாகவும் வைத்திருத்தல் அவசியம். இப்போது குளிர்காலம் முடிந்து கோடை காலம் ஆரம்பமாகப் போகிறது. எனவே, நாம் கால நிலைக்கு ஏற்ப மாற்றங்களை வீட்டினுள் செய்யவேண்டும்.

உடனடியாகச் செய்யவேண்டியது உங்கள் வீட்டின் உட்புறச் சுவர்களின் நிறங்களை மாற்றுவதே. சுவரின் நிறத்தை மாற்றலாம். அல்லது கதவு, யன்னல், திரைகளை மாற்றிவிடலாம். படுக்கை விரிப்புகள், மேசை விரிப்புகள் போன்றவற்றையும் மாற்றிவிடலாம். சுவரின் நிறத்தை மாற்றுவது அதிக நேரமெடுக்கும். அத்துடன், அதிக செலவுக்கும் வழிவகுக்கும். எனவே, திரைச் சீலை வாங்கியும், படுக்கை விரிப்புகளை மாற்றுவதும் சிறந்தது. இது மனதில் ஒரு பெரிய மகிழ்ச்சியை ஏற்படுத்தும். இது வீட்டின் அழகை மேம்படுத்துவதுடன் வீட்டிலுள்ள அனைவரது மனநிலையையும் குதூகலிக்கச் செய்கிறது. கோடையில் சற்று மெல்லிய நிறங்களைக் கொண்ட திரைச் சீலைகளையும், படுக்கை விரிப்புகளையும் உபயோகிக்கலாம்.

அதேபோலத் தரையில் குளிர்காலத்தில் விரித்த மேலதிக காப்பெற்றுகளை (கம்பளங்கள்) அகற்றிவிட்டு, தரையில் உள்ள பளிங்குக் கற்கள் அல்லது பலகை போட்ட தரையை நன்றாக மினுக்கி, சொகுசு நாற்காலிகள் உள்ள இடத்தில் 8-5 அல்லது 10-8 கம்பளங்களை விரித்துவிடலாம். அத்துடன், வரவேற்பறையில் தீ அடுப்பு உள்ள திசையை நோக்கியிருந்த இருக்கைகளை வெளிவாசலை நோக்கிப் பார்க்கக்கூடியதாக திருப்பிவிடவேண்டும். மேலும் தீ அடுப்பு உள்ள இடத்தில் சிறிய சாடிகளில் பூங்கன்றுகளை வைக்கலாம். அவை பூத்துக் குலுங்கும். அவற்றிற்கு மின் விளக்கு வெளிச்சம் போட்டால் அவை நன்றாக வளரும். அல்லது அந்த அடுப்பு இருந்த இடத்தை ஒரு கடதாசி அட்டையாலோ றிஜிபோம் அட்டையாலோ மூடி அதன் மேல் அழகான படம்போட்ட தாள்களை ஒட்டியோ அல்லது ஓவியம் வரைந்தோ விடலாம்.

படுக்கை அறை திரை, படுக்கை விரிப்பு, தலையணை உறை, குளியல் அறைத் திரை முதலியவற்றை மாற்றுங்கள். அவை யாவும் மெல்லிய நிறத்திலும் கடும் நிறத்தில் டிசைன் அல்லது பூக்கள் உள்ளடக்கியிருத்தல் வேண்டும். சுவரில் மாட்டியுள்ள படங்களை மாற்றி வேறு படங்களை மாட்டுங்கள். யன்னல்கள், கதவுகளில் உள்ள தடித்த கடும் நிறம் கொண்ட திரைச் சீலையை அகற்றிவிட்டு, மெல்லிய பருத்தி அல்லது "லினன்" துணியில் செய்த மெல்லிய நிறங்கள் கொண்ட திரைச் சீலைகளை மாட்டுங்கள்.
தரையில் விரித்திருக்கும் தடித்த றக் காப்பெற்றுகளை அகற்றிவிட்டு, மெல்லிய கயிற்றுப் பாய், பருத்தி நூலினால் அல்லது எண்ணெய்த் துணியாலான விரிப்புகளை உபயோகிக்க வேண்டும்.

வீட்டுக்கு மைபூசுவது சுலபமான வேலை இல்லை. இதற்கு அனுபவமும் நல்ல ரசிகத் தன்மையும் ஓவியங்களுக்கு வர்ணம் தீட்டுவதுபோன்ற விடயங்களைப் பற்றியும் அறிந்திருக்க வேண்டும். மை தயாரிக்கும் கடைகளில் ஒரே நிறத்தில் பல shadsஇல் வர்ணம் தயாரிக்கிறார்கள். எனவே, உங்களுக்கு எந்த shade பொருத்தமாய் இருக்குமெனப் பரீட்சித்துப் பார்க்க வேண்டும். அதற்கு ஒரு தடித்த அட்டையில் நீங்கள் விரும்பும் வர்ண shadeஐப் பூசி, அது உலர்ந்த பின்னர் நீங்கள் மைபூச உள்ள சுவருக்கு மேல் இந்த வர்ணம் தீட்டப்பட்ட அட்டையை சாய்த்துவைத்து, அது பகல் வெளிச்சத்தில் எப்படி உள்ளது? மின் வெளிச்சத்தில் எப்படி உள்ளது என்று அவதானியுங்கள். அதன்பிறகு நீங்கள் உங்களுக்குப் பிடித்த வர்ணங்களை வீட்டுச் சுவர்களுக்கு வர்ணம் தீட்டலாம். சமையலறை, வரவேற்பறை, படுக்கை அறை, குளியலறை எல்லாம் வெவ்வேறு வர்ணங்களில் இருக்கும். ஆனால், அவை யாவும் ஒன்றோடொன்று இணைந்து போகக்கூடியவையாக இருத்தல் வேண்டும்.

யன்னல்களுக்கு மெல்லிய துணியினால் தைத்த திரைகளை உபயோகிக்கலாம். ஆனால், அவற்றின் நிறமும் கடும் நிறமல்லாமல் ஏதாவது மெல்லிய நிறங்களாய் இருத்தல் நன்று. இல்லையேல் யன்னல்களுக்கு blinds அல்லது shade மறைப்பதற்காக உபயோகிக்கலாம்.

இதேபோல, பூச்சாடிகளில் நட்ட பூமரங்களையும் குறோட்டன் வகைகளையும் வீட்டின் யன்னல்களுக்கு அருகாமையில் அல்லது sun domeக்குக் கீழே வைத்தால் மரங்களுக்கு நன்றாக சூரிய ஒளி கிடைப்பதுடன் மரங்களும் நன்றாக வளர்ந்து பூக்களும் நிறையத் தோன்றும்.

இதைவிட முன்பக்க, பின்பக்க வளவைத் துப்புரவுசெய்து, புற்தரைகளை ஒழுங்கு செய்து, வெளிச் சுவர்களைத் துப்புரவு செய்து, பூச்செடிகளை நட்டு, பாத்திகளைச் செப்பனிட்டு, மரம் செடிகளுக்குத் தேவையான பசளையிட்டு, ஒழுங்காக நீரூற்றிப் பராமரித்தால் பூச்செடிகள், காய்கறிச் செடிகள், பெரியமரங்களான அப்பிள், பியேர்ஸ் போன்றவை பிரமாதமாக வளர்ந்து பூ, காய், பழங்களைத் தரும். கோடையில் இவை பார்ப்பதற்கு அழகாக இருக்கும். அந்த வேளை இவற்றைப் பராமரிப்பதால் எமது உடலும் உள்ளமும் குதூகலமாகவும் நலமாகவும் இருக்கும். மனிதன் இயற்கையின் ஒரு அங்கம். என்னதான் இயற்கையை, அதன் அழகை நாம் எமது சுயநலத்திற்காக அழித்தாலும் இயற்கையான மரம் செடிகளுடன் நாம் ஐக்கியப்படும்போது எம்மை அறியாது எம் உடலும் உள்ளமும் நலம் பெறுகின்றன. பனிக் காலத்தில் நாம் அதிகம் நடப்பதோ வெளிவேலை செய்வதோ இல்லை. எனவே, அவற்றிற்கும் சேர்த்து நாம் கோடை காலத்தில் நிறைய வேலை செய்யவேண்டும். கோடை காலத்தில் எமது நண்பர்கள். உறவினர்கள் வீடுகளுக்கு நாம் அடிக்கடி போக வேண்டியிருக்கும். அதேபோல, அவர்களும் எமது வீட்டிற்கு வரவேண்டியிருக்கும். இப்படியான சந்தர்ப்பங்களில் சொந்த வீட்டில் வசிப்பவர்கள் வீட்டின் பின்புற முன்புற புற்தரையில் தற்காலிக கன்வஸ் பந்தலிட்டு வீட்டுக்குள்ளும் வெளியிலும் விருந்தினர்களை உபசரிக்கலாம்.

கோடை காலத்தில் இயன்றளவு வீட்டுக்கு வெளியே நாம் எமது அன்றாட அலுவல்களை வைத்துக்கொள்ள வேண்டும். ஏனெனில், நாம் விரும்பினாலும் குளிர்காலத்தில் வீட்டிற்குள் எந்த ஒரு நிகழ்ச்சியையும் நிகழ்த்த முடியாது. இயற்கையை அனுபவிக்க, ரசிக்க இது ஒரு சந்தர்ப்பமாகும். இயற்கைக் காற்றைச் சுவாசிக்கவும், வெட்டவெளியில் வெய்யில் எமது உடலில் படக்கூடியதாக நடமாடுவதும், தோட்ட வேலை செய்வதும் குனிந்து நிமிர்ந்து வேலை செய்வதும் உடலையும் உள்ளத்தையும் நலமாக வைத்திருக்க உதவும்.

குளிர் பிரதேசங்களில் வாழ்வோர் குளிர்கால உடை, கோடைகால உடைகள் வைத்திருப்பதுபோல் குளிர் காலத்துக்கும் கோடை காலத்துக்கும் வெவ்வேறு திரைச்சீலைகள், தரை விரிப்புகள், சுவரில் மாட்டும் படங்கள் வைத்திருப்பது சிறந்தது. 'வீட்டைக் கட்டிப்பார்' என்பது முதுமொழி. 'இல்லத்தை அமைத்துப் பார்' என்பது புதுமொழி. இல்லத்தில் அன்புள்ளங்கள் இருக்க வேண்டும். இல்லானிருக்க வேண்டும், இல்லாள் இருக்கவேண்டும், இனிய குழந்தைகள் இருக்கவேண்டும். இனிமையும் அன்பும் பாசமும் உள்ள வீடு ஒரு இனிய இல்லமாகும்.

■ ■ ■



### அமரர் உயர்திரு. இராமநாதர் கந்தையா
### (கந்தையா ஓவசியர்) அவர்களின்
### மரண அறிவித்தல்



நெடுந்தீவு மேற்கைப் பிறப்பிடமாகவும், மல்லாவியில் வசித்தவரும், தற்போது கனடாவில் வசித்து வந்தவருமாகிய இராமநாதர் கந்தையா அவர்கள் 01-04-2008 அன்று இறைவனடி எய்தினார்.

அன்னார் காலம் சென்ற இராமநாதர் தையலம்மை தம்பதிகளின் அன்பு மகனும் நாகமணி, இராமாசிப்பிள்ளை தம்பதிகளின் மருமகனும், பூரணம் அவர்களின் பாசமிகு கணவரும், சங்கரப்பிள்ளை(சுவிஸ்) காலம் சென்றவர்களான காமாட்சி, தெய்வானை, ஆகியோரின் அன்புச் சகோதரனும் பேரானந்தரூபன் (Cake and Party Links), ஆனந்தி (நோர்வே) சுகந்தி, நந்தினி, முகுந்தினி ஆகியோரின் அருமைத் தந்தையும் ஜெயந்தி, மகாராஜா (நோர்வே) குமார்(ராதா) (Double "A" Srevice) சர்வானந்தன் (Cake and Party Links) அச்சுதன் ஆகியோரின் மாமனாரும், தையலம்மை, காமாட்சி காலம் சென்றவர்களான கதிரவேலு, மனோன்மணி, சின்னத்தம்பி, நாகம்மா, கந்தையா, மருதலிங்கம் ஆகியோரின் மைத்துனருமாவார்.

அன்னாரின் பூதவுடல் 4164 Sheppard Ave East (Sheppard/Midland) சந்திப்பிற்கு அருகில் அமைந்துள்ள OGDEN Funeral Homeஇல் April 6ம், 7ம் திகதி ஞாயிறு, திங்கள் இரு தினங்கள் 5மணி முதல் 9மணி வரை பார்வைக்காக வைக்கப்பட்டு மறுநாள் 8ம் திகதி செவ்வாய்கிழமை காலை 8.30 மணி தொடக்கம் 10.30 மணிவரை இறுதிக்கிரிகைகள் நடைபெற்று தகனம் செய்யப்படும்.

மகன் ரூபன் 416-265 6258 OR 647-297-2355, மருமகன் சர்வன் 416-293-5962 OR 416-720-9546, மருமகன் குமார்(ராதா) 905-794-9867 OR 416-836-7014, மருமகன் மகாராஜா (நோர்வே) 4772449506, மருமகன் அச்சுதன் 905-793-2281.



- **ஆயுட்காப்புறுதி**
  சேமிப்புடன் கூடியது, 10, 15 அல்லது 20 வருடங்களில் செலுத்திமுடிக்கலாம்
- **மருத்துவ பரிசோதனையற்ற காப்புறுதி**
  வேறு நிறுவனங்களால் நிராகரிக்கப்படவரும் இணைந்து கொள்ளலாம்.
- **கொடிய நோய்களுக்கான காப்புறுதி**
  2 மில்லியன் வரை காப்புறுதித் தொகையாகப் பெற்றுக் கொள்ளலாம். அல்லது கட்டிய பணம் முழுவதும் திரும்பப் பெறலாம்.
- **குழந்தைகளின் உயர்கல்விக்கான சேமிப்புத் திட்டம்**
  20 வீத அரச மானியத்துடன் எமது நிறுவனத்தால் 15% சலுகையும் வழங்கப்படும்.

## காப்புறுதி உங்களுக்காக

## அல்ல...

## உங்களின்

## அன்புக்குரியவர்களுக்காக..

digi Media Creations

கனடாவின் சிறந்த காப்புறுதி நிறுவனங்களிடமிருந்து உங்கள் வசதிக்கேற்ப குறைந்த செலவில் காப்புறுதி பெற்றுக் கொள்ளவும் மற்றும் காப்புறுதி சம்பந்தமான அனைத்து ஆலோசனைகளுக்கும் அழையுங்கள்

# சிறீதரன் துரைராஜா

காப்புறுதி முகவர் (Insurance Broker)

**416.918.9771**

759 Warden Ave. Toronto, ON M1L 4B5, Bus: 416-759-5453 x: 407



INDUSTRIAL ALLIANCE
INSURANCE AND FINANCIAL SERVICES INC.

LILAND
INSURANCE INC.

RBC Insurance

## உங்களுக்கும், உங்கள் குடும்பத்தினருக்கும் ஓர் பாதுகாப்பு...

# வீட்டுக் கடன் காப்புறுதி



சிறீதரன் துரைராஜா
- ஆயுட் காப்புறுதி முகவர் -

சான்டோர்ஸ் போர்லிங்ரன் ஒன்ராரியோவைச் சேர்ந்தவர். மகள், மனைவி லியோன், மகிழ்ச்சியான குடும்பம். தெளிந்த நீரோடை போல் சென்றுகொண்டிருந்த இவர்களது வாழ்வில் திடீரென பேரிடி விழுந்தது. திடீர் மாரடைப்பில் லியோன் மரணமடைய மனைவியும் மகளும் தனித்துப்போயினர். இருளடைந்த லியோன் சன்டோர்ஸ் இன் வாழ்க்கையில் சிறு ஒரு ஒளிக்கீற்று மட்டும் எஞ்சியிருந்தது. லியோன் சன்டோர்ஸ் உம் அவரது கணவரும் சிறிது காலத்திற்கு முன்பு வீடொன்றை வாங்கி இருந்தனர். அதற்கான வீட்டுக் கடனுக்காக TD CANADA TRUST வங்கிக்கு சென்றிருந்து போது வங்கி ஊழியர் வீட்டுக் கடனுக்கான காப்புறுதி பெறும்படி கேட்டுக்கொண்டார். அவர்களின் வீட்டுக் கடன் தொகையான $229,000 டொலர்களுக்கும் காப்புறுதி வழங் கப்பட்டிருந்தது.

உங்களில் எவருக்காவது மரணம் அல்லது கடுமையான நோய்கள் ஏற்பட்டால் காப்பு றுதி உங்களின் வீட்டுக் கடன் முழுவதை யும் பாதுகாக்கும் என வங்கி ஊழியர் குறிப்பிட்டிருந்தார். லியோனும் அவரது கணவரும் மிக மனத் திருப்தியுடன் அந்தக் காப்புறுதிக்கு ஒப்புக்கொண்டு கையொப்ப- மிட்டார்கள். இந்த வீட்டுக் கடன் காப்புறுதி யானது தங்கள் எதிர்கால வாழ்க்கைக்கு சிறிய அடித்தளமாக அமையுமென லியோன் நம்பியிருந்தார். சில நாட்களின் பின்பு அவ ருக்கு வந்த கடிதம் உங்கள் வீட்டுக்கடன் காப்புறுதி நிராகரிக்கப்பட்டுள்ளது என்று தெரிவித்தது. நிராகரிக்கப்பட்டதற்கான கார- ணம் காப்புறுதிக்கான விண்ணப்பத்தை பூர்த்தி செய்த போது தகவல்களை சரியாக கொடுக்கவில்லை என்பதே.

அதனால் எங்களுக்கு கட்டிய பணம் மட்டு- மே திரும்பக் கிடைத்தது. அதிர்ச்சியும் மன வேதனையும் அடைந்த இந்தப் பெண்மணி யுடன் CBC தொலைக்காட்சி நிறுவனம் தொடர்பு கொண்டு நடந்த சம்பவங்களை அறிந்துகொண்டது.

அண்மைக்காலத்தில் CBC தொலைக்- காட்சியும் CBC MARKET PLACE எனப்ப டும் உண்மைச் சம்பவங்களின் தொகுப்பு நிகழ்ச்சியின் வீட்டுக்கடன் காப்புறுதி சம்பந் தமாக இரண்டு ONTARIO மாகாணத்தை சேர்ந்த குடும்பங்களுக்கு ஏற்பட்ட அனுப வத்தை தொகுத்து வழங்கியது. அந்தத் தொலைக்காட்சி நிகழ்ச்சியின் தொகுப்பை சுருக்கமான பகுதியை கட்டுரை வடிவில் இங்கு குறிப்பிடுகிறோம்.

Burlington Ontarioவில் வசிக்கும் ஒரு குடும்பத்தினரையும் Chatham Ontario வில் வசிக்கும் இன்னுமொரு குடும்பத்தி- னரையும் CBC தொலைக்காட்சி நிறுவனத் தினர் நேரில் சந்தித்து அவர்களுக்கு காப்பு றுதியால் ஏற்பட்ட பாதிப்புக்கள் பற்றி அறிந்து கொண்டனர். Chatham Ontario வில் வசிக்கும் சாமைமன் (Shamain) என்பவரும் அவரது கணவரும் அவர்களின் வீட்டுக்கு 129,000 டொலர் கடனுக்கு வீட்டுக்கடன் பெற்றிருந்தார்கள். அதற்கான வீட்டுக்கடன் காப்புறுதியை வங்கி மூலம் செய்திருந்தனர். அவர்களது இந்த வீட்டுக் கடன் காப்புறுதி அவர்களின் ஒருவருக்கு மரணம் அல்லது கடுமையான நோய்கள் ஏற்பட்டால் அவர்களின் கடன் தொகை கட்டவேண்டியதில்லை. 13 மாதங்களின் பின்பு சாமைனின் கணவருக்கு புற்றுநோய் ஏற்பட்டு வேலை செய்ய முடியாத நிலை ஏற்பட்டது. அவர்கள் அந்த வங்கியுடன் தொடர்புகொண்டு காப்புறுதியை மீளப் பெறுவதற்காக மனுச் செய்தார்கள். அவர்க ளின் காப்புறுதி நிராகரிக்கப்பட்டது. அதற் கான காரணம் அவர் காப்புறுதிக்கு விண்- ணப்பிக்கும் போது அவர்களின் மருத்துவ கேள்விகளுக்கு தவறாக பதில் கூறப்பட்- டமை என்பதாகும்.

CBC நிறுவனம் காப்புறுதி நிராகரிக்கப்பட்- டதற்கான காரணத்தை அறிவதற்கு TD Canada Trust வங்கியுடன் தொடர்புகொண்ட போது அவர்கள் அதுபற்றி பேச மறுத்து விட்டனர். பின்பு அந்த வங்கியில் பணிபுரிந்த ஊழியர் ஒருவருடன் தொடர்பு கொண்டு வங்கியில் விற்பனை செய்யப்படும் வீட்டுக் கடன் காப்புறுதி பற்றி கேட்ட போது அவர் கூறிய பதில் அவர்களுக்கு காப்புறுதி எப்படி விற்பனை செய்வது பற்றி மட்டுமே பயிற்சி யளிக்கப்பட்டுள்ளது என்றும் அந்தக் காப்பு- றுதி திட்டங்கள் பற்றிய தகவல்கள் எதுவும் தெரியாது என்றும் கூறினார். ஆனால் அவர்கள் அந்தக் காப்புறுதியை விற்பனை செய்வதற்கான யுத்திகள் சொல்லப்பட்டி- ருந்தது. அதாவது ஒருவருடன் வாங்கியில் காப்புறுதி வாங்கி மறுத்தால் அதற்கும் அவர்கள் கையொப்பம் இடவேண்டும். அப்போது வங்கி ஊழியர்கள் பாவிக்கும் வியாபார தந்திரம் என்னவென்றால், இங்கு கையொப்பமிடுவதன் மூலம் நீங்கள் காப்பு றுதி தேவையில்லை என்பதை ஒப்புக்கொள் கிறீர்கள். இதன் பின்பு உங்களுக்கு மரணம் அல்லது புற்றுநோய், மாரடைப்பு போன்ற கடுமையான நோய்கள் ஏதும் ஏற்பட்டால் உங்கள் வீட்டுக் கடனுக்கு எதுவித பாது- காப்பும் இல்லை என்று கூறுவதன் மூலம் பலரும் வங்கியில் காப்புறுதி வாங்குவதா- கச் குறிப்பிட்டார்.

> “உங்கள் விண்ணப்பத்தில் நீங்கள் பூர்த்தி செய்த தகவல்கள் இதற்கு மாறாக இருந்தால் உங்கள் காப்புறுதிப் பணம் நிராகரிக்கப்பட்டு, கட்டிய பணம் மட்டுமே திரும்பக் கிடைக்கும். நீங்கள் வங்கியில் அடமானமாக காப்புறுதி பெறும்போது வழங்கப்படும் காப்புறுதி ஒப்பந்தமானது நீங்கள் மாதாந்தம் பணம் செலுத்துவதற்கு ஒப்புக்கொள்ளும் ஒப்பந்தம் மட்டுமே தவிர. உங்களுக்கு பணம் கிடைக்குமா இல்லையா என்பது உங்களுக்கு மரணம் எற்பட்ட பின்புதான் தீர்மானிக்கப்படுகின்றது.”

வங்கியில் காப்புறுதிக்காக பூர்த்திசெய்யப் படும் விண்ணப்பப்படிவத்தில் உள்ள கேள்- விகள் மிகவும் சிக்கலானவை. இதிலுள்ள கேள்விகளுக்கு தவறான பதில்கள் பூர்த்தி செய்தால் இவை சரியான பதில்களா? அல்லது தவறானதா? என்பதை அவர்கள் மறுபரிசீலனை செய்வதில்லை. விண்ணப்- பத்திலுள்ள ஆம், இல்லை என்ற கேள்வி களுக்கு நீங்கள் இல்லை என்று பதில் பூர்த்தி செய்யப்பட்டதும் அவர்கள் உங்க- ளுக்கு காப்புறுதி அங்கீகரிக்கப்பட்டு அதற்- கான மாதாந்தக் கட்டணம் வசூலிக்கப்- படும். ஆனால் உங்களுக்கு மரணமேற் பட்டு அல்லது கடுமையான நோய் ஏற்பட்டு நீங்கள் காப்புறுதி பணத்தைப் பெறுவதற்கு மனுச் செய்தவுடன் அதன் பின்புதான் நீங்கள் காப்புறுதி பெற்றுக்கொள்ள தகுதியுடை யவரா என்பதை பரிசீலனை செய்வார்கள். இதனை POST CLAIM UNDERWRITING என அழைப்பார்கள்.

ஒருவர் காப்புறுதி பெறத் தகுதியுள்ளவரா என்பதை அறிவதற்கு காப்புறுதி நிறுவனங் கள் செய்யும் பரிசோதனைகள் பல உள்ளன.

காப்புறுதி நிறுவனங்களால் செய்யப்படும் இந்த மருத்துவ பரிசோதனைகளுக்கு அதி கப் பணச் செலவு ஏற்படுவதால் வங்கியில் வழங்கப்படும் காப்புறுதிக்கு அவர்கள் மருத்துவ பரிசோதனைகள் செய்வதில்லை. அதனால் அந்தக் காப்புறுதித்திட்டம் பெறும் போது விண்ணப்பப் படிவம் பூர்த்தி செய்வது மட்டுமே. பின்பு மரணம் ஏற்பட்- டவுடன் நீங்கள் விண்ணபிக்கும்போது காப்புறுதி பெறுவதற்கு தகுதியானவரா என்- பதை பரிசோதனை செய்வார்கள். அதற்கு உங்கள் குடும்ப மருத்துவர் மற்றும் (Health Canada) போன்ற இடங்களில் இருந்து தகவல்களை பெற்றுக் கொள்வார்- கள். உங்கள் விண்ணப்பத்தில் நீங்கள் பூர்த்தி செய்த தகவல்கள் இதற்கு மாறாக இருந்தால் உங்கள் காப்புறுதிப் பணம் நிராகரிக்கப்பட்டு, கட்டிய பணம் மட்டுமே திரும்பக் கிடைக்கும் என்பன நீங்கள் வங்கியில் அடமானமாக காப்புறுதி பெறும் போது வழங்கப்படும் காப்புறுதி ஒப்பந்தமா- னது நீங்கள் மாதாந்தம் பணம் செலுத்து வதற்கு ஒப்புக்கொள்ளும் ஒப்பந்தம் மட்டுமே. உங்களுக்கு பணம் கிடைக்குமா இல்லையா என்பது உங்களுக்கு மரணம் எற்பட்ட பின்புதான் தீர்மானிக்கப்படுகின்றது.

மாறாக நீங்கள் ஒரு காப்புறுதி விற்ப தற்கான அனுமதிப்பெற்ற (Licensed broker) முகவரிடம் இருந்து காப்புறுதி பெறும் போது உங்களுக்கு காப்புறுதிப் பணம் கிடைக்குமா இல்லையா என்பது காப்புறு திக்கு விண்ணபிக்கும்போதே தீர்மானிக்கப் படும். இதனால் உங்களுக்கு மரணம் அல்லது கடுமையான நோய் ஏற்பட்டதும் காப்புறுதிப் பணம் மீளப் பெறுவதில் ஒரு சிரமமும் இருக்காது.

உதாரணமாக வங்கியில் வழங்கப்படும் காப்புறுதிக்கான விண்ணப்பத்தில் உள்ள மருத்துவக் கேள்விகள் சாதாரண மக்க ளுக்கு இலகுவாக விளங்கிக்கொள்ள முடி யாதவாறு தயாரிக்கப்பட்டுள்ளன. இப்படி யான கேள்விகளுக்கு பதில் கொடுப்பதற்கு மருத்துவரின் உதவியை நாடுவது அவசிய மாகும்.

## காப்புறுதி விண்ணப்பத்தில் உள்ள சில கேள்விகள்

கடந்த இரண்டு வருடத்தில் நீங்கள் எப்போ தாவது உங்கள் இரத்த அழுத்தத்தைப் பரிசோதனை செய்தீர்களா என்பது இதற்கு இல்லை என்று பதில் சொன்னால் அது தவறாகக் கூடும். காரணம் நீங்கள் உங்கள் குடும்ப வைத்தியரிடம் போகும் போது எப்போதாவது உங்கள் இரத்த அழுத்தம் பரிசோதிக்கப்பட்டிருக்கலாம். உங்களுக்கு எந்த நோய்களும் இல்லாவிட்டாலும் அதற்- கான பரிசோதனை செய்யப்பட்டிருந்தால் நீங்கள் ஆம் என்று பதில் சொல்ல வேண்-

67ம் பக்கம் பார்க்க...

# MICHAEL MOOREன் அமெரிக்கா



- ரதன் -

9-11 என்றவுடன் நினைவுக்கு வருவது உலக கோபுரத்துடன் மைக்கல் மூரையுமே. இவர் ஓர் விவரணத் திரைப்பட விற்பன்னர் மாத்திரமல்ல, புரட்சியாளரும்கூட. 9-11 போரில் பாதிக்கப்பட்டவர்களை கியுபாவிற்கு அழைத்துச் சென்று இலவச மருத்துவ சிகிச்சை அளித்துள்ளார். இவரது சீக்கோ படத்தில் அமெரிக்க சுகாதாரத் திட்டங்களின் இயலாமையை பதிவு செய்துள்ளார்.

Film - Roger & Me (1989)
Canadian Bacon (1995)
Bowling for Colombine (2002)
TV The Afula Truth (1999)
TV Nation (1994-1995)
Books Downsize This (1997)
Stupid White Men (2002)
Dude, Where's Mu Country (2003)

மைக்கல் மூர் அமெரிக்க மிச்சிக்கன் மாநில தொழில் நகரமான Flintஇல் பிறந்து வளர்ந்தவர். இவர் தனது முதலாவது படமான Roger and Meஐ வெளிக்கொணர்ந்தபொழுது இவர் கிழமைக்கு 99 அமெரிக்க டொலர்களை சம்பளமாகப் பெற்றுக் கொண்டிருந்தார். உலகில் இவருக்கு நிகராக மிகச் சிறப்பாக விவரணத் திரைப்படங்களை எவரும் எடுக்கவில்லை எனக் கூறுமளவிற்கு இவரது படைப்புலகம் அமைந்துள்ளது.

## விவரணத் திரைப்படமும் அதன் கூறுகளும்

இது ஒரு புனைகதையற்ற திரைவடிவம். இதன் வரையறைகள்

- எல்லைகளற்றது
- மக்கள், இடம், சம்பவங்கள் ஆகியன கற்பனையற்ற உண்மையானவை.
- சம்பவங்கள் நடைபெறும்பொழுது அங்கேயே படம் பிடிக்கப்படுகின்றன. இச்சம்பவங்கள் ஆதாரத்துடன் சமர்ப்பிக்கப்படுகின்றன. பொதுவாக நெறியாளர்கள் தங்கள் கற்பனைகளையோ மன ஓட்டத்தையோ இதில் வகிக்க முடியாது.
- இங்கும் உரைஞர் இருப்பதால் இவை பிரச்சாரப் படங்களாகவும் பல சமயங்களில் உள்ளன.

இவரது விவரணத் திரைப்படங்கள் reflexive விவரணத் திரைப்படங்களாகும். (செயல் மீதே தாக்குதல்) இவ்வகைப் படைப்புகளை Bertolt Brecht, Jean-Luc Godard போன்றவர்கள் படைத்துள்ளனர். இது இடதுசாரி திரைப்படப் படைப்பாளிகளிடம் மிகவும் பிரசித்தமானது. இவை சமூகத்தின் சமூக அரசியல் உண்மைகளை சனநாயக முதலாளித்துவ அமைப்பில் வெளிக் கொணர பெரிதும் உதவி புரிகின்றன. மைக்கல் மூர் செல்வாக்குச் செலுத்துகின்ற அரசியல் கோட்பாடுகளையும் சமூக அரசியல் பிரச்சாரங்களையும் தமது பார்வையாளர்கள் நுகர்வதைத் தடுக்கிறார்.

இவை மிகவும் அவதானத்துடன் கையாளப்படுகின்றன. ஓர் புலனாய்வுப் பத்திரிகையாளர்போல் நீண்ட ஆய்வுகளை மேற்கொள்கிறார். இது அமெரிக்காவின் கற்பனைவாத மேலெழுந்தவாரியான தொடர்பூடகங்களால் உள்வாங்கப்பட்ட விடயங்களின் மறுபக்கத்தை நுகர்வோர்மீது முன்வைக்க உதவுகின்றது.

வழமையான விவரணப் படங்களில் உரைஞர்கள் கூறுவதை இவர் தவிர்க்கின்றார். மாறாக தமது படங்களில் உண்மைச் சம்பவங்களை நேரடியாகக் காட்டுகின்றார். உதாரணத்துக்கு ஃபரனைற் 9/11 என்ற படத்தில் அமெரிக்க செனட்டரை நேரடியாகவே 'உமது மகன் அமெரிக்க இராணுவத்தில் உள்ளாரா?' எனக் கேட்கின்றார். அதேபோல் இராணுவத்தில் சேர்வதற்கான விண்ணப்பப் படிவங்களுடன் செனட் வாசலில் நிற்கின்றார். KM artக்கு முன்னால் நின்று Columbine துப்பாக்கி சம்பவத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கான போராட்டத்தில் ஈடுபடுகின்றார்.

இவரது படங்களில் ஒரு நடிகராக இவரும் இருப்பது என்பது பார்வையாளர்களுக்கும் இவருக்கும் இடையில் ஒரு நெருக்கத்தைக் கொடுக்கின்றது. இதனால்தான் இவரது படங்கள் வரத்தகரீதியிலான படங்களைப் போல் சாதனை படைத்துள்ளன. ஃபரனைற் 9/11 113 மில்லியன் அமெரிக்க டொலர்களை வசூலித்தது. திரைப்பட சரித்திரத்தில் Box Officeஇல் முதல் வாரம் முதலாவது இடத்தைப் பெற்ற முதல் விவரணத் திரைப் படம் இதுவே.

இவர் மத்திய, தொழிலாளர் வர்க்கத்தினருள் ஒருவராக தன்னைக் காட்டிக் கொண்டுள்ளார். இவரது படங்கள் பெரும்பாலும், பெரும் அரசியல் வர்த்தக பிரமுகர்களை நேரடியாக அவர்கள் மூலமாகவே அவர்களை விமர்சிக்க வைக்கின்றது. இவர் ஒருவரே கம்பெனி அமைப்புகளையும் அரசியலையும் விமர்சிப்பவர். Roger & Me நேரடியாகவே கம்பெனி அமைப்புகளை விமர்சிக்கின்றது. ஆனால் பாதிக்கப்பட்ட தொழிலாளிகளுக்கு அரசு என்ன செய்தது என்ற கேள்வி பலமாகவே எழுப்பப்படுகின்றது. இவ்விரு சமூகங்களுக்கான தொடர்புகளை இவர் பின்வருமாறு விளக்குகின்றார்:

DIAGRAM FORMAT - have to see இந்த வடிவத்தை தனது ஃபரனைற் 9/11இல் முன் வைக்கின்றார். இவர் நேரடியாக மார்க்சியக் கருத்துக்களை முன்வைக்காமல் அரசியல் பிரச்சினைகளை அதன் உண்மைகளுடன் மக்கள் முன் சமர்ப்பிக்கின்றார்.

பாதிக்கப்பட்டுள்ள மக்கள் சமூகத்தை உண்மையை நோக்கிச் செல்லத் தூண்டுகின்றார்.

முதலாளித்துவத்தின் தோல்வியையும் தொடர்பு சாதனங்களின் போலித்தன்மையையும் இவர் உடைக்கின்றார்.

போர் என்பது உண்மையான போரா என்ற கேள்வி ஒரு புறம். மறுபுறம் வெற்றிக்கான போரா என்பதுதான் முக்கியம். ஆளும் கட்சியினரால் தமது சொந்த நலன்களுக்காக நடத்தப்படுபவையே போர். எனவே போர் தொடரவேண்டும். பட்டினிக்கான தேடலில் மக்கள் இருக்க வேண்டும். எனவே தொடருதலே போர்.

கடந்த பல தசாப்தங்களில் முடிவுக்கு வந்த போர்கள் வெகு குறைவே. பாலஸ்தீனம், காஷ்மீர், இலங்கை, வளைகுடா யுத்தங்கள், இடதுசாரிகளுக்கு எதிரான யுத்தம். ஃபரனைற் 9/11இல் மைக்கல் மூர் முன்வைப்பது இதுவே. மக்களிடம் ஒரு பயத்தை ஏற்படுத்தி அதன்மூலம் ஒரு போரைத் தொடர்ச்சியாக வைத்திருப்பதுவே அரசின் கவனமாக உள்ளது.

இவர் தனது படங்களில் மூன்று படிகளில் விமர்சனங்களை வைக்கின்றார்.

- உண்மைகளைக் கூறுதல்
- அதற்கான காரணங்களைக் கூறுதல்



- எங்கிருந்து வருகின்றது என்ற தொடர்புகளை வெளிப்படுத்துகின்றார்.

இவரது நான்கு படங்களிலும் (Farenheit 9/11, Canadian Bacon, Roger & Me, Bowling of Colombine) இவ்வாறான வடிவத்தைக் கையாண்டுள்ளார். ஃபரனைற் 9/11 படத்திற்கு பதிலளித்த Condoleezza Rice: 9 11க்கும், ஈராக்கும் தொடர்பு உண்டு. இதில் சதாம் நேரடியாக சம்பந்தப்படவில்லை. இது கருத்தியல் ரீதியாக அமெரிக்காவுக்கு எதிராக எழுந்துள்ள வெறுப்பே இந்த 9 11.

இது மைக்கல் மூரின் திரைப்பட வடிவத்துக்கு கிடைத்த வெற்றி. இப் படத்தை ரெக்ஸாஸ் மாநிலத்தின் விசேட காட்சி ஒன்றில் ஜோர்ஜ் புஷ் கலந்துகொள்ள ஏற்பாடாகி இருந்தது. அமெரிக்க அதிபர் மறுத்து விட்டார்.

இப்படத்தை தயாரித்த Miramax (Disney இன் துணை நிறுவனம்) இப்படத்தைத் திரையிட மறுத்துவிட்டது. பின்னர் Miramax நிறுவன அதிகாரிகள் இருவர் தமது சொந்த நிறுவனத்தின் பெயரில் விநியோகித்தனர்.

Disney நிறுவனம் அமைந்துள்ள ஃப்ளோரிடா மாநில கவர்னர் புஷ்இன் சகோதரர். எனவே வரிச் சலுகைகளை எதிர்பார்க்க முடியாது என்பதே Disneyஇன் கவலை.

இவரது நூலையும் அமெரிக்க ஊடகங்கள் மதிப்பீடு செய்ய மறுத்துவிட்டன. ஆனாலும் பல இலட்சம் நூல்கள் விற்பனையாகிவிட்டன. இதனைப் பதிப்பித்த நிறுவனம், மீள் பதிப்பின்போது பல சட்டங்களைப் பிறப்பித்தது. நூலின் 50வீதமானது திருத்தி எழுதப் படவேண்டும், stupid white men என்ற தலைப்பு மாற்றப்பட வேண்டும். அத்துடன் ஏற்கனவே பதிப்பிக்கப்பட்ட பிரதிகளுக்காக 100,000 அமெரிக்க டொலர்கள் வழங்க வேண்டும் போன்றன இவரது பலத்திற்கான உதாரணங்கள்

மூர் தமக்குக் கிடைத்த சந்தர்ப்பங்களை சரியாகவே பயன்படுத்தியுள்ளார். சிறந்த விவரணப் படத்திற்கான ஒஸ்கார் விருதைப் பெற்ற பொழுது "நாங்கள் பொய் சார்ந்த காலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். பொய்யான தேர்தல் முடிவுகள், பொய்யாகத் தேர்வுசெய்யப்பட்ட அதிபர், பொய்யான காரணங்களுக்காக மனிதர்களைப் போருக்கு அனுப்புகின்றோம். Shame on you Mr.Bush Shame on you" எனக் கூறிவிட்டே மேடையை விட்டிறங்கினார். இதன் பின் நடைபெற்ற ஊடக மாநாட்டின்போது "நான் ஓர் அமெரிக்கன்" எனக் கூறியபொழுது "அவ்வளவு தானா?" என ஓர் பத்திரிகையாளர் கேட்டார். அதற்கு மூர் "அதுவே அதிகம்" எனப் பதிலளித்துவிட்டு "நான் எனது நாட்டை நேசிக்கிறேன். ஜனநாயகத்தை நேசிக்கிறேன்" எனக் கூறினார். இவரது இந்தப் போர்க் குணாம்சத்தை வேறு படைப்பாளிகளிடம் காண முடியாது. அவர் கூறும் ஜனநாயகம் என்ற வார்த்தை இவர் பிரயோகிக்கும் ஓர் அம்பு.

இவரது படங்களில் உலகமயமாதல், நிறவாதம் போன்றவை விமர்சிக்கப்படுகின்றன. துப்பாக்கிக் கலாச்சாரத்தில் வெள்ளையர்களின் பங்கை தகுந்த ஆதாரங்களுடன் காட்டியுள்ளார். அதேபோல் ஃபரனைற் 9/11இல் சம்பவத்தின் அமெரிக்க அரசின் பங்கையும் வெளிப்படுத்தியுள்ளார்.

ஓர் தொழிலாளியின் மகனாகப் பிறந்து தொழிலாளர்கள் மத்தியதர வர்க்க மக்களின் பிரச்சினைகளை நகைச்சுவையுடன் அரசியல் பிரச்சாரமற்ற தன்மையுடன் வெளிப்படுத்தியுள்ளார்.

## Roger & Me

இப்படத்தைப்பற்றிப் பார்ப்பதற்கு முன்பு பின்வரும் விடயங்களைப் பார்ப்பது நல்லது.

Roger Smith - 1981-1990வரை அமெரிக்க மோட்டார் கார் நிறுவனமான General Motors என்ற மிகப் பெரிய நிறுவனத்தின் அதிபராக 1981-1990வரை கடமையாற்றினார். இவர் ஆரம்பகாலங்களில் அமெரிக்க கடற் படையில் பணி புரிந்துள்ளார். இவரது காலத்தில் இவர் கொரிய, யப்பானிய நிறுவனங்களுடன் இணைந்து கார் உற்பத்தியில் ஈடுபட்டார். இவர் தொழிலாளிகளை வேலை நீக்கம் செய்து அதன் பேறாக அதிக லாபத்

70ம் பக்கம் பார்க்க...

# வீடு வாங்கவும், விற்கவும்...

### Kipling & Dundas


**$189,900**
1 Bedroom, 1 Washroom
Absolutely Gorgeous W/ The Most Incredible View! Hardwood Flooring.

### Gore/Ebeneezer


**$59,900**
Grocery Store for Sale
The Best Location
More than 2 years Running Business
Call us for more info...
*Be Your Own Boss*

### Bovaird/Kennedy


**$349,900**
3+1 Bedrooms, 3 Washrooms
This Home Screams Pride Of Ownership. Close To All Amenities, Georgous Deck Professionally Finshed With Hot And Cold Running Water. Recent Renovations Include,Roof,Floors

### Aurora


**$349,900**
3 Bedrooms, 3 Washrooms
Stunning Family Home In The Popular Aurora Grove Neighbourhood, Back Onto The Park, New Kitchen Canbinets And Counter Tops, Stained Oak Stairs, Hardwood Floors, Next To School.

### Kingston/Galloway


**$179,900**
3+1 Bedrooms, 2 Washrooms
Walk To Ttc, Go Train, U Of T, Centennial College, Schools, Banks, Shopping, Churches, Doctors. Well Maintained Condo Townhouse With Finished Basement On A Quiet Street.

### Brampton


**$279,900**
3 Bedrooms, 3 Washrooms
Gorgeous Semi. Open Concept, Extremely Bright, light Hardwood Floor in Living and Dining Room. Large Oak Kitchen, Breakfast Area with w/o to Yard. Master with Full Ensiute, Family Oriented Neighbourhood

### Weston/Rutherford


**$589,900**
3+2 Bedrooms, 4 Washrooms
Great Value! Upgraded Kitchen. Big Rooms. Prof. Fin. Bsmt. With Separate Ent. Extensive Landscape & Stone Walkways. Fenced Backyard With Stone Stove/Bbq. Garden Shed. Upgraded Garage With Stucco

### Mccowan/Kingston


**$329,900**
3+1 Bedrooms, 3 Washrooms
50' Lot Frontage, Driveway Parks 4 Cars, Oversized Single Car Garage, Separate Entrance, Separate Laundry Area, Close To Lake, Bluffs, R.H. King Academy, Go Train And Shopping

### Birchmount/Lawrence


**$379,900**
3+2 Bedrooms, 2 Washrooms
New Roof,Newer Windows,New Furnace,,Hot Water Tank Owned, Hardwood Floors,Ceramic Tiles,,Close To Schools,Ttc,Park,Private Backyard,Updated Kitchen.

### Westney/Rossland
PHOTO NOT AVAILABLE

**$274,900**
3 Bedrooms, 3 Washrooms
Semi-Detached In North Ajax. Premium Lot With A Finished Walkout Basement To A Fully Fenced Yard. W/O From Breakfast Area To Deck Which Overlooks Fenced Yard. Basement Recently Finished With Pot Lights, Oversized Windows With A Glass Sliding Door.

### Aurora



**$149,000**
Convenience Store for Sale
Good Location, Well Established Business, It Has Been There For Years, A Good Family Business With High Income Return. Average Sales $17,000/Week & Lotto Commision Atm Machiene, Phone Card, Coffee And Much More.

### Mavis/Matheson


**$349,900**
3 Bedrooms, 4 Washrooms
1732 Sq Ft As Per Builder's Plan New Never Occupied, Finished Walk-Out Basement Family Room



**RAJ Ariyanayagam Pathmarajah**
Real Estate Broker
Cell: 416-930-4663

**Kirew Kanagasabai**
Real Estate Broker
Cell: 416-903-4663



HOMELIFE
HIGHER STANDARDS

**HomeLife Today Realty Inc., Brokerage***
Independently Owned And Operated

31 Progress Avenue, Suite 210
Toronto, ON M1P 4S6
Office: 416-298-3200







**இம்மாதப் புகைப்படக் கலைஞர்**
**கந்தசாமி கெங்காதரன்**
ரொறன்ரோவில் வசிக்கும் வானொலிக் கலைஞராகிய இவர் ஆக்கங்கள் எழுதுவதுடன் புகைப்படத்துறையிலும் ஆர்வம்காட்டி வருகின்றார்.

**உங்களிடம் (நீங்கள் எடுத்த) அழகான புகைப்படங்கள் இருக்கின்றனவா? அவற்றை நாங்கள் பிரசுரிக்க விரும்புகிறோம்.**
புகைப்படம் எடுத்தவரின் பெயர், விலாசம், தொலைபேசி இலக்கம், மின்னஞ்சல், புகைப்படம், எடுக்கப்பட்ட காட்சி அல்லது எடுக்கப்பட்டவருடைய விபரங்கள் என்பவற்றுடன் நீங்கள் எடுத்த புகைப்படத்தையும் அனுப்பிவையுங்கள். அவை இந்தப் பகுதியில் பிரசுரமாகும்.